# இராசேந்திர சோழனின்
# திருவாலங்காட்டுச் செப்பேடுகள்

சரித்திரச் செம்மல்

**ச. கிருஷ்ணமூர்த்தி**




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**

இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்

தரமணி, சென்னை - 600 113

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு
(சொற்பொழிவு வரிசை எண் 26) நாள் 14.2.2014
நிறுவியவர்: டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்

---

## நூல்விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | இராசேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் |
| ஆசிரியர் | : | திரு. ச. கிருஷ்ணமூர்த்தி எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ. (வர.) பி.எட்., பட்டயம் (கல்வெட்.) தொல்லியல் அலுவலர் (பணி நிறைவு) தொல்லியல் துறை, தமிழ்நாடு அரசு 43/20, கலாசேத்ரா சாலை, திருவான்மியூர், சென்னை - 600 041. |
| பொதுப் பதிப்பாசிரியர் | : | முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில்., பி.எட்., பிஎச்.டி. இயக்குநர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இரண்டாம் முதன்மைச் சாலை மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம் தரமணி, சென்னை 600 113 தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 765 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 8+168 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 80/- (ரூபாய் எண்பது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா அச்சகம் 144, தம்புத் தெரு சென்னை 600 001 |
| பொருள் | : | செப்பேடுகள் |


---

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

தமிழக வரலாற்றில் முதன்முதலாக வெளியிடப்பெற்ற தமிழ்ச் செப்பேடு பள்ளங்கோயில் செப்பேடாகும். இதை வெளியிட்டவன் பல்லவ மன்னனாகிய சிம்மவர்மன். இவன் கி.பி.ஆறாம் நூற்றாண்டினன். இச்செப்பேடு கிரந்தத்திலும் தமிழிலும் எழுதப் பெற்றுள்ளது. இதைத் தொடர்ந்து பல்லவ மன்னர்களும் அவர்கள் காலக்கட்டத்துப் பாண்டியப் பேரரசர்களும் ஆய்வேளிரும் இருமொழிகளால் அமைந்த செப்பேடுகளை வெளியிட்டனர்.

ஆயினும் இப்பாண்டியப் பேரரசர்களின் காலத்தில் வெளியிடப்பட்ட வேள்விக்குடி செப்பேட்டில் சங்ககாலப் பாண்டிய மன்னனாகிய முதுகுடுமிப் பெருவழுதி கொற்கைக் கிழான் என்ற அந்தணனுக்குத் தானமாக வழங்கியவேள்விக்குடி என்ற ஊரைக் களப்பிரர் அரசர்கள் பறிமுதல் செய்தனர்; இந்த அந்தணன் மரபில் பல தலைமுறைகளுக்குப் பிற்காலத்தில் வந்த ஒருவன் கி.பி. 8ஆம் நூற்றாண்டினான பாண்டியன் பராந்தக நெடுஞ்சடையனிடம் முறையிட்டு அந்த ஊரைத் திரும்பப் பெற்றான். இவன் அரசனிடம் காட்டிய ஆவணம் செப்பேடாக இருக்க வேண்டும். இதன்மூலம் சங்ககால அரசர்கள் செப்பேடுகள் வெளியிட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

பிற்காலச் சோழர்களில், முதலாம் பராந்தக சோழன் காலம் தொடங்கி (கி.பி. 10ஆம் நூற்றாண்டின் தொடக்கம்) ஏறத்தாழ இருபது செப்பேடுகளைச் சோழமன்னர்கள் வெளியிட்டுள்ளனர். இம்மன்னர்களுள் முதலாம் இராசராச சோழன் பலவகையிலும் சிறப்புக்குரியவன். இவனுடைய மகன் முதலாம் இராசேந்திர சோழன் கங்கை கொண்ட சோழன் என்றும் கடாரம் கொண்டவன் என்றும் பண்டித சோழன் என்றும் இன்னும் பலவாறாகவும் சிறப்புப் பெற்றவன். இவனே சோழர்களில் மிகுதியான செப்பேடுகளை வெளியிட்ட பெருமைக்குரியவன். இச்சோழ மன்னன் வெளியிட்ட முக்கியச் செப்பேடுகளாவன: 1. திருவாலங்காட்டுச் செப்பேடுகள், 2. எசாலம் செப்பேடுகள், 3. கரந்தைச் செப்பேடுகள், 4. ஆனைமங்கலம் செப்பேடுகள் (இதை வெளியிட இராசராசன் ஆணையிட்டாலும் வெளியிட்டவன் இராசேந்திரன் சோழன்)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஏற்கெனவே எசாலம் செப்பேடுகளை இந்த நூலாசிரியரான சரித்திரச் செம்மல் ச. கிருஷ்ணமூர்த்தி அவர்களைக் கொண்டு தமிழ்ப்படுத்தி 2011ஆம்

ஆண்டில் டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளையின் சார்பில் வெளியிட்டது. இப்போது அச்சோழ மன்னன் வெளியிட்ட திருவாலங்காட்டுச் செப்பேடுகளை வடமொழியிலிருந்து தமிழ்ப் படுத்தியும், தமிழ் மூலத்தை விரிவாக ஆய்ந்தும், குறிப்புரை நல்கியும், சொல்லகராதியை அணியப்படுத்தியும், செப்பேட்டு இதழ்களின் படங்களை முழுமையாக இணைத்தும் சிறப்பான வரலாற்றாய்வை இந்நூலாசிரியர் இந்நூலில் தந்துள்ளார். இத்தகு சீரிய தமிழ்ப் பணியைப் பாராட்டுகிறோம். இந்த நூலும் டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவு நூலாக இந்நிறுவனத்தில் வெளியிடப்படுகிறது.

சரித்திரச் செம்மல் ச. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பல நூல்களின் ஆசிரியர். தமிழ்நாடு அரசின் தொல்லியல் துறையில் தொல்லியல் அலுவலராகப் பணியாற்றிய அனுபவம் பெற்றவர். செப்பேட்டு ஆய்வுகளைத் தவிர, கல்வெட்டுத் தொகுதிகளையும் அரிய ஓலைச் சுவடிகளிலிருந்து பல நூல்களையும் வெளியிட்ட சிறப்புக்குரியவர். அவ்வாறான ஓலைச் சுவடிகளில் ஒன்றான வல்லம் தலபுராணத்தை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. தமிழின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு செயலாற்றி வருகின்றார்கள். ஒல்லும்வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றோம்.

தமிழ் வளர்ச்சிக்கும் இந்நிறுவன வளர்ச்சிக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத் துறை அமைச்சரும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவருமாகிய மாண்புமிகு கே.சி. வீரமணி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சியில் எங்களை வழிநடத்திவரும் தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எம் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறோம். இந்த அரிய நூலைப் பிழை திருத்திப் பதிப்பித்த முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கும், இதைக் கணினியில் வடிவமைத்த செல்வி தீபிகாலட்சுமணன் அவர்களுக்கும், அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்

# ஆசிரியர் குறிப்பு



**ச. கிருஷ்ணமூர்த்தி** திருவண்ணாமலை மாவட்டம் சேயாற்றருகே உள்ள விலாரிப்பட்டு என்னும் சிற்றூரில் 4–4–1949 இல் பிறந்தார். உயர்கல்வியைச் சென்னை மாநிலக் கல்லூரியில் முடித்தார். தமிழக அரசு தொல்லியல் துறையில் தொல்லியல் அலுவலராக 1978 முதல் 2007 வரை பணியாற்றி ஓய்வு பெற்றுள்ள இவர் பணிபுரிந்த போது ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒவ்வொரு பிரிவில் முத்திரை பதித்துள்ளார். முதலில் தஞ்சாவூர் மாவட்டத்தில் பணியாற்றியபோது பல்வேறு கோயில்கள், மடங்களில் உள்ள ஓலைச்சுவடிகளை ஆய்வு செய்ததுடன் ஆயிரத்துக்கு மேற்பட்ட ஓலைச்சுவடிகளை அரசுக்காகச் சேகரித்துள்ளார். சேகரித்த ஓலைச்சுவடிகளுக்கு விவரப்பட்டியலும் தயாரித்துள்ளார். அச்சில் வராத பல நூல்களைப் பதிப்புக்குத் தயார் செய்துள்ளார். இவர் சேகரித்த ஓலைச்சுவடிகளுள் யாழ்ப்பாண ஓலைச்சுவடிகள் ஐம்பதுக்குமேல் உள்ளன. சுவடிகள் சேகரிப்புடன் பல்வேறு கோயில்களில் உள்ள கல்வெட்டுகள், செப்பேடுகள், சிற்பங்களையும் ஆய்வு செய்துள்ளார். வல்லம் நகரில் பெருங்கற்காலப் பானை ஓடுகளை முதன் முதலில் கண்டறிந்த இவர் கங்கைகொண்ட சோழபுரம் அகழாய்வில் பங்கு பெற்றார்.

1983 முதல் 1988 வரை தருமபுரி மாவட்டத்தில் பணியாற்றிய காலத்தில், பெருங்கற்காலச் சின்னங்களில் வரலாற்றுக்கு முற்பட்ட கால ஓவியங்கள் பலவற்றைக் கண்டறிந்தார். மௌரியர் காலத்தைச் சேர்ந்த முத்திரைக் காசுகள் (வெள்ளிக் காசுகளை) அரசுக்காகச் சேகரித்துள்ளார். இச்சேகரிப்பு **தினமலர்** நாளிதழில் (18–4–1988) முதல் பக்கத்தில் தலைப்புச் செய்தியாக வெளிவந்தது. நடுகற்கள் தொடர்பாக ஒரு கருத்தரங்கை நடத்தியதுடன் மாவட்டத்தில் உள்ள ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்கும் தொல்லியல் குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தினார். **தருமபுரி வரலாறும் பிரகலாத சரித்திரமும்** என்ற நூலை எழுதி வெளியிட்டார். அச்சில் வராத **கிருஷ்ண நாடகம், மதிகெட்டான் நாடகம், இரணியன் நாடகம்** உட்பட நூற்றுக்கு மேற்பட்ட ஓலைச்சுவடிகளைச் சேகரித்துள்ளார். விவரப்பட்டியலும் தயாரித்துள்ளார்.

1989 முதல் 2003 ஏப்ரல் வரை சிதம்பரத்தில் பணியாற்றிய காலத்தில் **திருவாவடுதுறை ஆதீனச் செப்பேடுகளை** முழுமையாக வாசித்து அவற்றை நூலாக வெளியிட்டுள்ளார். கல்லூரி மாணவர்கள் ஆய்விற்கு உதவியாகத் **தமிழ்நாட்டுச் செப்பேடுகள் இருதொகுதிகள், நடுகற்கள், கல்வெட்டுகளில் ஊரும்பேரும்** போன்ற நூல்களை எழுதியதுடன் திருக்கோயிலூர், சேந்தமங்கலம், மாளிகைமேடு அகழாய்வுப்பணிகளில் ஈடுபட்டுள்ளார். அச்சில்வராத **திருக்குறள் பழைய உரையை,** ஓலைச்சுவடியிலிருந்து நகல் செய்து பதிப்பிக்க ஏற்பாடு செய்தார். தமிழக அரசு தொல்லியல்துறை இதனை வெளியிட்டது.

2003 மே முதல் 2007 ஏப்ரல் வரை சென்னையில் பணியாற்றிய காலத்தில் காஞ்சிபுரம் மற்றும் திருவள்ளூர் மாவட்டக் கல்வெட்டுகள் படியெடுக்கும் குழுவிற்குத் தலைமைதாங்கிப் பெரும்பாலான கல்வெட்டுகளைப் படியெடுத்து முடித்ததுடன் கிருஷ்ணகிரி, காஞ்சிபுரம் தொடர்பான 500க்கு மேற்பட்ட கல்வெட்டுகளைப் படித்துமுடித்து, பதிப்பிற்கு வழங்கியுள்ளார்.

இவருடைய பிள்ளைகள் நால்வரில் மூவர் ஆசிரியர்களாகவும் ஒருவர் பொறிஞராகவும் பணியாற்றி வருகின்றனர். இருநூறுக்குமேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை எழுதியுள்ள இவர் தொடர்ந்து எழுதிவருகிறார். அவ்வாறே கருத்தரங்குகளிலும் பங்குபெற்று வருகிறார்.

## ச. கிருஷ்ணமூர்த்தி பெற்ற பரிசுகள்

1. திருவோத்தூர் வரலாறு. 1992 – தமிழ் வளர்ச்சித்துறையின் பரிசும் பணமும்.
2. திருவாவடுதுறை ஆதீன வரலாறு. 1999 தமிழ் வளர்ச்சித்துறையின் பரிசும் பணமும் (தொல்லியல், கல்வெட்டுகள், வரலாறு).
3. கிருஷ்ண நாடகம் 2005 – கலை இலக்கியப் பெருமன்ற விருதும் பணமும். நாகர்கோயில் கலை இலக்கியப் பெருமன்றம் வழங்கியது.
4. 'நாலடியார் மூலமும் பதிப்பிக்கப்படாத பழைய உரையும்' என்ற நூலுக்கு 31–06–2008 அன்று சேலம் கே. ஆர். ஜி. நாகப்பன், என். இராஜம்மாள் அறக்கட்டளை இலக்கியப் பரிசும் பணமும் வழங்கியது.
5. திருவாவடுதுறை ஆதீனம் 11–02–2000 அன்று **சரித்திரச் செம்மல்** என்ற விருதுடன் ஒரு கணையாழியை இவருக்கு வழங்கியது.

## ச. கிருஷ்ணமூர்த்தி எழுதிய நூல்கள் : 51

# உள்ளடக்கம்

# முன்னுரை

திருவள்ளூர் மாவட்டத்தில் உள்ள திருவாலங்காடு பழம்பதியாகும். சென்னையிலிருந்து திருத்தணிகை செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ள திருவாலங்காடு செல்ல இரயில் வசதியும் பேருந்து வசதியும் இருப்பினும் இரயிலில் சென்று தொடர்வண்டி நிலையத்தில் இறங்கி அங்கிருந்து ஆட்டோவில் அமர்ந்து கோயிலுக்குச் செல்வதே எளிதாகும்.

திருவாலங்காடு என்ற ஊர் 13$^{0}$.07' வடக்கு அட்சரேகையிலும் 77$^{0}$.47' கிழக்குத் தீர்க்கரேகையிலும் அமைந்துள்ளது. பழையனூரும் திருவாலங்காடும் முன்னர் ஒரே ஊராக இருந்திருப்பினும் தற்போது தனித் தனி ஊர்களாக உள்ளன. பழையனூர்க்கு மேற்கில் வடாரண்யேஸ்வரம் என்ற பெயரில் திருவாலங்காடு உடையார் கோயில் அமைந்துள்ளது. வடம் என்ற சமஸ்கிருதச் சொல்லுக்கு ஆலமரம் என்று பொருளாகும். ஆரண்யம் என்றால் காடு. தமிழகத்தின் தெற்கில் உள்ள குற்றாலமும் ஆலமரத்தின் பெயரில் உள்ளது. எனினும் இரண்டு தலங்களின் தலவிருட்சம் பலாமரமாக உள்ளது என்று ஆய்வாளர் கூறுவர்.

திருவாலங்காடு மற்றும் பழையனூரில் பல கோயில்கள் இருப்பினும் வடாரண்யேஸ்வரர் கோயில், பத்ரகாளி அம்மன் கோயில், கைலாசநாதர் கோயில், அம்மையப்பர் தழுவக்குழைந்த ஈஸ்வரர் கோயில் மிக முக்கியமான கோயில்கள் ஆகும். பல்லவர் காலத்தில் கட்டப்பட்ட வடாரண்யேஸ்வரர் கோயில் சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டாலும் பல்லவர் கல்வெட்டுகளும் படியெடுக்கப்பட்டுள்ளன. 1905 ஆம் ஆண்டிலும் 1943-44 ஆம் ஆண்டிலும் இங்குள்ள கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு, வாசிக்கப்பட்டு அவைகள் கல்வெட்டுத் தொகுதிகள் அல்லது ஆண்டறிக்கைகளில் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

பல்லவர் காலத்தில் திருவாலங்காடு உடையார் கோயில் தோற்றுவிக்கப்பட்டாலும் பழையனூரிலும் திருவாலங்காட்டிலும் மக்கள் கற்காலம் தொடங்கி வாழ்ந்து வந்தமையை இங்கே கண்டறியப்பட்ட கற்கருவிகள் உறுதிப்படுத்துகின்றன. கற்கருவிகள் செய்யப் பயன்படும் படிகக் கல்வகை இப்பகுதியில் பெருமளவில் உள்ளது. கைக்கோடரி, முட்டை வடிவக் கற்கருவி, வெட்டுக்கத்தி, சில்லுகள் இங்கே

கிடைத்துள்ளன. பெருங்கற்காலச் சின்னங்களான கற்கிடை, கற்குவை, தாழி, ஈமத்தொட்டி போன்றவைகளை ஆய்வாளர்கள் கண்டறிந்துள்ளனர் (வரலாற்றில் திருவாலங்காடு, கு. இராசவேலு).

சங்ககாலத்தைச் சேர்ந்த கருப்பு – சிவப்புப் பானை ஓடுகளும் இப்பகுதியில் சேகரிக்கப்பட்டன. தொண்டைமான் மரபினர் ஆட்சியில் இப்பகுதி இருந்திருக்க வேண்டும். பல்லவர் காலத்தில் இங்கு வந்த காரைக்கால் அம்மையார் இறைவனை வணங்கி நெஞ்சம் நெகிழ, பண்சுமந்த பாடல்கள் பாடினார். **பழனமூதூர் நிலவிய ஆலங்காடு** என அவர் ஆலங்காட்டையும் பழையனூரையும் குறிப்பிட்டுள்ளார். நிருபதுங்க வர்ம பல்லவன் கல்வெட்டுகள் இங்குள்ளன. இராசேந்திர சோழன் கல்வெட்டுகள் மட்டுமின்றி அவன் வெளியிட்ட ஒரு செப்பேட்டுத் தொகுதியும் கண்டறியப்பட்டது. சோழர், பாண்டியர், தெலுங்குச் சோழர், விஜயநகர மன்னர் எனப் பல மரபினர் கல்வெட்டுகள் சுமார் 60 படியெடுக்கப்பட்டன. விஜயநகரப் பேரரசிற்குப்பின் இப்பகுதியில் ஜமீன்தாராக இருந்த கார்வேட் என்பவர் ஆங்கிலேயரிடம் 1, 60,000 ரூபாய்க்குத் தம் ஜமீனை விற்றதாக அறிகிறோம். ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் நடந்த கோயில் திருப்பணியின்போது ஐம்பொன் சிலைகளுடன் 31 ஏடுகள் கொண்ட திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதி கண்டறியப்பட்டது.

2011ஆம் ஆண்டின் தொடக்கத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் **இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள்** என்ற தலைப்பில் அடியேன் அறக்கட்டளைச் சொற்பொழிவாற்ற அது நூலாக வெளிவந்துள்ளது. வடமொழியில் உள்ள கிரந்தப் பகுதியைத் தமிழ் வரிவடிவில் தந்து மொழிபெயர்ப்பும் குறிப்புரையும் தந்ததுடன் விரிவாக ஆய்ந்து மூலத்தையும் இணைத்துள்ளேன்.

திருவாலங்காட்டுச் செப்பேடுகளையும் மேற்படி நூலையே முன்னுதாரணமாகக் கொண்டு இந்த நூலைப் பதிப்பித்துள்ளேன்.

திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் வடமொழிப் பகுதி பத்து ஏடுகளுடன் 137சுலோகங்களைக் கொண்டு, சோழர் சரித்திரத்தை இலக்கிய நயத்துடன் எடுத்தியம்புகிறது. தமிழ்ப்பகுதி சொத்து ஆவணமாக இருப்பதுடன் 11ஆம் நூற்றாண்டின் சமூக அமைப்பைப் படம்பிடித்துக் காட்டுகிறது. எனவே விரிவாக ஆய்வு செய்து மூலத்துடன் ஏடுகள் முழுமையும் நிழற்படங்களாக இணைத்து இந்த நூலை உருவாக்கியுள்ளேன்.

'திருவாலங்காட்டுச் செப்பேடுகள் ஓர் அறிமுகம்' என்ற முதல் தலைப்பில் செப்பேடுகளின் அமைப்பையும் வாசகங்களின் விளக்கத்தையும் எழுதி உள்ளேன். இரண்டாம் தலைப்பில் வடமொழிப் பகுதியைத் தமிழ் வரிவடிவில் தந்து மொழிபெயர்ப்பையும் குறிப்புரையையும் சேர்த்துள்ளேன். கல்வெட்டுத் தொகுதியின் ஆங்கில மொழிபெயர்ப்பு எனக்குப் பெரிதும் துணையாக இருந்தது. புலவர் வே. மகாதேவன் மற்றும் பேராசிரியர் சங்கர நாராயணன் தொகுத்திருந்த தட்டெழுத்துப் பிரதியும் உதவியாக இருந்தது. ஒவ்வோர் சுலோகத்தின் தன்மைக்கேற்பக் குறிப்புரையை விரித்தோ, சுருக்கியோ, ஒப்பிட்டோ, நயங்களைக் குறிப்பிட்டோ எழுதியுள்ளேன். மிகுதியான பக்கங்களை இவ்விரண்டாம் பகுதியே எடுத்துக் கொண்டுள்ளது. வடமொழியிலுள்ள வர்க்க எழுத்துக்களைக் குறிப்பிடத் தமிழ் எழுத்துகளையே குறிப்பிட்டுள்ளேன். எனினும் ஜ, ஸ, ஷ, க்ஷ, ஹ எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளேன். சுலோகங்களில் வரும் **ந** விற்குப் பதில் **ன** பயன்படுத்தவில்லை. மூன்றாவதாக அமைந்த தலைப்பில் தமிழ் மூலத்தினை அடிக்குறிப்புகளுடன் இணைத்துள்ளேன்.

நான்காவதாக **ஆலங்காடு உடையார் கோயில்** தலைப்பில் ஊர் குறித்தும் கோயில்கள் குறித்தும் ஒரு சில விவரங்களைச் சுருக்கமாகக் குறிப்பிட்டுள்ளேன்.

நிழற்படங்களை வழங்கிய சென்னை அரசு அருங்காட்சியகத் துறைக்கும் காப்பாட்சியர் பாலசுப்பிரமணியனுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மைசூரில் உள்ள நடுவண் அரசு தொல்லியல் துறைக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைச் சொற்பொழிவே நூலாக வெளிவருகிறது. இதற்காக உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கு என் அன்பு கலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் சிறப்பாக வெளிவர உதவி புரிந்த நிறுவனப் பணியாளர்களுக்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**ச. கிருஷ்ணமூர்த்தி**

# 1. திருவாலங்காட்டுச் செப்பேடுகள் ஓர் அறிமுகம்

தொண்டை நாட்டுப் பாடல் பெற்ற தலங்களுள் திருவாலங்காடு ஒன்றாகும்.[1] **தொண்டை மண்டலம்** என்றும் **ஜெயங்கொண்ட சோழமண்டலம்** என்றும் **சந்திரகிரி ராஜ்யம்** என்றும் வழங்கப்பட்ட தமிழகத்தின் வடபகுதியும் ஆந்திரப் பிரதேசத்தின் சில பகுதிகளும் இணைந்து ஆங்கிலேயர் ஆட்சியின்போது **செங்கல்பட்டு மாவட்டம்** என வழங்கப்பட்டது. விடுதலை அடைந்தபின் இன்றைய காஞ்சிபுரம், திருவள்ளூர் மாவட்டங்கள் மட்டும் செங்கல்பட்டு மாவட்டமாக மாறின. பேரறிஞர் அண்ணா ஆட்சிக்கு வந்த பின்னர், செங்கல்பட்டு மாவட்டத்தின் பெயர் காஞ்சிபுரம் மாவட்டம் என்றும் தலைநகர் காஞ்சிபுரமாகவும் மாறிற்று. மீண்டும் காஞ்சிபுரம் இரண்டாகப் பிரிக்கப்பட்டுப் புதிதாகத் திருவள்ளூர் மாவட்டம் உருவாயிற்று. இந்தத் திருவள்ளூர் மாவட்டத்தில் அமைந்துள்ள திருத்தணிகை வட்டத்தில் திருவாலங்காடு என்ற ஊர் அமைந்துள்ளது.

'அம்மையே' என்று சிவபெருமானால் அழைக்கப்பட்ட[2] காரைக்கால் அம்மையார் தலையால் நடந்த பதி திருவாலங்காடு. இவருடைய பாடல்கள் பக்திரசம் கொண்டவை.

[3] ஆலமரத்தின் அடிப்படையில் இவ்வூர் ஏற்படுத்தப்பட்டது. இதே பெயரில் தமிழகத்தின் தெற்கில் மயிலாடுதுறையையொட்டி ஏற்படுத்தப்பட்ட ஊர் **தென்திருவாலங்காடு** ஆயிற்று. நெல்லை மாவட்டத்தில் உள்ள குற்றாலமும் ஆலின் அடிப்படையில் அமைந்த ஊராகும். திருவாலங்காடு வடதிருவாலங்காடு என்றும் அழைக்கப்பட்டுள்ளது.

காளியோடு நடனம் ஆடி வெற்றிபெற்ற நடராசர் இங்கு ஊர்த்துவ தாண்டவமூர்த்தியாக உள்ளார். சிதம்பரம் நடராசர் கோயிலிலும் ஊர்த்துவ தாண்டவருக்குத் தனியாகச் சபை உண்டு. திருவாலங்காட்டு இறைவன் 'திருவாலங்காட்டு மகாதேவர்' என்று சாசனங்களில் அழைக்கப்பட்டுள்ளார். இப்பெயரே வடமொழியில் வட ஆரண்யேஸ்வரர் என்று அழைக்கப்படுகிறது. நடராசருடைய ஐந்து சபைகளுள் **இரத்தினசபை** இத்தலத்திற்குரியது என்பர்.

இவ்வூருக்கருகில் உள்ள [4] பழையனூர் என்ற மூதூரும் தேவாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. சுதர்சனச் செட்டியின் முதல் மனைவி கணவனால் வஞ்சிக்கப்பட்டு இறந்த பிறகு நீலி என்ற பேய் ஆகிறாள். இவள் பெண்ணுருவில் கணவனைத் தொடர, பழையனூர் வேளாளர் எழுபது பேர் தந்த உறுதிமொழியை நம்பி, சுதர்சனச் செட்டி நீலியுடன் ஒரே அறையில் தங்குகிறான். பேயால் கொல்லப்படுகிறான். சொன்ன சொல்லைக் காப்பாற்ற[5] எழுபது வேளாளரும் தீக்குளித்து மாண்டு விடுகின்றனர். இத்தகு சிறப்புடைய ஊர் பழையனூர் ஆகும்.

காரைக்கால் அம்மையாருக்கு முன்பு கட்டப்பட்ட திருவாலங்காட்டுக் கோயில் பிற்காலச் சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பட்டு விரிவுபடுத்தப்பட்டது.

1903 இல் இக்கோயில் திருப்பணியின்போது சில ஐம்பொன் சிலைகளுடன் 31 ஏடுகளைக் கொண்ட செப்பேட்டுத் தொகுதி ஒன்றும் கண்டறியப்பட்டது. 1903–04 ஆம் ஆண்டின் கல்வெட்டு ஆண்டறிக்கையில் (பக்கம் 233–35) சுருக்கமாகக் கூறப்பட்டு 1916இல் சென்னைக் கல்வெட்டியல் ஆண்டறிக்கை இரண்டாம் பாகத்தில் விரிவாகப் பத்துப் பக்கங்களில் (11–20) இச்செப்பேட்டுத் தொகுதி ஆய்வு செய்யப்பட்டது. [6] கரந்தைச் செப்பேடுகள் கண்டுபிடிக்கும்வரை இத்தொகுதியே எடையிலும் எண்ணிக்கையிலும் மிகுந்து இருந்தது. சமீபத்தில் கண்டறியப்பட்ட இராஜாதிராஜனுடைய செப்பேடுகள் கரந்தைச் செப்பேடுகளைக் காட்டிலும் எடையிலும் எண்ணிக்கையிலும் மிகுந்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். இதுவரை சோழரின் செப்பேடுகள் பத்தொன்பது கண்டறியப்பட்டாலும் சோழர் வரலாற்றிற்குத் திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதி முதன்மையான ஆவணம் என்றால் மிகையன்று. சோழர் வரலாற்றை 10 ஏடுகளில் (சரியாக 18 1/2 பக்கம் எனலாம்) இத்தொகுதியில் காண்கிறோம்.

தென்னிந்தியக் கல்வெட்டுகள் மூன்றாம் தொகுதியின் இரண்டாம் பாகத்தில், 205 ஆம் எண்ணாகக் குறிப்பிடப்பட்டு மிக விரிவாக ஆங்கிலத்தில் ஆய்வு செய்யப்பட்டுச் செப்பேடுகளின் வாசகங்களும் சேர்க்கப்பட்டுள்ளன. [7] கல்வெட்டாய்வாளர் எச். கிருஷ்ண சாத்திரியார் மிகச் சிறப்பாகப் பதிப்பித்துள்ளார். செப்பேடுகளின் மைப்பிரதிகளும் இணைக்கப்பட்டுள்ளன.[8] தமிழ்ப் பகுதியின் மைப்பிரதிகள் முழுமையாக இல்லாமை சிறு குறையாகும்.

சென்னை அரசு அருங்காட்சியகத்தில் செப்பேடுகளின் கண்காட்சி வைத்திருந்தபோது 29–10–2009 அன்று[9] இச்செப்பேட்டுத் தொகுதியை நேரில் பார்த்துத் தேவையான குறிப்புகளை எழுதிக் கொண்டேன். கல்வெட்டுத் தொகுதியின் அடிப்படையிலே இந்நூலை எழுதியுள்ளேன்.

சென்னை அரசு அருங்காட்சியகத்தின் காப்பாட்சியர் திரு. பாலசுப்பிரமணியன் திருவாலங்காட்டுச் செப்பேடுகளின் நிழற்படங்களை முழுமையாக வழங்கியிருந்தார். நூல் ஆய்வுக்கு இவையும் துணைபுரிந்தன. புலவர் வே. மகாதேவன் மற்றும் முனைவர் சங்கரநாராயணனுடைய தட்டெழுத்துப் பிரதியும் இந்நூற்கு உதவியாக இருந்தது. கல்வெட்டுத் தொகுதியில் இடம்பெறும் நிழற்படங்களையும் சென்னை அருங்காட்சியக நிழற்படங்களையும் இந்நூலில் தேவைக்கேற்ப இணைத்துள்ளேன். நன்றி.

## செப்பேட்டுத் தொகுதியின் அமைப்பும் எடையும்

திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதியில் 31 இதழ்கள் பெரிய வளையத்துடன் உள்ளன. வளையத்தில் சோழ அரசின் இலச்சினை யாதொரு சேதமுமின்றி உள்ளது. இலச்சினையின் மேல்பகுதியில் குடையும் அதன் இருபுறமும் சாமரங்களும் உள்ளன. அதன்கீழ் இரட்டைக் கயல்களும் புலியும் உள்ளன. அவற்றிற்கு இருபுறமும் இருவிளக்குத் தாங்கிகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவற்றிற்குக் கீழே வில் இடம் பெறுகிறது. புலி சோழரின் சின்னமாகும். இரட்டைக்கயலும் வில்லும் முறையே பாண்டியர், சேரரின் சின்னங்கள் ஆகும். பாண்டியர் மற்றும் சேரரை வென்று அவர்களுடைய நாடுகளும் சோழப் பேரரசில் இணைக்கப்பட்டதால் மேற்படி அடையாளங்கள் இலச்சினையில் இடம்பெற்றன என்று அறிஞர் கூறுவர்.[10]

இலச்சினையில் கீழ்க்காணும் வடமொழிச் செய்யுள் பொறிக்கப் பட்டுள்ளது.

> ஸ்வஸ்திஸ்ரீ ஏதத் ராஜேந்த்ர சோளஸ்ய
> பரகேஸரி வரம்மண:
> ராஜத் ராஜன்ய மகுட ச்ரேணி ரத்னேஷு ஸாஸநம்
>
> 'இது பரகேசரி வர்மனாகிய இராசேந்திர சோழனின் ஆணை (சாசனம்). அரசர்களின் திருமுடி வரிசைகளின் ரத்னங்களில் திகழ்வது'

என இந்தச் சுலோகத்திற்குப் பொருளாகும். இதே செய்யுள், சொற்கள் முன்பின்னாக ஆனைமங்கலச் செப்பேடுகளின் இலச்சினையில் இடம் பெற்றுள்ளன.[11]

மொத்தமுள்ள 31 ஏடுகளில் வடமொழி ஏடுகள் பத்து ஆகும். கிரந்த லிபியில் வடமொழிப் பகுதி பொறிக்கப்பட்டுள்ளது. எஞ்சிய 21 இதழ்களைத் தமிழ்மொழியில் தமிழ் எழுத்தில் காண்கிறோம். ஏடுகளின் இருபுறமும் வெட்டப்பட்ட எழுத்துகள் மிகவும் அழகாக உள்ளன. தெளிவாகப் படிக்கும் படியும் உள்ளன. வடமொழிப்பகுதி சுலோகமாகவும் தமிழ்ப்பகுதி உரைநடையாகவும் உள்ளன.

இச்செப்பேடுகள் 66 வீசை 20 பலம் அல்லது 8 பவுண்ட் 2 விஸ்ஸா 20 பலம் எடை உள்ளதாக இத்தொகுதியைப் பதிப்பித்த தொல்லியல் அளவீட்டுத் துறை குறிப்பிடுகிறது. கரந்தைச் செப்பேடுகள் என்ற நூலின் முகவுரையில் திருவாலங்காட்டுச் செப்பேடுகளின் எடை 7980 தோலா என்றுள்ளது. அதாவது 93. 05 கிலோ எடையாகும்.

## எழுத்துகள்

இச்செப்பேட்டுத் தொகுதியின் சமஸ்கிருத மொழியில் வரும் கிரந்தப் பகுதி, ஆனைமங்கலச் செப்பேட்டுக் கிரந்தப் பகுதிபோல் இன்றி, சிறிய வரிவடிவங்களில் 137 சுலோகங்களைக் கொண்டுள்ளது. வரி என்று எடுத்துக் கொண்டால் 271 வரிகளைக் கொண்டுள்ளது. கிரந்தப் பகுதியில் வரும் சில தமிழ்ச்சொற்கள் தமிழிலேயே உள்ளன. தமிழ் மொழிக்கே உரிய சிறப்பெழுத்துகள் ழ, ள, ற போன்றவை தமிழ் வரி வடிவில் உள்ளன. ஈகாரக் குறியீட்டின் மேலுள்ள சுழி ஆனைமங்கலச் செப்பேட்டில் வரும் ஈகாரக் குறியீட்டைக் காட்டிலும் தெளிவாக உள்ளது. வடமொழி அட்சரத்தின் பகர வரிசையில் மூன்றாம் வர்க்கமான பகர உ அதாவது பு (Bu) மற்றும் பகர ஊகாரம் பூ (Boo) வேறுபாடு தெளிவில்லை. சில இடங்களில் ஹ மற்றும் ப (Ha and Ba) ஒன்று போல உள்ளன. மூன்றாம் நான்காம் வர்க்க எழுத்துகள் க, த, ப (ga, gha, da, dha, ba, bha) கலந்து காணப்படுகின்றன. ஸ, ச, ஜ எழுத்துகள் ஒன்றுக்குப் பதில் மற்றொன்று வந்துள்ளன. ல, ள, எழுத்துகள் மாறுபட்டு வந்துள்ளன. சிறப்பு ழகரம் சில இடங்களில் ழகரமாக வரினும் சில இடங்களில் கிரந்த ளகரத்தைப் பெற்றுவந்துள்ளது. தமிழ்ப்பகுதியில் வரும் டிகர இ அதாவது டியின் இகரம் எழுத்தின் மேலேயே உள்ளது. கிரந்த யகரத்தை யொத்தே தமிழ் யகரம் உள்ளது. ணகரம், நகரம் மற்றும் னகரம் மாறுபட்டு எழுதப்பட்டுள்ளன. சான்றாகச் சொந்நோம், சொந்னமை என்றுள்ளன. பழையனூர், பழையநூர் இரண்டும் வந்துள்ளன. தமிழ்ப் பகுதியில் இடம்பெறும் வடசொற்கள் கிரந்த லிபியில் உள்ளன. ஆயின் வடமொழிப் பகுதியில் இடம் பெற்றுள்ள தமிழ்ச் சொற்கள் சில இடங்களில் தமிழ் எழுத்துகளிலும் சில இடங்களில் கிரந்த லிபியிலும் உள்ளன. இருமொழிப் புலமையும் எழுத்துகளின் வரிவடிவ ஞானமும் உடையவரால் இச்செப்பேட்டுத் தொகுதியை எளிதில் வாசிக்க முடியும்.

வடமொழியின் கிரந்தப்பகுதி; அதாவது வடமொழிப் பகுதி முதல் பகுதி எனலாம். இது முடிந்து இடம் பெறும் 21 வரி தமிழ்ப்பகுதி இரண்டாம் பகுதி எனலாம். இதையடுத்து 11 ஆம் ஏட்டிலிருந்து 31 ஆம் ஏடுகள்வரை உள்ள தமிழ்ப்பகுதி மூன்றாம் பகுதி எனலாம்.

## தொடர்பற்ற வாசகம்

வடமொழிப் பகுதி (271 வரி) முடிந்தபின் பத்தாவது ஏட்டின் முன்புறம் ஆறு வரிகளும் பின்புறம் 15 வரிகளும் செப்பேட்டின் காலத்திற்கும் தமிழ்ப்பகுதிக்கும் தொடர்பற்றவையாக உள்ளன. எழுத்துகளும் பெரிய வடிவில் உள்ளன. மிகவும் பிற்காலத்தில் இப்பகுதி எழுதப்பட்டிருக்கவேண்டும் என்பது தொல்லியல் அளவீட்டுத் துறையின் கருத்தாகும். இக்கருத்து மிகவும் பொருத்தமாகும். **கோனேரி இன்மை கொண்டான்** என்று இப்பகுதி ஆரம்பமாகிறது. ஆயின் வடமொழிப் பகுதிக்கும் முற்பட்ட தமிழ்ப் பகுதி **நோநேர் இன்மை கொண்டான்** என்று ஆரம்பமாகிறது. தமிழ்மரபுப்படி இதுவே சரியாகும்.

'பழையனூர் உடையார் திருவாலங்காடு உடையார்' என்று தொடர்பற்ற வாசகத்தில் உள்ளது. உண்மையில் பழையனூர் உடையார் அல்லது பழையனூர் திருவாலங்காடு உடையார் என ஒன்றுதான் இடம் பெறவேண்டும். தமிழ்ப்பகுதியில் திருவாலங்காடுடைய மஹாதேவர் என இறைவன் கூறப்பட்டுள்ளான். பழையனூர் நாடும் மேன்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூர் எனத் தமிழ்ப்பகுதியில் வர, தொடர்பற்ற வாசகத்தில் 'மேல்மலை' இன்றிப் பழையனூர் கூறப்பட்டுள்ளது. மேலும் அம்மனுக்குத் தேவதானம் வேண்டி மன்னனிடம் முறையிட்டவன் ஓலை எழுதும் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டு, **துளாருடையாந் கற்றளியான உத்தம சோழ தமிழதரையன்.** ஆயின் தமிழ்ப் பகுதியில் 'நம் ஓலை எழுதும் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் **துளாருடையான் நாராயணன் கற்றளியான உத்தம சோழத் தமிழதரையன்'** என்றுள்ளது. கூடுதலாக **நாராயணன்** என்ற பெயர் இருப்பதை மனதில் கொள்ளவேண்டும். இரு நபர்கள் வெவ்வேறு காலங்களில் அரசனுடைய ஓலை எழுதும் அதிகாரிகளாக இருந்துள்ளார்கள் என்பது ஐயத்திற்கிடமின்றித் தெளிவாகிறது.

தொடர்பற்ற வாசகத்தில் செம்பிலும் இட்டுச் சிலாலேகையும் பண்ணிக்கொள்ளச் சொந்நோம் என்றிருக்கிறது. தமிழ்ப்பகுதியின் இறுதியில் வடமொழியில் செப்பேட்டை வெட்டிய சிற்பிகளின் பெயர்களும் அவர்கள் காஞ்சிபுரத்தில் ஓவியக்குடியில் பிறந்தவர்கள் என்பதும் கூறப்பட்டுள்ளன. சிலாலேகையில் வெட்டியதாகத் தமிழ்ப் பகுதியில் இல்லை. எனவே பத்தாம் ஏட்டில் இடம்பெறும் தமிழ்ப் பகுதி காலத்தால் மிகவும் பிற்பட்டது. வடமொழிப் பகுதியில் இராசேந்திர சோழனின் வட இந்தியப் படையெடுப்பு, சோழகங்கம் தோற்றுவித்தது ஆகியவை இடம் பெற, தமிழ் மெய்க்கீர்த்தியில் இப்பகுதி இல்லை. காரணம் ஆறாவது ஆட்சியாண்டு என்பதால் வடநாட்டுப் போர்கள் இடம்பெறவில்லை.

செப்பேட்டில் கண்ட ஆணைப்படி கல்லும் கள்ளியும் நாட்டி, தேவதான நிலம் ஒப்படைத்தது மன்னனின் ஏழாவது ஆட்சியாண்டு நாள் 150 ஆகும் என்றும் செப்பேட்டின் வடமொழிப் பகுதியும் தமிழ்ப்பகுதியும் (தொடர்பற்ற 10 ஆம் ஏட்டில் 21 வரிகள் நீங்கலாக) சிற்பிகள் வெட்டியது இராசேந்திர சோழனின் வடநாட்டுப் படையெடுப்பு முடிந்து சோழகங்கம் ஏற்பட்ட பிறகே எனலாம். இராசேந்திர சோழனுடைய 13 ஆவது ஆட்சியாண்டு முதல் அவனுடைய வடநாட்டு வெற்றிகள் மெய்க்கீர்த்திகளில் இடம்பெறுவதால் செப்பேடுகள் வெட்டி முடித்தது கி. பி. 1024 க்குப் பிறகு எனலாம். கங்கைகொண்ட சோழன் என்ற பட்டப் பெயரும் மன்னன் பெறுகிறான். கல்வெட்டறிஞர் வெங்கய்யா, அம்மை நாச்சிக்கு வழங்கப்பட்ட கொடை குறித்த பகுதிக்கும், திருவாலங்காட்டு இறைவனுக்கு வழங்கிய கொடை குறித்த பகுதிக்கும் இடையே 150 ஆண்டுகள் கால இடைவெளி இருக்க வேண்டும் என்கிறார். செப்பேட்டில் இடம் பெறும் அம்மை நாச்சியார் காரைக்காலம்மையாரைச் சுட்டும் என முதலில் கூறினாலும் பின்னர், தம் கருத்தை மாற்றிக் கொள்கிறார். பத்தாம் ஏட்டில் கிரந்தம் முடிந்த இடத்திலிருந்து புதிதாக வாசகங்களை வெட்டிச் சேர்த்துள்ளனர் எனலாம்.

இராசேந்திர சோழனுடைய ஆறாவது ஆட்சியாண்டில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவு செப்பேட்டில் பல இடங்களில் கூறப்படுகிறது. செப்பேட்டின் தமிழ்ப்பகுதி காலத்தால் முற்பட்டதாயினும் வடமொழிப் பகுதியின் தொடர்ச்சியாக ஏடுகளின் எண்கள் இருப்பதால் செப்பேடுகள் வெட்டியவர்கள் மன்னன் ஆணை பிறப்பிக்கப்பட்டுச் சில ஆண்டுகள் கழிந்த பின்னரே வெட்டியுள்ளனர் எனலாம். புதிதாகச் சேர்க்கப்பட்ட 21 வரிகள் முதல் குலோத்துங்க சோழன் காலத்திற்குப் பிறகு அதாவது 12–13 ஆம் நூற்றாண்டில் வெட்டியிருக்கலாம். முதலாம் இராசராசன் பிறப்பித்த ஆனைமங்கலப் பள்ளிச்சந்த ஆணை அவன் மகன் காலத்தில்தான் செப்பேடாக வெட்டப்பட்டுள்ளது. முதலாம் இராஜாதிராஜனுடைய ஆணை அவனுடைய தம்பி இரண்டாம் இராசேந்திரன் ஆணை, வீரராசேந்திரன் காலத்தில்தான் செப்பேடாக வெட்டப்பட்டுள்ளது. இந்தத் திருவிந்தளூர்ச் செப்பேட்டுத் தொகுதி கழுக்கணிமுட்டச் செப்பேடு நூலாக வெளியிடப்பட்டுள்ளது.

தேவாரத்தில் பழையனூர், திருவாலங்காடு இரண்டும் இடம் பெற்றுள்ளன. பழையனூர் என்ற பெயரை வடமொழியில் புராண கிராமம் என மொழிபெயர்த்துள்ளனர். ஜெயங்கொண்ட சோழமண்டலம் மேல்மலைப்பழையூர் நாட்டில் உள்ள சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலத்தில் இவ்விரு ஊர்களும் இருந்துள்ளன. வடமொழிப் பகுதியின் பத்தாம் ஏட்டில் முன்பக்கமும் பின்பக்கமும் தமிழில் அம்மை நாச்சியாருக்கு வழங்கிய

தானம் இடம் பெறுகிறது என்பதை முன்பே குறிப்பிட்டோம். இச்செப்பேட்டுத் தொகுதியைப் பதிப்பித்த நடுவண் அரசு தொல்லியல் துறை இவ்வேட்டினை XA என எண் குறிப்பிட்டுள்ளது. [12]'கோனேரி இன்மை கொண்டான்' என்று தொடங்கி 'உத்தமசோழ தமிழதரையன் எழுத்து' என்பதுவரை 21 வரிகளில் தமிழ்ப்பகுதி உள்ளது. 6 வரிகள் XA ஏட்டிலும் 15 வரிகள் XB ஏட்டிலும் உள்ளன. (மொத்தம் 21 வரிகள்)

## *தமிழதரையர்கள்*

தமிழதரையர் என்ற பெயரில் பல அதிகாரிகள் அல்லது சிற்றரசர்கள் சோழரின்கீழ்த் தமிழகத்தின் வடபகுதியில் நிர்வாகம் செய்து வந்துள்ளார்கள். செங்கல்பட்டு அருகே உள்ள திருக்கச்சூர் கல்வெட்டுகளில் தமிழதரையர் பலரைக் காண்கிறோம். சோழராட்சியின் இறுதிக் காலத்தில் அரசர்கள் போலவே இவர்கள் செயல்பட்டுள்ளனர்.

முடிகொண்ட சோழபுரத்துச் சனிமண்டபத்தில் இருந்தபோது **கோனேரின்மை கொண்டான்** என்று தொடங்கும் சோழ மன்னன் திருவாலங்காடு அம்மை நாச்சியாருக்குத் தானம் வழங்க ஆணை பிறப்பித்துள்ளான். நன்கொடை வேண்டி **மஹாதேவபிடாரன்** என்பவன் மன்னனிடம் முறையிட்டுள்ளான். ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஈக்காட்டுக் கோட்டத்துக் கீழ்க்கற்றியூர் நாட்டு அம்மைச்சேரியில் 25 1/2 வேலி நிலங்களை இறையிலியாக மன்னன் வழங்க உத்தரவிட்டுள்ளான். மன்னன் பெயர் கூறப்படவில்லை.

துளாருடையான் கற்றளியான உத்தமசோழ தமிழதரையன், மன்னனுடைய உத்தரவில் ஒப்பம் இட்டுள்ளான். மன்னனின் ஆறாவது ஆட்சியாண்டு நாள் 120இல் இவ்வாணையை வெளியிடுகிறான். வரிவிலக்கு அளிக்கப்பட்டுச் செம்பிலும் கல்லிலும் பொறிக்குமாறு மன்னன் கூறி உள்ளான்.[13] அம்மைச்சேரியில் நன்செய் மற்றும் புன்செய் 14 1/2 வேலியும் செட்டமங்கலத்தில் 11 வேலியும் ஆக 25 1/2 வேலி நிலம் அம்மை நாச்சிக்கு வழங்கப்பட்டது. முதலில் திருவாலங்காடு உடையார்க்கும் பிற்காலத்தில் அம்மைநாச்சிக்கும் நன்கொடையாக நிலங்கள் வழங்கப்பட்டன.[14]

## *மன்னனின் ஆணையும் அதிகாரிகளின் செயல்பாடுகளும்*

முடிகொண்ட சோழபுரத்து நம் வீட்டினுள் (அரண்மனையில் என்க) உள்ளால் **கருமாளிகை மதுராந்தக தேவனில் தெற்கில் மறைவிடத்து** இருந்து நடுவில்மலைப் பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலத்துச் சபையாருக்கு மன்னனின் ஆணை வழங்கப்படுகிறது. மன்னனின் ஆறாவது ஆட்சியாண்டு நாள் 88 இல் ஆணை பிறப்பிக்கப்படுகிறது.[15] அம்மை நாச்சிக்கு வழங்கிய தானத்திற்கும் சிவன்

கோயிலுக்கு வழங்கிய தானத்திற்கும் இடைப்பட்ட காலம் நீண்ட காலமாகும். இரு தானங்களும் இருவேறு நாள்களில் வழங்கியமை போன்று ஆணைகள் வழங்கியபோது மன்னர்கள் இருந்த இடங்களும் இருவேறு இடங்களாகும். அம்மனுக்குத் தானம் வழங்கியபோது சோழ மன்னன் இருந்த சனிமண்டபம் யாவரும் அறிந்த பகுதி போலும். இராசேந்திர சோழன் இறைவனுக்குத் தானம் வழங்கும்போது இருந்த பகுதி ஒரு சிலர் மட்டுமே செல்லக் கூடிய மறைவிடப் பகுதியாகும். முடிகொண்ட சோழபுரம் என்ற ஊர் பழையாறை என்ற ஊராகும். இவ்வூர், கும்பகோணம் அருகே தாராசுரம் ஒட்டி அமைந்துள்ளது. தஞ்சாவூரைத் தலைநகரமாகச் சோழர் மாற்றியதற்கு முன்பு பழையாறையே சோழரின் தலைநகரமாக இருந்துள்ளது. தஞ்சாவூர், கங்கைகொண்ட சோழபுரம் ஆகிய ஊர்கள் சோழநாட்டின் தலைநகரங்களாக முறையே இருந்தபோதும் பழையாறை சோழரின் முக்கிய இடமாக இருந்து வந்துள்ளது. முடிகொண்ட சோழபுரமாக இது இருந்துள்ளது. [16]

திருவாலங்காட்டு மகாதேவர்க்கு இறையிலியாக மன்னன் நிலங்கள் வழங்குவதற்கு முன்பு அதாவது மன்னருடைய ஆறாவது ஆட்சியாண்டுக்கு முன் நிலங்கள் பிரமதேய நிலங்களாக இருந்துள்ளன. நிலங்களின் காணியாளர்கள் பிராமணர்கள் எனலாம். மேற்படி நிலங்களை வெள்ளான் வகையாக மாற்றி, பிறகு தேவதான இறையிலியாக மன்னன் வழங்கியுள்ளான். பிரமதேயமாக இருந்தபோது 598 கழஞ்சு ஒரு குன்றி வரியாகும். இதற்கு மாறாக வெள்ளான் வகையாக மாறிய பின் 3238 கலம் 7 குறுணி 5 நாழி நெல்லும் 193 கழஞ்சு 1 மஞ்சாடி 1 மா பொன்னும் வரியாக விதிக்கப்பட்டன. வரி பொன்னாகவும் தானியமாகவும் பெறப்பட்டது.

திருவாலங்காட்டு மகாதேவர்க்கு நிலையான வருமானம் வழங்க மன்னன் ஏற்பாடு செய்து இவ்வாணையை நிறைவேற்ற ஜனநாதன் என்ற மந்திரியை நியமித்தான். இவன் பிரமாதிராஜன் எனவும் வழங்கப்பட்டுள்ளான். இவனுடைய அறிவுரைக்கிணங்கப் பழையனூர் எல்லைகளை அரனெறி என்பவன் வரையறை செய்துள்ளான். இவன் இருமரபும் தூய வழியில் வந்தவன்; நான்காம் வர்ணத்தைச் சார்ந்தவன் ஆவான். [17]

பழையனூருக்குத் தலைமாறாகச் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலம் சபைக்கு வழங்கப்பட்டது. அரசிற்கு வரும் வரி குறைந்தது. இறை கட்டாதே ஊரவை தவிர்ந்ததை நீக்கி ஆண்டுதோறும் சபை வரியை வசூலிக்க வேண்டும் என மன்னன் ஆணையிட்டுள்ளான். கரந்தைச் செப்பேடுகளில் வெள்ளான் வகை நிலங்கள் பிரமதேய நிலங்களாக மாற்றப்பட்டன.

தானம் குறித்த தமிழ்ப் பகுதியில் **முதல் 145 வரிகள்**, கொடை குறித்தும் அதனைச் செயல்படுத்தும் விதம் குறித்தும் விரிவாகக் காண்கிறோம். இதையடுத்து 281 வரிகளில் பழையனூர் என்ற ஊரின் நாற்புற எல்லைகள், நிலங்கள், ஊர்கள், மரங்கள், நீர்நிலைகள் ஆகியவை விவரிக்கப்பட்டுள்ளன. இறுதிப் பகுதியான 98 வரிகளில் கொடையைப் பெறுபவர் தானத்தை அனுபவிக்கும்போது பின்பற்ற வேண்டிய நெறிமுறைகள், வரிகள், சலுகைகள் போன்றவை இடம்பெறுகின்றன.

மன்னனின் உத்தரவு (ஓலை) மேன்மலைப் பழையனூர் நாட்டின் நாட்டார்க்கும் பிரமதேயங்களின் தலைவர்களுக்கும் அனுப்பிவைக்கப்பட்டது.

அரசனின் ஆணை புரவுவரித் திணைக்கள அலுவலகத்தின் அலுவலர்களான வரிப் பொத்தகம், முகவெட்டி, வரிப்பொத்தகக் கணக்கு, வரியிலீடு, பட்டோலை, கீழ்முகவெட்டி, ஆகியோரால் நன்கு ஆராயப்பட்டு உரிய பதிவேடுகளில் குறிக்கப்பட்டது. மன்னனின் நேர்முக ஆணை ஆறாம் ஆட்சியாண்டு நாள் 88 என முன்பே குறிப்பிட்டோம். அலுவலர்கள் இரண்டு நாள் கழித்து ஆவணங்களில் பதிவு செய்துள்ளார்கள். அதாவது மன்னனின் ஆறாவது ஆட்சியாண்டு நாள் 90 இல் பதிவு செய்துள்ளனர்.

மன்னனின் உத்தரவு தானம் பெறும் கோயிலுடைய ஊருக்கு வந்து சேர்ந்தபின் சில நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு அதற்குரிய ஊரவைப் பதிவேடுகளில் குறிக்கப்பட்டு, அரசனின் உத்தரவு செயல்முறைக்கு வந்துள்ளது. மன்னன் வாய்மொழியாக உத்தரவிட்ட ஆணை பல நாள்கள் கழித்துச் செயல்முறைக்கு வந்துள்ளது. இந்த விவரம் செப்பேட்டின் 797 ஆம் வரிமூலம் அறிகிறோம். தற்போது எப்படி ஓர் அரசாணை பிறப்பிக்கப்பட்டுச் செயல்பாட்டுக்கு வருகிறதோ அவ்வாறே முன்பும் இருந்துள்ளது. ஆணை நடைமுறைக்கு வரச் சிறிது காலம் தேவைப்பட்டுள்ளது.

பழையனூர் நாட்டு நாட்டார்க்கும் பிரமதேயக் கிழவர்க்கும், தேவதானம், பள்ளிச்சந்தம், கணி முற்றூட்டு, வெட்டிப்பேறு, பழவறச்சாலா போகமுள்ளிட்ட ஊர்களிலார்க்கும் நகரங்களிலார்க்கும் ஓலை அனுப்பி வைக்கப்பட்டது. அதாவது கடிதம் அனுப்பி வைக்கப்பட்டது.

அரசன் வாய்மொழியாகப் பிறப்பித்த ஆணையை **ஓலை** என்ற அதிகாரியான **நாராயணன் கற்றளியான**[18] **உத்தம சோழ தமிழதரையன்** எழுதினான். இவன் உய்யக் கொண்டார் வள நாட்டில் உள்ள திருவழுந்தூர் நாட்டு, துளார் என்ற ஊரைச் சேர்ந்தவன் ஆவான். கரந்தைச் செப்பேடு களிலும் துளார் வந்துள்ளது. செப்பேட்டின் காலத்தில் ஓலை நாயகங்களாக நால்வர் இருந்துள்ளனர்.

1. நித்தவினோத வளநாட்டுப் பாம்புணிக் கூற்றத்து **அரைசூருடையான் ஈராயிரவன் பல்லவனான உத்தமசோழ பல்லவரையன்.**

2. உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்துக் **கிருஷ்ணன் இராமனான இராசேந்திர சோழ பிரம மாராயன்.**

3. உய்யக்கொண்டார் வளநாட்டு அம்பல் நாட்டுக் குறும்பில்கிழான் அரையன் **சீ கண்டனான மீனவன் மூவேந்த வேளான்.**

4. இராஜேந்திர சிங்க வளநாட்டுக் குறுக்கை நாட்டுக் கடலங்குடி துவேதை கோமபுரத்துத் **தாமோதிரபட்டன்**

ஆகியோர் அவர்கள் ஆவார்கள்.

இந்நால்வரும் ஒப்பு நோக்கியபின் அரச கருமம் ஆராயும் மூவர் இதனை ஆராய்ந்தனர். அம்மூவரின் பெயர்கள் வருமாறு:

1. உய்யக்கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாட்டுக் **காஞ்சிவாயிலுடையான் உதயதிவாகரன்.**

2. **தில்லையாளியான இராஜகேசரி மூவேந்த வேளான்.**

3. பேராவூர் நாட்டைச் சேர்ந்த தேவன் குடையான் மாணிக்கம் **எடுத்த பாதமான சோழ மூவேந்த வேளான்.**

**மத்தியஸ்தராக இருந்த மூவர் வருமாறு:**

1. இராஜேந்திர ஸிம்ம வளநாட்டுத் [19]தனியூர் ஸ்ரீ வீரநாராயணச் சதுர்வேதி மங்கலத்துக் **கந்தாடை திருவெண்காடுபட்டன்.**

2. [20] கேரளாந்தகச் சதுர்வேதிமங்கலத்து **நராக்கன் மாராயன்.**

3. பசலைத் **தியம்பகப் பட்டன்.**

**கருமம் ஆராயும் மூன்று அதிகாரிகளின் பெயர்கள் வருமாறு:**

1. உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு வயலூர்க்கிழவன் தத்தன் சேந்தனான ராஜேந்திர **அணுக்கப் பல்லவரையன்.**

2. இங்கண் நாட்டு ஊரிகுடையான் வேளான் **உத்தமனான இருமடி சோழ விழுப்பரையன்.**

3. திருவாரூர்க் கூற்றத்துத் **தியன்குடையான் காடன் கருணாகரனான அபிமான மேருமூவேந்த வேளார்.**

மேற்கண்ட அலுவலர்கள் ஆணையை அதில் கண்டவாறே வரியிலிட்டுக் கொள்க என்று புரவுவரித் திணைக்களத்தார்க்குக் கூறினர்.

கருமம் ஆராயும் மூன்று அதிகாரிகளின் பெயர்களுடன் அவர்களுடைய ஊர்களும், பட்டப்பெயர்களும் காண்கிறோம். **விழுப்பரையன், பல்லவரையன், மூவேந்த வேளான்** என்பன பட்டப் பெயர்கள் எனலாம்.

***புரவுவரித் திணைக்களம் என்ற பதவியில் இருவர் இருந்துள்ளனர். அவர்கள் வருமாறு:***

1. ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து எயில்கோட்டத்து எயில்நாட்டுக் [21]கச்சிப் பேட்டு நகரம் **வெட்சிக்கிழான் சோலைகுமரன்.**

2. அருமொழி தேவ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்துக் **கச்சிரமுடையான் மூர்த்தி வீதிவிடங்கன்.**

வரிப்பொத்தகம் என்னும் பதவியில் இருந்த அருமொழித் தேவ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்துக் [22]கச்சிரமுடையான் **பகவணங்கி,** முகவெட்டியாக இருந்த **ஆலங்குடையான் தெற்றி வெண்காடன்,** வரிப்பொத்தகக் கணக்கு என்ற அலுவலர்களான **துகவூருடையான் தாமோதிரன் சாராளன், கருமாணிக்கன் சற்பன்,** வரியிலீடு என்ற பதவியில் இருந்த ராஜராஜ வளநாட்டுக் காந்தான நாட்டுக் கோனூருடையான் **சூலபாணி அருமொழி,** பட்டோலை என்னும் அலுவலர்களான மருகல் நாட்டு எயினனூருடையான் **வாமன நாராயணன், வல்லங்கிழான் மானன் கம்பன், உலக்கையூருடையான் ஆச்சனங்காடி,** கீழ்முகவெட்டி என்ற பதவியில் இருந்த **தேவடிக் கமலன் அய்யாறன் தேவர் கண்டன் [23]கூத்தாடி நானூற்றுவன்,** ஆகியோர் கூடி இறையிலியாக வரி என்னும் பொத்தகத்தில் பதிந்து கொடுத்தனர். கூத்தாடி என்ற சொல் நடராசரையும், நாடக நடிகரையும் சுட்டும்.

மேலே குறிப்பிடப்பட்ட அதிகாரிகள் ஆணையை ஒப்பிட்டுப் பார்த்து ஒப்பமிட்டுக் கீழ்நிலை அதிகாரிகளுக்கு உத்தரவை அனுப்பி வைத்தனர்.

1. ஜெயங்கொண்ட சோழமண்டலத்தில் கருமமாராயும் [24]சிற்றாமூருடையான் பெருமான் அம்பலத்தாடியான உதய மார்த்தாண்ட மூவேந்த வேளான் (இவன் சோழமண்டலத்து அருமொழித் தேவ வளநாட்டு [25]வண்டாழை வேளூர்க் கூற்றத்துச் சிற்றாமூரைச் சேர்ந்தவன்)

2. ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துத் தனியூர் ராஜராஜ சதுர்வேதி மங்கலத்துச் சிறுநானலூர் சேந்தபிரான்பட்டன் (புரவுவரித்

திணைக்களத்தில் இருந்தவன் இவன் ஆவான்). (இவனும் அடுத்து வருபவனும் பட்டன் என்று குறிப்பிடப்படுவதால் பிராமணர்கள் எனலாம்.)

3. புரவுவரித் திணைக்களம் ஜெயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க்கோட்டத்து [25]மாங்காடு நாட்டுத் **திருமழிசைகிழான், மானன் அரியேறுபட்டன்**

என இவர்கள் பெண்யானையைக் கொண்டு பழையனூர் எல்லையை வரையறை செய்ய அனுப்பப்பட்டவர்கள் ஆவார்கள். இவர்களோடு உள்ளூர்ப் பணியாளர்களும் உடனிருந்து கல்லும் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து தந்துள்ளனர்.

நாட்டுச் சபையார் அரசனின் திருமுகம் வருவதைக் கண்டு எதிரெழுந்து சென்று தொழுது இரு கைகளாலும் அதனை வாங்கினர். தலையின்மேல் வைத்துக் கொண்டனர். ஓலையில் குறிப்பிட்டதற்கிணங்க எல்லைகளின் வழியே பிடியை நடப்பித்து எல்லைகளில் கல்லும் கள்ளியும் நட்டனர். மன்னன் ஆணைக்கு மதிப்பளித்த காலம் அக்காலம். [27]

## மெய்க்கீர்த்தி

இச்செப்பேட்டுத் தொகுதியில் 130 வரிகளுக்குப் பின்னர் மன்னனின் மெய்க்கீர்த்தி தொடங்குகிறது. மன்னனுடைய ஆறாவது ஆட்சியாண்டு என்பதால் மெய்க்கீர்த்தி 12 வரிகளில் சுருக்கமாக முடிந்து விடுகிறது. இராசேந்திர சோழனின் ஆறாவது ஆட்சியாண்டிற்குப் பின்னரே பல போர்கள் நடந்துள்ளதால் மெய்க்கீர்த்தியில் பல போர்கள் இடம்பெறவில்லை. ஆயின் வடமொழிப் பகுதியில் பல போர்கள் கூறப்பட்டுள்ளன.[28] எனவே வடமொழிப்பகுதி தமிழ்ப்பகுதியைக் காட்டிலும் காலத்தால் பிற்பட்டது என்பது உறுதியாகிறது.

## செப்பேட்டில் இடம்பெறும் ஊர்கள், மரங்கள், நீர் நிலைகள்

தேவதான நிலங்களின் எல்லைகள் வரையறை செய்தபோது பல்வேறு ஊர்கள், நீர்நிலைகள், மரங்கள், பாறை, புற்று, குழி, மடு, தெற்றி, எல்லைக்கல் ஆகியவை கூறப்பட்டுள்ளன. தான ஊரின் மூன்று திசைகளிலும் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலமும் நான்காவது திசையின் எல்லையில்[29] நித்த வினோத சதுர்வேதி மங்கலமும் இருந்துள்ளன.

**மங்கலம், மண்ணாலைய மங்கலம்** என வேறு இரண்டு மங்கலங்கள் கூறப்பட்டுள்ளன. மணையில், மேற்பாடி என்னும் ராஜாச்சரியபுரம், பெருமூர்,

திருப்பாச்சூர், தொழுகூர், மேலூர், சக்கர நல்லூர், கீரைநல்லூர், காரைப்பாக்கம், மிதுகூர், ஆனைப்பாக்கம், உப்பூர், பொளிப்பாக்கம், கயப் பாக்கம், கூளபாடி, நாரைபாடி ஆகிய ஊர்கள் கூறப்பட்டுள்ளன. பெரும்பாலான ஊர்கள் சிறு சிறு மாற்றங்களுடனோ மாற்றமின்றியோ தற்போதும் வழங்கப்படுகின்றன. சான்றாகக் கூளபாடி என்ற ஊர் **கூடல்வாடி** எனவும் **நாரைபாடி** என்ற ஊர் **நார்த்தாவடா** எனவும் **மண்ணாலைய மங்கலம் மருதவல்லிபுரமாகவும் தொழுகூர் – தொழுதாவூராகவும்** அழைக்கப்படுகின்றன. **கீரைநல்லூர், சக்கர நல்லூர், காரைப்பாக்கம், மிதுகூர், ஆனைப்பாக்கம்** எவ்வித மாற்றமும் இன்றி அழைக்கப்படுகின்றன. மணையில் என்பது **மணவில்** எனவும் வழங்கப்பட்டுள்ளது. ஊராகவும் நாடாகவும் கோட்டமாகவும் மணவில் இருந்துள்ளது. இராஜராஜன் மேலைச் சாளுக்கிய மன்னனை வென்று **ராஜாச்ரியன்** என்ற பட்டப்பெயரைப் பெற்றான். இப்பெயரின் அடிப்படையில் மேற்படி ஊருக்குப் பிரதிநாமமாக **ராஜாச்ரியபுரம்** ஏற்பட்டது.

திருவள்ளூர் அருகே உள்ள **திருப்பாச்சூர்**, மிகப்பெரிய **சிவன்கோயில்** உள்ள தேவாரத்தலமாகும். **பொளிப்பாக்கம்** என்ற ஊர் விக்கிரம சோழனுடைய ஏழாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டில் இடம் பெறுகிறது. மயிலாப்பூரைச் சேர்ந்த வணிகன் ஒருவன் சபையிடமிருந்து பொளிப்பாக்கத்தில் நிலம் விலைக்கு வாங்கி உள்ளான். பெருமூர் என்ற ஊர் விக்கிரம சோழனுடைய ஆறாவது ஆட்சியாண்டின்போது பெருமூரான ராஜநாராயணச் சதுர்வேதி மங்கலமாக அழைக்கப்பட்டுள்ளது. (467 of 1905). நடுவில்மலை பெருமூர் என்று ஊரில் குன்று இருந்த விவரமும் செப்பேட்டில் கூறப்படுகிறது.

மூன்றாம் குலோத்துங்கனுடைய 23 ஆவது ஆட்சியாண்டில் இடம் பெறும் முதுகூர், செப்பேட்டில் இடம் பெறும் மிதுகூராக இருக்கலாம். உப்பூர், கயற்பாக்கம் ஆகிய ஊர்களைத் தற்போது அடையாளம் காண இயலவில்லை.[30] (சு. இராசவேலு – வரலாற்றில் திருவாலங்காடு).

எல்லைகள் வரையறை செய்தபோது பதினாறு வகையான மரங்கள் இருந்துள்ளன. அம்மரங்களின் பெயர்கள் வருமாறு:

கடம்பம் (கடம்பவனம் என்பது மதுரையாகும்), வன்னி (திருவான்மியூர் திருக்கோயில் தலவிருட்சம் வன்னி) கருங்காலி (எட்டிமரம்), உகாய் (உகா எனவும் ஒகை எனவும் வழங்கப்படும்), இலந்தை (முள் மரவகை), வேப்ப மரம் (வேம்பு, வேம்பை எனவும் வழங்குவர்), வன்கரை (பாலை மரம்), வெளுங்கு (வெளிற்று மரம், முருக்கு), செம்மணிச்சை (செம்மரம்), விளா (விளாமரம்), ஆத்தி (சோழருடைய அடையாளப் பூ),

கருவேலம், உசிலை (உசில் சிக்கிரி மரம்), புளி, வன்மரை (வன்மரம்), வெள்வேல் (வேல மரம் எனலாம்) என 16 மரங்களின் பெயர்கள் உள்ளன. மேற்கண்ட மரங்கள் பல இடங்களில் இருந்துள்ளன. மரம் வளர்ப்பதே புண்ணியமாக நம் முன்னோர் கருதினர்.

குறுந்துறை மடு, கீழ்க்கரை, ஜனநாத புத்தேரி, புறவாய்க்கரை, வெள்ளக்கானின் கரை, பழையனூர் ஏரி, குறுந்துறை வாய்க்கால், பழவாய்க்கால், அமண் வாய்க்கால், மேட்டு வாய்க்கால், கூளி வாணியன் ஏரி, திருமஞ்சனக்குளம், மொட்டைக்கிணறு, அமண்பட்டிக்கிணறு ஆகிய நீர் நிலைகள் தேவதான ஊரில் இருந்துள்ளன. ஜனநாத புத்தேரி முதலாம் இராஜராஜனுடைய ஜனநாதன் என்ற பெயரில் ஏற்பட்ட ஏரியாகும். இன்றுள்ள பழையனூர் ஏரி செப்பேட்டிலும் உள்ளது. சமணருடன் தொடர்புடைய அமண் வாய்க்கால், அமண்பட்டிக் கிணறு முன்பு இருந்துள்ளன. கோயில் வழிபாட்டுக்குரிய குளம் திருமஞ்சனக் குளம் என வழங்கப்பட்டுள்ளது. அத்தியோட்டைக் குழி, வெள்ளைக்குழி என்பன பள்ளங்களின் பெயர்கள் ஆகும். செஞ்சியார் தெற்றி என்பது ஒரு மேட்டுப் பகுதியாகும். செஞ்சிப்பாக்கம் என்ற ஊரும் தற்போதுள்ளது. இரட்டைக்கயல் பொறித்த கற்பாறை ஒன்று கூறப்படுகிறது. எல்லைக் கல்போல் இது பயன்பட்டிருக்கலாம். பாண்டியரின் சின்னத்தையும் இது சுட்டக் கூடும். பொளிப்பாக்க மகாதேவர் கோயில் ஒன்றும் சுட்டப்படுகிறது. கூளி என்ற பெயருடைய வாணியனின் பெயரில் ஓர் ஏரி இருந்துள்ளது.

## சபையின் செயல்கள்

அறவோலை செய்விக்கும் பணியில் நாட்டாருடன் மத்தியஸ்தன் ஆயிரவன் ரங்கனான சிங்களாந்தகன் தன்மப்பிரியனும் ஈடுபட்டுள்ளான். ஊரார் (ஊரவை என்க) சொல்ல ஊர்க்கரணத்தான் சிவபிராமணன் காஸ்யபன் பூபதி திருவொற்றியூரன் அடிகள் என்பவர் கிராம ஆவணத்தை எழுதியுள்ளார். அறவோலை செய்யும் பணியில் பழையனூர் ஊரவையும் சிங்களாந்தகச் சதுர்வேதி மங்கலமும் ஈடுபட்டுள்ளன.

மேலூர் நாட்டு நித்தவினோத சதுர்வேதி மங்கலத்தாரும், இவ்வூரின் கரணத்தான் மத்தியஸ்தன் **ஆயிரவனையன் பெருமானான ஸ்ரீகிருஷ்ணன் உத்தம பிரியனும்** உதவி புரிந்துள்ளனர். ஆணை தயாரிக்கும்போது இருந்த அதிகாரிகள் போன்று அதனை நிறைவேற்றி வைக்கும்போது பல அதிகாரிகள் இருந்துள்ளனர். ஒரு சிலர் உள்ளூரில் மட்டும் இருந்த அலுவலர்கள் எனலாம். மன்னனின் ஏழாவது ஆட்சியாண்டு நாள் 150 இல் [31] வரியிலிடப்பட்டது என்று தமிழ்ப்பகுதி முடிகிறது. மூன்று மத்தியஸ்தர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. இம்மூவரும் வெவ்வேறு

நாடு, ஊர்களைச் சேர்ந்தவர்கள் ஆவார்கள். இம்மூவருடன் மேலும் மூவர் கூடி அறவோலை செய்துள்ளனர்.

மீண்டும் வரியிலிடுதல் பணியில் முன்கூறப்பட்ட சில அதிகாரிகள் ஈடுபட்டதைச் செப்பேட்டுத் தொகுதி குறிப்பிடும்போது அவர்களின் இருப்பிடங்களையும் பதவிகளையும் இயற்பெயர்களையும் பட்டப் பெயர்களையும் ஒருங்கே சுட்டுகின்றது.

உய்யக்கொண்டார் வளநாட்டைச் சேர்ந்த வெண்ணாட்டுக் கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து[32] நராக்கன் மாராயன் ஜநநாத நாரான ராஜேந்திர சோழ பிரமாதிராஜன், வயலூர்க் கிழவன் தத்தன் சேந்தனான ராஜேந்திர சோழ அணுக்கப் பல்லவரையன், பேராவூர் நாட்டுக் காஞ்சி வாயிலுடையான் உதய திவாகரன், தில்லையாளியான ராஜராஜ மூவேந்த வேளான், ராஜேந்திர சிங்க வளநாட்டுத் திருவிந்தளூர் நாட்டுப் பரகேசரி நல்லூருடையான் மாணிக்கன் எடுத்தபாதமான சோழ மூவேந்த வேளான், பாண்டிகுலாசனி வளநாட்டு [33] ஏரியூர்நாட்டு இடைக்குடையார் வெண்ணாயில் கூத்தனார் ஆகியோர் வரியிலிட்டுக் கொள்க எனப் புரவுவரித் திணைக்களத்தாருக்குக் கூறினர். (திணைக்களம் என்ற சொல் இலங்கையில் இன்றும் உள்ளது.)

புரவுவரித் திணைக்களத்தில் கண்காணியாக இருந்த மணவில் கோட்டத்துப்[34] புரிசைநாட்டுப் பிச்சிப்பாக்கம்முடையான் காளி ஏகாம்பரனும் புரவுவரித் திணைக்களம் அருமொழி தேவ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்துக் கச்சிரமுடையான் மூர்த்தி வீதிவிடங்கனும் பாண்டி குலாசனி வளநாட்டு மீசெங்கிளியூர் நாட்டுக் [35] கொட்டையூர்க்கிழவன் கூவாணை சீராளனும் புறக்கிளியூர் நாட்டுக் காமத மங்கலமுடையான் காஞ்சன் கொண்டய்யனும் பனையூர் நாட்டுச் சின்றியம் பாக்கமுடையான் குணமதனாச்சனும் அருமொழி தேவ வளநாட்டு ஆர்வலக்கூற்றத்து வரிப்பொத்தகமான கைச்சிரமுடையான் பகவன் அங்கியும் இடையாற்று நாட்டுக்காரிக் குடையான குடிதாங்கி யரவணையானும் ராஜராஜ வளநாட்டுக் காந்தான நாட்டு முகவெட்டியான கோனூருடையான் சூலபாணி அருமொழியும் ஆமூர்க் கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டுச் செம்பாக்கிழான் சிங்கன் அரவணையானும் புலியூர் நாட்டு[36] நுங்கம்பாக்கத் தரும்பாக்கிழான் வைகுந்தன் காடாடியும் ஊற்றுக்காட்டு நாட்டுக் கறவூருடையான் மாணிக்கன் துரந்தரனும் திருவாரூர்க் கூற்றத்து மூங்கிற்குடையான் தேவடி கமலனும் கீழ்முக வெட்டியாகப் பணியாற்றிய ஐய்யாறன் தேவர் கண்டனும் சோமராசன் தேவன் பட்டன் சீக்காவியும் வேளான் பெருமானும் செட்டித் திருவடிகளும் ஊரன் ஏறனும், கூத்தாடி நானூற்றுவனும் இருநூற்றைம்பதின்மன் அருட்டுறையும் வேறு பலரும் ஒன்றாக இருந்து வரியிலிட்டனர்.

தானமாகப் பெறப்பட்ட பகுதியைக் குறிப்பிடும்போது[37] நன்செய் நீர்நிலமும், புன்செய் நிலமும், ஊரும், ஊர் இருக்கையும், மனையும், மனைப்படைப்பையும், மன்றும், கன்றுமேய் பாழிடமும், குளமும், கொட்டகமும், புற்றும், தெற்றியும், காடும், பீடிலிகையும், களரும், உவரும், ஓடையும், உடைப்பும், ஆறும், ஆறிடு படுகையும், மீன்பயில் பள்ளமும், தேன்பயில் பொதும்பும், மேல்நோக்கிய மரமும், கீழ் நோக்கிய கிணறும், கிடங்கும், கேணியும், ஏரியும், ஏரி நீர்க்கொப்பும், நீர் பூசி நெடும்பரம்பு எறிந்து. உடும்போடி ஆமை தவழும் எல்லாவகை நிலபரப்பும் உண்ணிலம் சிறிதும் விடாமல் தேவதானமாகத் தரப்பட்டன எனக் கூறப்படுகிறது.

தானம் வழங்கப்பட்டபோது கீழ்க்காணும் வரிகள் விலக்கு அளிக்கப்பட்டன.[38] நாடாட்சி, ஊராட்சி, வட்டிநாழி, புதாநாழி, வண்ணாரப்பாறை, கண்ணாலக்காணம், குசக்காணம், இடைப் பாட்டம், தறியிறை, தரகு, தட்டார்ப்பாட்டம், மன்றுபாடு, மாவிறை, தீயெரி, விற்பிடி, வாலமஞ்சாடி, நல்லா, நல்லெருது, நாடுகாவல், ஊடுபோக்கு, இலைக்கூலம், நீர்க்கூலி, உல்கு, ஓடக்கூலி, உள்ளிட்ட கோக்கொள்ளும் வரிகள் யாவும் பழையனூர் தேவர்க்கே வழங்கப்பட்டதாக உள்ளது. கீழ்க்கண்ட உரிமைகள் தேவதான நிலங்களைப் பெற்ற கோயில் நிர்வாகிகளுக்கு வழங்கப்பட்டன.

## தானம் பெற்றோர் உரிமைகள்

1. தானம் பெற்றவர் புதுவாய்க்கால்கள் வெட்டி நீரினைப் பாய்ச்சிக் கொள்ளலாம்.
2. இவ்வாய்க்கால்களில் அந்நியர் நீர்பாய்ச்சுதலும் கட்டைகளைக் குறுக்கே இட்டு நீரைத் தேக்குதலும், ஏற்றத்தின் மூலம் நீர் பெறுதலும் கூடையால் நீர் இறைத்தலும் தடை செய்யப்பட்டன. (ஏற்றத்தின் மூலம் நீர் இறைத்தல், கூடை மூலம் நீர் இறைத்தல் சென்ற நூற்றாண்டின் இறுதியில் மறைந்து விட்டன எனலாம்.)
3. பொதுவினைக்குச் சென்னீர் பயன்படுத்தக்கூடாது. உரிமை பெற்றவர் அந்நீரை அடைத்துப் பாய்ச்சிப் பாசனத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம்.
4. பிற ஊர்களில் இருந்து இவ்வூர்க்குப் பாயும் வாய்க்கால்களின் குமிழிகளின் மூலமும் மேல்ஓடை நீரினைப் பாய்ச்சிக்கொள்ளலாம்.
5. சுட்ட செங்கற்களால் மற்றும் கூரை ஓடுகளால் மாட மாளிகைகள் கட்டிக் கொள்ளலாம். (செங்கற்களைக் கொண்டு மாளிகைகள் கட்டச் சிலருக்கு மட்டுமே உரிமை இருந்துள்ளது போலும்.)

6. துரவும் தோண்டிக் கொள்ளலாம். (துரவு – சிறு கிணறு. தோப்பு துரவு சொல்லாட்சி உண்டு.) கிணறும் வெட்டிக் கொள்ளலாம்.

7. இளமரக்காவில் தென்னை பயிர் செய்து கொள்ளலாம். (இளமரக்கா – தோப்பு அல்லது பூங்கா).

8. தமனகம், மருவெட்டிவேர், செண்பகம், செங்கழுநீர், மா, பலா, கமுகு, பனை, கொடி உள்ளிட்ட பலவகையான பயன் மரங்களும் செடி கொடிகளும் பயிரிடவும் விதை நடவும் தானம் பெற்றவருக்கு உரிமையுண்டு. (விவசாயத்தோடு தோட்டப் பயிர்களும் சோழர் காலத்தில் ஊக்குவிக்கப்பட்டுள்ளன.)

9. பெரிய செக்குகளை அமைத்துக் கொள்ளலாம் (சிறிய செக்குகள் பல இருந்தனபோலும்.)

10. இவ்வூர் நிலத்தினிடையே ஊடுருவிச் சென்று வேற்றூர்களுக்குப் போய் நீர்பாயும் வாய்க்கால்களில் உள்ள கூடுதல் நீரினைப் பாயுமாறு விடவும் வாய்க்காலைத் தூர்வாரி அகழ்ந்தெடுக்கவும் உரிமையுண்டு. (ஏரி, குளங்கள் ஆழப்படுத்துவதுபோல் வாய்க்கால்களில் _ தூர் வாருவதும் சோழர் காலத்தில் சிறப்பாக இருந்துள்ளது.)

11. வேற்று ஊர்களுக்கு உரிய நிலத்திடையே ஊடறுத்துச் சென்று இவ்வூர் நிலங்களுக்குப் பாயும் வாய்க்கால்களில் கூடுதல் நீரினைப் பாயுமாறு விடவும் வாய்க்காலினைத் தூர் வாரி அகழவும் தானம் பெற்றாருக்கு உரிமையுண்டு.

12. தேவதான ஊரில் உள்ள தென்னை, பனை மரங்களில் கள் இறக்குவதற்காக ஈழவர் மரத்தில் ஏறக் கூடாது. ஈழவர் என்போர் சிறுகுடிவேளாளர். சான்றார் எனப்படும் நாடாரின் வேறானவர் என்று நெல்லை நெடுமாறன் கூறுகிறார். ஈழவர் ஏறக்கூடாது என்பதால் வேறு சாதியார் ஏறலாம் என்றும் பொருள்படுகிறது. இளநீர் மற்றும் தேங்காய்க்காக ஈழவர் மரத்தில் ஏறலாம் என்பது என் கருத்தாகும்.

### *சிற்பிகள்*

தமிழ்ப்பகுதியின் இறுதியில் செப்பேட்டைச் செதுக்கிய சிற்பிகள் குறித்து வடமொழியில்[39] செய்யுட்கள் உள்ளன. ஓவிய மரபைச் சேர்ந்தவர்களும் காஞ்சியைப் பிறப்பிடமாகக் கொண்டவர்களுமான நான்கு சித்திரக்காரர்கள் கூறப்பட்டுள்ளனர். அரங்கன், தாமோதரன், ஆராவமிர்தன், புருஷோத்தமன் என்ற நால்வரே ஓவியக் குடியில் வந்த

சிற்பிகள் ஆவர். முதலிருவரின் அண்ணனான வாசுதேவன் பெயர் பெரியலெய்டன் செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது. இங்கே அடைமொழி மட்டும் உள்ளது. அரங்கன், தாமோதரன் இருவரும் தம்பியராவர். ஆராவமிர்தனின் மகனே புருஷோத்தமன் ஆவான். எனவே இரு குடும்பங்கள் இச்செப்பேட்டுத் தொகுதியில் கூறப்பட்டுள்ளன. பெரியலெய்டன் செப்பேட்டின்படி வாசுதேவனின் மகனாகக் கிருஷ்ணன் கூறப்பட்டுள்ளான். சிற்ப சாஸ்திரத்தில் அடி நுனி அறிந்த இவர்கள் ஓவியர் குலத்தில் பிறந்த சிறந்த பண்டிதர்களும் ஆவார்கள்.

## வரலாற்று மன்னர்கள்

திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதியின் தமிழ்ப்பகுதி சமூக வரலாற்றைப் படம்பிடித்துக் காட்டுவதுபோல் வடமொழிப்பகுதி அரசியல் வரலாற்றைக் குறிப்பிடுகிறது.[40] மிகுதியான சுலோகங்களை உடைய இவ்வடமொழிப் பகுதியில் 50 சோழ மன்னர்களின் பெயர்கள் இடம்பெறினும் 14 பேர் மட்டுமே வரலாற்றில் இடம்பெறும் அரசர்கள் எனலாம். வீர இராஜேந்திர சோழனுடைய சாரலாச் செப்பேட்டுத் தொகுதியிலும் அவனுடைய கன்னியாகுமரிக் கல்வெட்டிலும் வரலாற்று மன்னர்களின் எண்ணிக்கை மிகுதியாகும்.

## பிரசஸ்தியின் சுருக்கம்

பவானி அம்மனை முதல் சுலோகத்தில் குறிப்பிடும் கவிஞர், சோழ மரபை மூன்று விதத்தில் குறிப்பிடுகிறார். முதலில் புராண மரபும் இரண்டாவதில் சங்ககால மரபும் மூன்றாவதில் பிற்காலச் சோழர் மரபும் காண்கிறோம். சூரியனிடமிருந்து சோழமரபு தொடங்குகிறது. மனு, இக்ஷுவாகு, விகுக்ஷி, புரஞ்ஜயன், ககுத்ஸன், கக்ஷீவான், அர்யமான், அனலப்ரதாபன், வேனன், ப்ருது, துந்து மாரன், யுவனாச்வன், மாந்தாதா, முசுகுந்தன், வளபன், ப்ருதுலாக்ஷன், பார்த்தீவ சூடாமணி, தீர்க்க பாஹு, சந்திரஜித், ஸங்க்ருதி, பஞ்சபன், சத்யவிரதன், சிபி, மருத்தன், துஷ்யந்தன், பரதன் ஆகியோர் கூறப்பட்ட பின்னர், சோழன், இராஜகேசரி, பரகேசரி, சித்ரரதன், சித்ராச்வன், சித்ர தன்வா ஆகியோர் கூறப்பட்டுள்ளனர். பிறகு சுரகுருவும் வியாக்ரகேதுவும் வசுவும் விசுவஜித் என்பவரும் கூறப்பட்டுள்ளனர்.

சங்ககால மன்னர்களாகவும் பிற்கால வரலாற்றுக்கால மன்னர் களாகவும் பெருநற்கிள்ளி, கரிகாலன், கோச்செங்கணான், விஜயாலயன், ஆதித்தவர்மன், பராந்தகன், கண்டராதித்தன், அரிந்தமன் அல்லது அரிகுலகேசரி, சுந்தரசோழன், ஆதித்த கரிகாலன், உத்தம சோழன், இராசராசன், முதல் இராசேந்திரன் ஆகியோரைக் காண்கிறோம். இராசேந்திர சோழனுடைய போர்வெற்றிகளும் அம்மையப்பருக்கு அவன்

அளித்த கொடையும், பிரசஸ்தி எழுதியவரின் பெயரும் இறுதியில் இடம்பெற்றுள்ளன.

### பாவகைகள்

திருவாலங்காட்டுச் செப்பேடுகளில் வடமொழியில் கூடிய பகுதி 137 சுலோகங்களாக உள்ளது. இச்சுலோகங்களின் பாவகைகளின் பெயர்களை அறிஞர்கள் குறிப்பிட்டுள்ளனர். அணிநயங்களும் சொல்நயங்களும் சுலோகங்களில் காணலாம். (அறிஞர் வே. மகாதேவன் மற்றும் சமஸ்கிருதப் பேராசிரியர் முனைவர் சங்கரநாராயணன் குறிப்பிட்டிருந்த பா வகைகளையே இங்கே இணைத்துள்ளேன்.)

### சமஸ்கிருதப் பகுதி எழுதியவன்

திருவாலங்காட்டுச் செப்பேட்டின் வடமொழியில் உள்ள சுலோகங்களை யாத்தவன் சங்கரனின் மகன் நாராயணன் ஆவான். இவன் சிறந்த விஷ்ணுபக்தன் எனவும் தருமம் நிறைந்தவன் எனவும் கூறப்பட்டுள்ளான்.

உத்ப்ரேக்ஷா முதலிய அணிகளும் சொல்நயமும் கவிஞனின் திறனை எடுத்துக்காட்டும் வண்ணம் உள்ளன. இந்தச் செப்பேட்டில் பயின்று வந்துள்ள பாவகைகளின் பெயர்கள் வருமாறு :

| | | | |
|---|---|---|---|
| 1. & 2. | ஸ்ரக்தரா | 3. | வஸந்ததிலகா |
| 4. | இந்த்ரவஜ்ரா | 5. | ப்ரஹர்ஷிணீ |
| 6. | மாலினீ | 7. | வஸந்ததிலகா |
| 8. | த்ருதவிலம்பிதம் | 9. | ப்ரஹர்ஷிணீ |
| 10. | ஸ்வாகதா | 11. | ப்ரமிதாக்ஷரா |
| 12. | உபஜாதி | 13. | வஸந்ததிலகா |
| 14. | புஷ்பிதாக்ரா | 15. | மாலினீ |
| 16. | மந்தாக்ராந்தா | 17. | சார்தூலவிக்ரீடிதம் |
| 18. | ஸ்வாகதா | 19. | உபஜாதி |
| 20. | ஆர்யா | 21. | ரதோத்ததா |
| 22. | வியோகினீ | 23. | ஸ்வாகதா |
| 24. | உபஜாதி | 25. | உபேந்த்ரவஜ்ரா |
| 26. | ரதோத்ததா | 27. | சார்தூலவிக்ரீடிதம் |
| 28. | வஸந்ததிலகா | 29. | ஸ்வாகதா |
| 30–34. | அனுஷ்டுப் | 35 & 36. | புஷ்பிதாக்ரா |
| 37. | ஸ்வாகதா | 38. | வஸந்ததிலகா |
| 39. | புஷ்பிதாக்ரா | 40. | அனுஷ்டுப் |
| 41. | வியோகினீ | 42. | சார்தூலவிக்ரீடிதம் |
| 43. | மந்தாக்ராந்தா | 44. | புஷ்பிதாக்ரா |

| | | | |
|---|---|---|---|
| 45. | இந்த்ரவஜ்ரா | 46. | வம்சஸ்தம் |
| 47. | உபஜாதி | 48. | அனுஷ்டுப் |
| 49. | வியோகினீ | 50. | உபஜாதி |
| 51. | வஸந்ததிலகா | 52. | ரதோத்ததா |
| 53. | புஷ்பிதாக்ரா | 54. | சாலினீ |
| 55. | உபஜாதி | 56. | ஹரிணீ |
| 57. | உபஜாதி | 58. | அனுஷ்டுப் |
| 59. | புஷ்பிதாக்ரா | 60. | அனுஷ்டுப் |
| 61. | மாலினீ | 62. | த்ருதவிலம்பிதம் |
| 63. | ரதோத்ததா | 64. | ஸ்வாகதா |
| 65. | சார்தூலவிக்ரீடிதம் | 66. | அனுஷ்டுப் |
| 67. | ஆர்யா | 68. | அனுஷ்டுப் |
| 69. | மாலினீ | 70. | புஷ்பிதாக்ரா |
| 71. | சிகரிணீ | 72. | மாலினீ |
| 73. | வியோகினீ | 74. | இந்த்ரவஜ்ரா |
| 75. | உபஜாதி | 76. | புஷ்பிதாக்ரா |
| 77. | உபஜாதி | 78. | வியோகினீ |
| 79. | புஷ்பிதாக்ரா | 80. | மந்தாக்ராந்தா |
| 81. & 82. | இந்த்ரவஜ்ரா | 83& 84. | சார்தூலவிக்ரீடிதம் |
| 85. | புஷ்பிதாக்ரா | 86. | ராதோத்ததா |
| 87. | இந்த்ரவஜ்ரா | 88. | ஸ்வாகதா |
| 89,90,91. | புஷ்பிதாக்ரா | 92. | ஸ்வாகதா |
| 93. | உபஜாதி | 94–96 | புஷ்பிதாக்ரா |
| 97. | சார்தூலவிக்ரீடிதம் | 98. | இந்த்ரவஜ்ரா |
| 99&100 | உபஜாதி | 101. | வஸந்ததிலகா |
| 102. | இந்த்ரவஜ்ரா | 103&104 | வஸந்ததிலகா |
| 105.&106. | புஷ்பிதாக்ரா | 107. | மாலினீ |
| 108. | ஸ்வாகதா | 109. | உபஜாதி |
| 110. | உபேந்த்ரவஜ்ரா | 111&112. | புஷ்பிதாக்ரா |
| 113. | வியோகினீ | 114–116. | புஷ்பிதாக்ரா |
| 117. | மஞ்ஜுபாஷிணீ | 118. | இந்த்ரவஜ்ரா |
| 119. | உபஜாதி | 120. | வியோகினீ |
| 121. | அனுஷ்டுப் | 122&123 | வியோகினீ |
| 124. | அனுஷ்டுப் | 125. | சார்தூலவிக்ரீடிதம் |
| 126. | உபஜாதி | 127. | சார்தூலவிக்ரீடிதம் |
| 128.–130 | அனுஷ்டுப் | 131. | ஆர்யா |
| 132.–134 | அனுஷ்டுப் | 135. | ஆர்யா |
| 136. | அனுஷ்டுப் | 137. | ஸ்ரக்தரா |

## திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதியில் இடம் பெற்றுள்ள அரசர்கள்

சோழர்களின் செப்பேடுகள் யாவற்றிலும் வடமொழிப் பகுதியில் சோழ மன்னர்களின் பெயர்களைக் காணலாம். முதலில் புராண அரசர்களும் இரண்டாவதாகச் சங்ககால மன்னர்களும் மூன்றாவதாக வரலாற்று வேந்தர்களும் கூறப்பட்டுள்ளனர். வரலாற்று வேந்தர்களுக்குக் கல்வெட்டுகள், இலக்கியங்கள், காசுகள் மற்றும் சிற்பங்கள் உள்ளன. சோழர் செப்பேடுகளில் முத்திறத்து அரசர்களின் எண்ணிக்கையிலும் முறைமையிலும் சிற்சில வேறுபாடுகள் உள்ளன. திருவாலங்காட்டுச் செப்பேட்டுத் தொகுதியில் இடம் பெற்றுள்ள அரசர்களின் பெயர்களையும் அவர்களைக் குறிப்பிடும் சுலோகங்களின் எண்களையும் ஈண்டுக் காண்போம்.

| தேவஅரசர் | சுலோக எண் |
|---|---|
| சூரியன் | 3 |

**புராண அரசர்கள்**

| | | |
|---|---|---|
| 1. | மனு | 4 |
| 2. | இக்ஷ்வாகு | 5 |
| 3. | விகுக்ஷி | 6 |
| 4. | ககுஸ்தன் | 7–8 |
| 5. | கக்ஷிவான் | 9 |
| 6. | அர்யமான் | 10 |
| 7. | அனலப்ரதாபன் | 11 |
| 8. | வேனன் | 12 |
| 9. | ப்ருது | 13 |
| 10. | துந்துமாரன் | 14 |
| 11. | யுவனாச்வன் | 15 |
| 12. | மாந்தாதா | 16 |
| 13. | முசுகுந்தன் | 17 |
| 14. | வளபன் | 18 |
| 15. | ப்ருதுலாக்ஷன் | 19 |
| 16. | பார்த்திவசூடாமணி | 20 |
| 17. | சந்த்ரஜித் | 21–22 |
| 18. | ஸங்க்ருதி | 23 |
| 19. | பஞ்சபன் | 24 |
| 20. | சத்யவிரதன் | 25 |

| புராண அரசர்கள் | | சுலோக எண் |
|---|---|---|
| 21. | ருத்ரஜித் | 26 |
| 22. | சிபி | 27 |
| 23. | மருத்தன் | 27 |
| 24. | துஷ்யந்தன் | 28 |
| 25. | தௌஷ்யந்தி (பரதன்) | 28 |
| 26. | சோழன் | 28–29 |
| 27. | ராஜகேஸரி | 30 |
| 28. | பரகேஸரி | 30–32 |
| 29. | சித்ரரதன் | 33 |
| 30. | சித்ராச்வன் | 33 |
| 31. | சித்ரதன்வன் | 33–35 |
| 32. | ம்ருத்யுஜித் | 36 |
| 33. | வ்யாக்ரகேது | 37 |
| 34. | நரேந்த்ரபதி | 38 |
| 35. | வஸு | 39 |
| 36. | விச்வஜித் | 40 |

**சங்ககால வேந்தர்கள்**

| | | |
|---|---|---|
| 1. | பெருநற்கிள்ளி | 41 |
| 2. | கரிகாலன் | 42 |
| 3. | கோச்செங்கணான் | 43 |

**பிற்காலச் சோழ அரசர்கள்**

| | | |
|---|---|---|
| 1. | விஜயாலயன் | 44–46 |
| 2. | ஆதித்தன் | 47–49 |
| 3. | பராந்தகன் | 50–53 |
| 4. | இராஜாதித்தன் | 54 |
| 5. | கண்டராதித்தன் | 54 |
| 6. | அரிந்தமன் | 54 |
| 7. | (இரண்டாம்) பராந்தகன் | 56–66 |
| 8. | ஆதித்த கரிகாலன் | 67 |
| 9. | மதுராந்தகன் (உத்தமசோழன்) | 69 |
| 10. | இராசராசன் | 69 |
| 11. | மதுராந்தகன் (இராசேந்திரன்) | 70 முதல் இறுதிவரை |

# தானம் வழங்கப்பட்ட நிலங்களின் எல்லைகள்

செப்பேடுகளில் தானம் பெறுபவர் அல்லது பெறுபவர்களின் விவரம் கூறியபின் தானமாக அளிக்கப்பெறும் நிலங்களின் எல்லைகள் – நான்கு திசைகளிலும் உள்ள நிலங்கள், மரங்கள், நீர் நிலைகள், குன்றுகள், புற்றுகள் விரிவாகக் கூறப்படும். இங்கே திருவாலங்காட்டு அம்மையப்பருக்கு வழங்கப்பட்ட நிலங்களின் முழுவிவரம் கூறப்படுகிறது. தொடர்ச்சியாகச் செப்பேடுகளில் உள்ள வாசகங்களே பத்திகள் பிரிக்கப்பட்டு இங்கே இடம்பெறுகின்றன.

பழையனூர்க்குக் கிழக்கெல்லையாக நடுவின்மலைப் பெருமூர் நாட்டின் சிங்களாந்தகச் சருப்பேதிமங்கலத்துப் படாகைப் பெருமூர்நாட்டுப் பெருமூர் மேலெல்லையும் மேற்கண்ட ஊரின் படாகை அந்த நாட்டைச் சேர்ந்த கூளபாடி தென்னெல்லையும் சேர்ந்த இடத்தில் பழையனூரின் வடகிழக்கு மூலையில் கடம்ப மரத்தோடு நின்ற திடலில் எல்லையைத் துவங்கினர். இதனை இடப்புறமாகக்கொண்டு இந்தப் பெருமூரின் மேற்கெல்லை தானிருந்தவாறே தெற்கு நோக்கிச் சென்றனர்.

மேற்கண்ட ஊரின் படாகை அந்த நாட்டின் நாரைபாடி வடமேற்கு மூலையில் நின்ற வன்னி மரத்தை அடைந்தனர். அதற்கு மேற்கு இன்னும் அதனை இடப்புறமிட்ட நாரைபாடி மேற்கெல்லை தானிருக்கும் நிலையிலே தெற்கு நோக்கிச் சென்றனர். நாரைபாடியின் கிழக்கெல்லையும் அதன் படாகைப் பழையனூர் நாட்டு மங்கலத்து வடகிழக்கு மூலையும் சேர்ந்த இடத்திலுள்ள குழியின் மேற்குக் கரை நின்ற உகாய்மரத்தை அடைந்தனர். அதற்கு மேற்கு மேலும் அதனை இடப்புறமிட்டு அந்த மங்கலத்தின் வடக்கெல்லைதானிருக்கும் நிலையில் வடமேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் சென்றனர்.

அந்த எல்லையில் பழயனூர்க்கும் பெருமூர்க்கும் மங்கலத்திற்கும் பாயும் குறுந்துறை என்னும் மடுவை அடைந்தனர். அதற்கு வடக்கும் மேலும் அந்த மடு மேல்நடை நீர்பாயப் பெறுவதாக அதனை வலப்புறமிட்டு அந்த மடுவின் கிழக்குக் கரையே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் சென்றனர். மடுவின் கிழக்குக் கரையிலிருக்கும் புற்றை அடைந்து மேற்கு மேலும் அதனை வலப்புறமிட்டு அதன் கீழ்க்கரையே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர். அதன் கீழ்க்கரையில் இருக்கும் கடம்பமரத்தை அடைந்தனர்.

மேற்கு இன்னும் அதனை வலத்திட்டுத் தெற்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர். அந்த மடுவின் கிழக்குக் கரையிலிருக்கும் வேப்ப மரத்தோடு நிற்கும் புற்றை அடைந்தனர். அதற்கு மேற்கு இன்னும் தெற்கு இன்னும் அதனை வலத்திட்டு அதன் கிழக்குக்

கரையில் கிழக்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர். அதன் கீழ்க்கரை நின்ற பிராய்மரத்தை அடைந்து அதற்குத் தெற்கு மேலும் மேற்கு இன்னும் அந்தப் பிராயை வலப்புறமிட்டு அதன் கிழக்குக் கரையே சென்றனர். அது தானிருந்தவாறே கிழக்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் சென்றனர்.

மங்கலத்தின் மேற்கெல்லையில் உகாய்மரத்தோடு நின்ற புற்றை அடைந்தனர். தெற்கு இன்னும் மேற்கும் இதனை வலப்புறமிட்டு அந்த மடுவின் கிழக்குக் கரையே சென்றனர். அந்த எல்லை தானிருந்தவாறே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர்.

மங்கலத்துத் தென்மேற்கு மூலையும் முன்சொன்ன ஊர்ப் படாகை மணையில்நாட்டு மணையில் என்னும் சிற்றூரின் வடக்கு எல்லையும் கூடின இடத்தை அடைந்தனர். அதற்கு மேற்கு இன்னும் அதன் கிழக்குக் கரையே இந்த மணையில் நாட்டின் வடக்கெல்லை தானிருந்தவாறே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் சென்று அந்த மடுவின் கிழக்குக் கரை உகாய் மரத்தோடு நின்ற புற்றை அடைந்து அதற்கு மேற்கும் சென்று கிழக்கெல்லையாகக் குறித்தனர்.

தென்பாற்கெல்லையாக அந்தப் புற்றை வலப்புறமிட்டு மணையில்நாட்டு வடக்கெல்லை தானிருந்தவாறே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர். மணையிலிருந்து பழையனூர் செல்லும் வழியை அடைந்தனர். அதற்கு மேற்கு இன்னும் வடக்கு மற்றும் அந்த வழியை ஊடறுத்து அந்த எல்லைதானிருந்தவாறே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் சென்றனர். இந்த எல்லையில் நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர். அதற்கு வடக்கு, மேற்கு மற்றும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானிருந்தவாறே தென்மேற்கு நோக்கிச் சென்றனர்.

மணையில் ஊரின் வடமேற்கு மூலையும் அவ்வூரின் படாகை மணையில் நாட்டின் மண்ணாலைய மங்கலத்து வடகிழக்கு மூலையும் கூடும் இடத்தை அடைந்தனர்.

வடக்கு இன்னும் அந்த மண்ணாலைய மங்கலத்து வடக்கெல்லை தானிருக்கும்படியே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர்.

அந்த எல்லையில் நின்ற விளாமரத்தை அடைந்து அதற்கு வடக்கு மேலும் அதனை இடத்திட்டு அந்த எல்லையில் திருப்பாசூரிலிருந்து மேற்பாடியென்னும் ராஜாச்ரயபுரத்துக்குப் போன பெருவழியை அடைந்தனர்.

அந்த எல்லை தானிருக்கும்படியே பெருவழியாக மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் சென்றனர். இந்த எல்லையில் கடம்பங்குழி என்னும் குழியை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அந்தக் குழியை வலத்திட்டு அந்த எல்லை தானிருந்தவாறே தென்மேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர். இந்த எல்லையில் தொழுக்கட்டையோடு நின்ற புற்றை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே அந்தப் பெருவழியே தென்மேற்கு நோக்கிச் சென்று மண்ணாலையமங்கலத்து வடமேற்கு மூலையும் அவ்வூரின் படாகைப் பழையனூர் நாட்டுத் தொழுகூரின் வடகிழக்கு மூலையும் கூடின இடத்தில் நிற்கும் ஆத்தி மரத்தை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டுத் தொழுகூரின் வடக்கெல்லை தானிருக்கும்படியே இந்தப் பெருவழியே தென்மேற்கு நோக்கிச் சென்றனர். இந்த எல்லையில் நின்ற கருவேலமரத்தை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் இதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கிச் சென்று பழையனூர் ஜனநாதப்புத்தேரி என்னும் ஏரியின் புறவாய்க்கரை வெள்ளம் வெளியேறாமல் அடைத்த வெள்ளக்கானின் கரையை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அந்தக் கரையை ஊடறுத்து ஏறினர். அந்த எல்லை தானிருந்தவாறே அந்தப் பெருவழியே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்று இவ்வெல்லையில் நின்ற வேம்பை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டு இந்த எல்லை தானுள்ளவாறே இந்தப் பெருவழியே மேற்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் உள்ள திடலை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே அந்தப் பெருவழியே தென்மேற்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் வட்டக்குழியை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அந்தக் குழியை இடத்திட்டு இந்த எல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர். தொழுகூரின் வடமேற்கு மூலையும் மேன்மலை மேலூர் நாட்டு நித்தவினோதச் சதுர்வேதிமங்கலத்துப் படாகைக் காட்டுக்குமுண்டூரின் கிழக்கெல்லையும் கூடும் இடத்தில் நிற்கும் வேம்பை அடைந்து அதற்கு வடக்கும் சென்று தெற்கெல்லையாகக் குறித்தனர்.

இதன் மேற்கெல்லையாகக் காட்டுக்குமுண்டூரின் கிழக்கெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் உகாமரத்தோடு நின்ற புற்றை அடைந்து அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று காட்டுக்குமுண்டூரிலிருந்து பழையனூர் ஏரிக்குப் பாய்ந்த குறுந்துறை என்னும் வாய்க்காலை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அந்த வாய்க்காலை ஊடறுத்து அந்த எல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் சென்றனர்.

காட்டுக்குமுண்டூரின் வடகிழக்கு மூலையும் நடுவில்மலைப் பெருமூர்நாட்டுச் சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலத்துப் படாகைப் பழையனூர் நாட்டின் கீரைநல்லூரின் தென்மேற்கு மூலையும் சேர்ந்த இடத்துக் கற்குழி என்னும் குழியை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு மேலும் அந்தக் குழியை வலத்திட்டு அந்தக் கீரைநல்லூரின் தெற்கெல்லை தானிருந்தவாறே வடகிழக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் சென்றனர். கீரைநல்லூரின் தெற்கெல்லையில் இரட்டைக்கயல் பொறித்துக் கிடந்த கற்பாறையை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் தெற்கு மேலும் இதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர்.

கீரைநல்லூரின் தென்கிழக்கு மூலையில் உள்ள எல்லைக்கல்லின் மேலருகில் நின்ற உகாய் மரத்தை அடைந்தனர். அதற்குத் தெற்கு இன்னும் கிழக்கு மேலும் அதனை இடத்திட்டு அந்தக் கீரை நல்லூரின் கிழக்கெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர்.

கீரைநல்லூர் வடகிழக்கு மூலையும் அவ்வூரின் படாகைச் சக்கரநல்லூரின் தென்கிழக்கு மூலையும் கூடின இடத்தை அடைந்தனர்.

அதற்குத் தெற்கும் கிழக்கும் இன்னும் அந்தச் சக்கரநல்லூரின் கிழக்கெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கிச் சென்று அந்த எல்லையில் நின்ற எல்லைக்கல்லேயுற்றனர். கிழக்கு இன்னும் அதனை இடத்திட்டு இந்த எல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்று அந்த எல்லையில் உகாய்மரத்தோடு நின்ற குழியை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அந்தக் குழியை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் வடமேற்கு நோக்கியும் சென்றனர். அந்த எல்லையில் ஆத்தியோடைக் குழி என்னும் குழியை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அந்தக் குழியை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் வெள்ளைக்குழி என்ற குழியை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் வடமேற்கு நோக்கியும் சென்றனர். அந்த எல்லையில் இருக்கும் வேம்போடு நின்ற கற்பாறையை அடைந்தனர். அதற்குக் கிழக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்றனர்.

சக்கரநல்லூர் வடவெல்லையும் அவ்வூரின் படாகையான காரைப்பாக்கத்துத் தென்கீழ் மூலையும் சேர்ந்த இடத்தில் நிற்கும் உசிலை என்னும் மரத்தை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்தக் காரைப்பாக்கத்துக் கீழெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் சென்று அந்த எல்லையில் நின்ற வேம்புமரத்தை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடமேற்கு நோக்கியும் சென்று அந்த எல்லையில் நின்ற புளியமரத்தை அடைந்தனர். அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டுக் காரைப்பாக்கத்தின் வடக்கெல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கியும் சென்றனர்.

காரைப்பாக்கத்து வடமேற்கு மூலையும் அவ்வூரின் படாகைப் பழையனூர் நாட்டு மிதுகூர் வடகிழக்கு மூலையும் சேர்ந்த இடத்து நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர். அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த மிதுகூரின் வடகிழக்கு மூலையும் சேர்ந்த இடத்து நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர்.

அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த மிதுகூரின் வடக்கெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் நின்ற வெளுங்குமரத்தை அடைந்தனர். அதற்கு வடக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்றனர்.

மிதுகூரின் வடக்கெல்லை மூலையும் நித்தவினோத சதுர்வேதி மங்கலத்துப் பிடாகையான முல்லைவாயில் வடகீழைமூலையும் அவ்வூரின் படாகையான ஆனைப்பாக்கத்தின் தென்கிழக்கு மூலையும் சேர்ந்த இடத்தில் இரட்டைக் கயல் பொறித்து நின்ற எல்லைக்கல்லை அடைந்தனர்.

அதற்கு வடக்கு மேலும் அதனை இடத்திட்டு அந்த ஆனைப்பாக்கத்துக்குக் கிழக்கெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் நின்ற வன்மரையென்னும் மரத்தை அடைந்தனர். கிழக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர். அந்த எல்லையில் நின்ற வெள்வேல் என்னும் மரத்தை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர். அந்த எல்லையில் செம்மணிச்சையோடு நின்ற புற்றை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கு இன்னும் அதனை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர். அந்த எல்லையில் நின்ற புற்றை அடைந்து அதற்குக் கிழக்கு இன்னும் அதனை வலத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று அந்த எல்லையில் நின்ற கருங்காலி மரத்தை அடைந்து அதற்குக் கிழக்கு நோக்கிச் சென்று மேல் எல்லையைக் குறித்தனர்.

இதற்கு வடக்கெல்லையாக அந்தக் கருங்காலிமரத்தை இடத்திட்டு அந்த எல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர்.

ஆனைப்பாக்கத்து வடகிழக்கு மூலையும் நடுவில்மலைப் பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலத்துப் படாகையான பெருமூர் நாட்டு உப்பூரின் தென்மேற்கு மூலையும் சேரும் இடத்தில் உள்ள இலந்தை மரத்தோடு நின்ற புற்றை அடைந்தனர்.

அதற்குத் தெற்கு இன்னும் அந்தப் புற்றை வலத்திட்டு உப்பூர் தென்னெல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர். அதற்குத் தெற்கும் இன்னும் அந்தப் புற்றை வலத்திட்டு உப்பூர் தென்னெல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு நோக்கிச் சென்றனர். அந்த எல்லையில் நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர்.

அதற்குத் தெற்கு இன்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற வன்கணையென்னும் மரத்தை அடைந்தனர். அதற்குத் தெற்கு இன்னும் கிழக்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற புளியமரத்தை அடைந்தனர்.

அதற்குத் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையிற் காரையோடு நின்ற புற்றை அடைந்தனர். மேற்கின்னும் இதனை

வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியும் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர்.

உப்பூர் தென்னெல்லையும் அவ்வூரின் படாகையான கங்கனேரிப்பட்டில் வடமேலை மூலையும் சேர்ந்த இடத்தில் நின்ற செம்மணிச்சை என்ற மரத்தை அடைந்தனர்.

அதற்கு மேற்கு இன்னும் தெற்கின்னும் இதனையிடத்திட்டுக் கங்கனேரிப்பட்டியின் மேற்கெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற புற்றை அடைந்தனர் மேற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியும் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற வெளுங்குமரத்தை அடைந்தனர்.

அதற்கு மேற்கு இன்னும் தெற்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் உகாமரத்தோடு நின்ற கற்பாறையை அடைந்தனர். தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியும் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையிற் கற்பாறையோடு நின்ற புளிய மரத்தை அடைந்தனர். அதற்கு மேற்கின்னும் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியும் தென் கிழக்கு நோக்கியும் சென்றனர்.

கங்கனேரிப்பட்டின் தென்னெல்லையில் செஞ்சியார் தெற்றியென்னுந் தெற்றியை அடைந்தனர். மேற்கின்னும் தெற்கின்னும் கங்கனேரிப்பட்டின் தென்னெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர். கங்கனேரிப்பட்டின் தண்ணீர் ஏரியை அடைந்தனர்.

அதற்குத் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற விளாவேயுற்றுத் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியுந் தென்கிழக்கு நோக்கியும் சென்றனர்.

கங்கனேரிப்பட்டின் தென்கிழக்கு மூலையும் அவ்வூரின் படாகையான பழையனூர் நாட்டுப் பொளிப்பாக்கத்து வடமேற்கு மூலையும் சேர்ந்த இடத்தில் நின்ற ஆத்தி மரமே அடைந்தனர். தெற்கின்னும் இதனை வலத்திட்டு இப்பொளிப்பாக்கத்தின் மேற்கெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்று கங்கனேரியென்னும் ஏரிக் கரையை அடைந்தனர். அதற்குத் தெற்கின்னும் இவ்வேரி மேனடை நீர் பாயப் பெறுவதாக இக்கரையை ஊடறுத்தேறித் தென்கிழக்கு நோக்கிச் சென்றனர்.

கங்கனேரித் தூம்பினின்றும் பழையனூர்க்கும் பொளிப்பாக்கத்துக்கும் கயற்பாக்கத்துக்கும் பாயும் பழவாய்க்காலேயுற்றுத் தெற்கின்னும் இக்கால் மேல்நடை நீர் பாயப்பெறுவதாகவும் உள்ள இதனை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு நோக்கிச் சென்றனர்.

கங்கனேரியிலிருந்து பாய்ந்த அமண் வாய்க்காலை அடைந்தனர். தெற்கின்னும் இதனை யூடறுத்துப் பொளிப்பாக்கத்தின் மேற்கெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியுங் கிழக்கு நோக்கியுஞ் சென்றனர். இவ்வெல்லையிற் புல்லலாந்தியோடு நின்ற புற்றேயுற்று மேற்கு இன்னும் தெற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர். பழையனூர்க்கும் பொளிப்பாக்கத்துக்கும் பாயும் பழவாய்க்காலை அடைந்தனர்.

அதற்குத் தெற்கின்னும் இக்கால் மேனடை நீர் பாயப்பெறுவதாக இதனை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் வேம்போடு நின்ற புற்றை அடைந்தனர்.

அதற்கு மேற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்றனர். கங்கனேரித் தூம்பினின்றும் பாய்ந்த மேட்டு வாய்க்காலை அடைந்தனர். மேற்கின்னும் அந்த வாய்க்கால் மேனடைனீர் பாயப்பெறுவதாக இதனை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாறே தென்மேற்கு நோ(க்)கிச் சென்றனர். இவ்வெல்லையிலில் நின்ற வேம்பை அடைந்தனர்.

அதற்கு வடக்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்று கங்கன் ஏரியிலிருந்து பழையனூர்க்குப் போன வழியேயுற்றனர்.

அதற்கு மேற்கின்னும் இவ்வழியே இவ்வெல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு நோக்கிச் சென்றனர். பொளிப்பாக்கத்துத் தென்னெல்லையில் நின்ற குமரன்புளியென்னும் புளியை அடைந்தனர்.

அதற்குத் தெற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே இவ்வழியே தென்கிழக்கு நோக்கிச் சென்றனர். திரிந்து வடகிழக்கு நோக்கியும் சென்றனர். தெற்கின்னும் இவ்வழியை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் கூனிவாணியன் ஏரியென்னும் ஏரியை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கின்னும் இவ்வேரியை வலத்திட்டுப் பொளிபாக்கத்துக் கீழெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்றனர்.

பொளிபாக்கத்து மகாதேவர் கோயிலின் முன்புள்ள திருமஞ்சனக் குளத்தின் கீழ்க்கரையை அடைந்து அதற்குக் கிழக்கின்னும் இதனை யிடத்திட்ட இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் மொட்டைக் கிணறென்னும் கிணற்றின் மேல்கரையை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற வேம்பை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்றனர். இவ்வெல்லையில் நொச்சிக் கிழவனென்னுஞ் செய்யின் கீழ்வரம்பில் நின்ற புற்றை அடைந்தனர். அதற்குத் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர். கயற்பாக்கத்துத் தென்மேற்கு மூலை நின்ற புற்றை அடைந்தனர். அதற்குத் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இக்கயற்பாக்கத்துத் தென்னெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுங் கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ் வெல்லையில் நின்ற வெளுங்கு மரத்தை அடைந்தனர்.

அதற்கும் தெற்கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற புற்றை அடைந்தனர். அதற்குத் தெற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் நின்ற திரள்வேம்பை அடைந்தனர்.

அதற்குக் கிழக்கின்னும் தெற்கின்னும் இவ்வேம்பை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியும் கிழக்கு நோக்கியுஞ் சென்றனர். இவ்வெல்லையில் வேம்போடு நின்ற திடலை அடைந்தனர். அதற்கு மேற்கின்னும் தெற்கின்னும் இத்திடலை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் சென்றனர்.

கயற்பாக்கத்துத் தென்கீழைமூலையும் அவ்வூரின் படாகைப் பெருமூர் நாட்டுக் கூளபாடித் தென்மேலை மூலையும் சேர்ந்த விடத்து அமண்பட்டிக் கிணறென்னும் கிணற்றை அடைந்தனர். அதற்குக் கிழக்கின்னும் தெற்கின்னும் இக்கிணற்றை வலத்திட்டு இக்கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியுஞ் சென்றனர்.

குறுந்துறை மடுவென்னும் மடுவை அடைந்து அதற்குத் தெற்கின்னும் இது மேநடை நீர் பாயப்பெறுவதாக இதனை ஊடறுத்தேறி

இவ்வெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியுஞ் சென்றனர். இவ்வெல்லையில் உகாயொடு நின்ற புற்றை அடைந்து அதற்குத் தெற்கின்னும் இப்புற்றை வலத்திட்டுக் கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியும் சென்றனர். இவ்வெல்லையில் உகாய்மரத்தோடு நின்ற புற்றை அடைந்து அதற்குத் தெற்கின்னும் இதனை வலத்திட்டுக் கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவாறே கிழக்கும் நோக்கிச் சென்று வடக்கெல்லையாகக் குறித்தனர்.

இவ்வாறு பிடி சூழ்ந்து முதலில் தொடங்கிய இடத்தை மீண்டும் அடைந்தனர்.

## குறிப்புகள்

1. தொண்டைமான், தொண்டைக் கொடி ஆகிய சொற்களுடன் தொண்டை நாடு தொடர்புடையது. இது துண்டிர நாடு எனவும் சான்றார் நாடு எனவும் சாசனங்களில் உள்ளது. சென்னை இராயப்பேட்டை எல்லீஸ் துரைமகனின் கல்வெட்டும் திருவான்மியூர்க் கல்வெட்டும் சான்றார் நாட்டை (சாணார் நாடு)ச் சுட்டும். 'தொல்லியல் நோக்கில் காஞ்சிபுர மாவட்டம்' (–ச. கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், 2010) என்ற நூலில் இதனை விரிவாகக் காணலாம். பிரிக்கப்படாத செங்கல்பட்டு மாவட்டத்தில் காஞ்சி, திருவள்ளூர் மாவட்டங்களுடன் சித்தூர் மாவட்டமும் சேர்ந்திருந்தது. சோழர் காலத்தில் தொண்டை நாட்டில் 24 கோட்டங்களும் 182 நாடுகளும் இருந்துள்ளன. பாடல்பெற்ற தலங்களாகச் சில இருந்துள்ளன.

2. காரைக்கால் நகரில் வணிக மரபில் தோன்றிய புனிதவதியார் சிவனெறிச் செல்வராக வாழ்ந்தவர். திருவாலங்காட்டு இறைவனைப் பாடி வழிபட்டவர். திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை என இரண்டு நூல்களை இவர் யாத்துள்ளார். இறைவனால் அம்மையே என்று அழைக்கப்பட்ட சிறப்புடையவர். பேய் வடிவெடுத்து இறைவனை வழிபட்டு நற்பேறு பெற்றவர். திருஞானசம்பந்தருக்கு முற்பட்டவர் என்பதால் திருவாலங்காட்டுக் கோயிலும் காரைக்கால் அம்மைக்கு முற்பட்டது எனலாம்.

3. மரங்களின் பெயர்களில் அமைந்த பல ஊர்கள் தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழ்நாட்டில் இன்றும் உள்ளன. பனையின் அடிப்படையில் திருப்பனங்காடு, பனையூர், பந்தணைநல்லூர்,

திருப்பனந்தாள், பெண்ணேஸ்வரமடம்; மாமரத்தின் அடிப்படையில் மாங்காடு; வேலம் மரத்தின் அடிப்படையில் வேலங்காடு; தில்லை மரத்தின் அடிப்படையில் தில்லை; மருதமர அடிப்படையில் மருதூர் என்பன போல் ஆலமரத்தின் அடிப்படையில் ஆலங்காடு ஏற்பட்டது. இதே பெயரில் மயிலாடுதுறை அருகே ஓர் ஆலங்காடு தோன்றியது. இதனைத் தென்திருவாலங்காடு என்பர்.

4. பழையூர், பழையனூர் போன்று புதிதாகத் தோன்றும் ஊர்கள் புத்தூர், புதுப்பேடு, புதுவை, புதுப்பாக்கம் என வழங்கப்படுகின்றன. பழைய ஊர் பேட்டையாக மாறும்போது பழம்பேட்டை என மாறுகிறது.

5. சங்க காலம் தொடங்கி வேளாளர்களை இலக்கிய வாயிலாகவும் சாசன வாயிலாகவும் அறிகிறோம். வள்ளுவர், வேளாளராகிய உழவரைப் போற்றியுள்ளார். வேளாளரில் பல்வேறு பிரிவினர் உள்ளனர்.

6. கரந்தைச் செப்பேட்டுத்தொகுதி சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. மயிலாடுதுறை வட்டத்தில் உள்ள கழுக்காணிமுட்டம் என்ற ஊரில் இருந்து பூமியிலிருந்து கண்டெடுத்த முதலாம் இராஜாதி ராஜனுடைய ஆணையைத் தெரிவிக்கும் செப்பேட்டுத்தொகுதி 85 ஏடுகளைக் கொண்டதாக உள்ளது. தற்போது இச்செப்பேட்டுத் தொகுதியும் சென்னை அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. இச்செப்பேட்டுத் தொகுதியே எடையில் கூடியதாக உள்ளது. எண்ணிக்கையிலும் மிகுந்ததாக உள்ளது.

7. S. I. I. V.ol. III Part III and IV, pages 383 - 431.

8. வடமொழிப் பகுதியான கிரந்தப் பகுதி முழுமையும் நிழற்படங்களுடன் வாசகம் தேவநாகரியில் இடம்பெற, தமிழ்மொழியில் கூடிய கல்வெட்டு தற்போதைய தமிழில் இடம்பெறச் செய்துள்ள கிருஷ்ண சாஸ்திரி முன்னுரையையும் செப்பேடுகளின் விளக்கத்தையும் ஆங்கிலத்தில் மட்டுமே தந்துள்ளார். தமிழ் மட்டுமே தெரிந்த அறிஞர்களுக்குப் பயன்படவேண்டியே முழுவதும் தமிழில் இந்நூலாசிரியர் எழுதியுள்ளார். வடமொழியில் கூடிய 137 சுலோகங்கள் தமிழ் வரிவடிவில் எழுதக் கல்வெட்டுத்தொகுதியின் ஆங்கில மொழிபெயர்ப்பும் புலவர் வே. மகாதேவன் மற்றும் சங்கரநாராயணனின் கையெழுத்துப் பிரதியும் துணைசெய்தன. நன்றி.

9. தொல்லியல்துறை மற்றும் அருங்காட்சியகத்துறையின் அப்போதைய முதன்மைச் செயலர் மற்றும் ஆணையர் தி. ஸ்ரீ. ஸ்ரீதர், இ. ஆ. ப. அவர்களுக்கு நன்றி.

10. கரந்தைச் செப்பேட்டுத்தொகுதி, ஆனைமங்கலச் செப்பேட்டுத் தொகுதி, எசாலம் செப்பேட்டுத் தொகுதி ஆகிய மூன்றிலும் இலச்சினை வாசகமும் புடைப்புச் சிற்பங்களும் ஒரே மாதிரியாகவே உள்ளன.

11. எசாலம் வரலாற்றுப் புதையல் மா. சந்திரமூர்த்தி, ச. கிருஷ்ணமூர்த்தி, சேகர் பதிப்பகம் – 1995.

12. கோநேரின்மை கொண்டான், கோநோன்மை கொண்டான், கோநேரிம்மை கொண்டான், கோனேரி மேல் கொண்டான், கோநேர்மை கொண்டான், கோநோன் இன்மை கொண்டான், கோனேரி இன்மை என்றெல்லாம் இச்சொற்றொடரைச் சாசனங்களில் காண்கிறோம். அரசனின் நேர்முக ஆணை என்று இதற்குப் பொருளாகும். ஒப்புயர்வற்ற அரசன் என்ற அகராதிப் பொருளைக் காணக்கூடாது.

13. அரசனின் ஆணை முதலில் ஓலையில் எழுதப்படும். பின்னர்க் கல்லில் கல்வெட்டாக வெட்டப்படும். விரிவான வாசகங்களுடன் தொடர்புடைய கோயிலுக்கோ, தனிமனிதருக்கோ வழங்கப்படும் கொடை குறித்த அரசனின் உத்தரவு செப்பேட்டில் இடம்பெறும். ஒரு சில கொடைகள் சிலாலேகையாகவும் தாமிரப்பட்டயமாகவும் இருப்பினும் பெரும்பாலான முக்கிய ஆணைகள் செப்பேடுகளில் மட்டுமே இடம்பெறும். தொடர்பற்ற இந்தப் பத்தாம் ஏட்டில் கல்வெட்டாகவும் செப்பேடாகவும் வெட்டிக் கொள்ளும்படி மன்னன் ஆணையிட்டதாக உள்ளது. திருவாலங்காடு சிவன்கோயிலில் இக்கொடை குறித்த சாசனம் தற்போதில்லை.

14. அம்மை நாச்சிக்கு வழங்கப்பட்ட கொடை குறித்த எழுத்துகள் கி. பி. 13 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் உள்ளன. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் இக்கொடை வழங்கப்பட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது.

15. மன்னன் ஆறாம் ஆட்சியாண்டில் ஆணை வழங்கிய விவரம் வடமொழிப் பகுதியில் முதலில் வருகிறது (சுலோகம் 125) இச்செப்பேட்டுத் தொகுதியில் நான்கு விதமான ஆட்சியாண்டுகள் உள்ளன.

16. பல்லவர், பாண்டியர் எழுச்சியின்போது ஒடுங்கிக் கிடந்த சோழரின் தலைநகராகப் பழையாறை விளங்கியது. பல்லவர் சோழநாட்டை வென்றபின் நந்திபுரமாக இது மாறியது. இரண்டாம் நந்திவர்மன் நந்திபுரக் கோட்டையில் இருந்தபோது பாண்டியன் கோட்டையை முற்றுகையிட்டான். உதயசந்திரன் என்ற பல்லவர் படைத்தலைவன்

முற்றுகையை விடுவித்தான். மூன்றாம் நந்திவர்மன் பகைவருடன் பழையாறையில் போரிட்டு வென்றுள்ளான். முதல் பராந்தகனுடைய ஆட்சியிலும் இரண்டாம் பராந்தகனுடைய ஆட்சியிலும் இது தலைநகர் சிறப்பில் இருந்தது. நந்திபுரி என இது வழங்கப்பட்டது. உத்தமசோழனும் முதலாம் இராசராசனும் இங்கிருந்து ஆணை பிறப்பித்துள்ளனர். முதலாம் இராசேந்திரன் கல்வெட்டுகள் இவ்வூரை முடிகொண்ட சோழபுரம் என்றன. பின்னர் வந்த சோழமன்னர்கள் காலங்களிலும் பழையாறை தலைநகர் அந்தஸ்தில் இருந்தது.

17. நான்காம் வர்ணத்தவன் வேளாளன் ஆவான். வேளாளனைக் கொண்டு நில எல்லை வரையறை செய்யப்பட்டது. உழுதுண்போர், உழுவித்துண்போர் என வேளாளர் இருவகையினர் என்றாலும் நிலங்கள் தொடர்பாகப் பல விவரங்களை அறிந்தவர்கள் உழுதுண்போர்களே ஆவார்கள்.

18. தமிழதரையர் என்போர் சோழப் பேரரசில் இருந்த சிற்றரசர் எனலாம். தொண்டை நாட்டில் அதிகாரிகளாக இருந்துள்ளனர். இவர்களை நெல்லை நெடுமாறன் விரிவாக ஆய்வு செய்து ஒரு கட்டுரையில் எழுதியுள்ளார். காண்க: 'வரலாற்றில் எலவானாசூர்க் கோட்டை' (–ச. கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், 2009.) மருமக்கள் தாயமும் தமிழதரையர்களும் பக்கம் 216 முதல் 224 வரை.

19. தனியூர் என்பது சகல உரிமைகளையும் பெற்றிருந்த பிராமணர்களுடைய சதுர்வேதிமங்கலமாகும். தில்லையாகிய சிதம்பரம், உத்திரமேரூர் போன்றவை தனியூர்கள் ஆகும். தற்போதுள்ள வீராணம் ஒட்டியுள்ள காட்டு மன்னார்குடி சோழர் காலத்தில் தனியூர் ஸ்ரீவீரநாராயணச் சதுர்வேதி மங்கலம் என வழங்கப்பட்டுள்ளது.

20. அத்தியான கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலம் எனச் செய்யாறு வட்டத்தில் இன்றுள்ள அத்தி வழங்கப்பட்டுள்ளது. இராஜராஜனுக்குக் கேரளாந்தகன் என்ற பட்டப் பெயருமுண்டு.

21. கச்சிப்பேடு காஞ்சி நகரைச் சுட்டும். இப்பெயரை விரிவாகத் 'தொல்லியல் நோக்கில் காஞ்சிபுர மாவட்டம்' என்ற நூலில் இந்நூலாசிரியர் ஆய்ந்துள்ளார் (மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், 2010.)

22. கச்சிரமுடையான் பகவனங்கியும் கச்சிரமுடையான் மூர்த்தி வீதி விடங்கனும் சகோதரர்களாக இருந்திருக்கலாம்.

23. கூத்தாடிநானூற்றுவன் இச்செப்பேட்டில் இருமுறை கூறப்பட்டுள்ளான். கூத்தன், கூத்து, கூத்தூர் என்ற சொற்கள் சாசனங்களில் மிகுதியாக வந்துள்ளன. இலக்கியங்களிலும் பயின்றுவந்துள்ளன. கூத்தினை

விரிவாகக் காண இந்நூலாசிரியர் எழுதிய **'மதிகெட்டான் நாடகம்'** என்ற நூலைக் காணவும். (உண்ணாமலை பதிப்பகம், 43/20, கலாக்ஷேத்ரா சாலை, திருவான்மியூர், சென்னை–41, பதிப்பாண்டு – 2000.)

24. சிற்றாமூர் என்ற பெயர் சித்தாமூர் என்றே தற்போது வழங்கப்படுகிறது. பெரும்பாலும் சமணர் வாழ்ந்த ஊராகவே சித்தாமூர் விளங்குகிறது. மேல்சித்தாமூர் சமண சமயத்தின் தலைமை இடமாக விளங்கி வருகிறது. செப்பேட்டில் இடம்பெறும் சிற்றாமூர் திருவாரூர் மாவட்டத்தில் உள்ளது.

25. வண்டாழை வேளூர் போல் புள்ளிருக்குவேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்) உள்ளது.

26. மாங்காடு சென்னையையொட்டி உள்ள ஊராகும். சூதவனம் என வடமொழியில் வழங்கப்பட்ட இவ்வூரில் புகழ்பெற்ற காமாட்சி அம்மன் கோயில் உள்ளது. இவ்வூரைச் சேர்ந்த அதிகாரி இச்செப்பேட்டில் இடம்பெற்றுள்ளார்.

27. அரசாணைகளை எரிப்பதும் எரிப்பவர்களைக் கைது செய்வதும் தற்போது காணப்படுவதாகும்.

28. இராசேந்திரனுடைய போர்கள் கவிநயத்துடன் வடமொழியில் வருணிக்கப்பெற்றுள்ளன. மெய்க்கீர்த்திகளில் விரிவாகக் காண்கிறோம். மேலும் விரிவுக்குச் சதாசிவ பண்டாரத்தாரின் பிற்காலச் சோழர் சரித்திரம் நூலைக் காணவும்.

29. சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலம், நித்தவினோதச் சதுர்வேதி மங்கலம் என இரண்டிருந்தன போன்று எசாலம் செப்பேட்டிலும் இரண்டு சதுர்வேதி மங்கலங்கள் இருந்தன.

30. மேலும் விரிவுக்கு **வரலாற்றில் திருவாலங்காடு** என்ற சு. இராஜவேலுவின் நூலைக் காணவும்.

31. ஆதித்த சோழன் திருமால்பேற்றிறைவனுக்குத் தன் இருபத்தொன்றாம் ஆட்சியாண்டில் தேவதானமாக நிலம் அளித்தான். அதுமுதல் பராந்தகனுடைய ஆட்சியின் நான்காம் ஆட்சியாண்டில் அரசின் வரிப் புத்தகக் கணக்கில் எழுதப்பட்டது. (S. I. I. Vol. III Part III, page 288 – 293.) இதேபோல் இராசேந்திர சோழனுடைய ஆறாவது ஆட்சியாண்டு நாள் 88 இல் பிறப்பிக்கப்பட்ட ஆணை மன்னனின் ஏழாவது ஆட்சியாண்டு நாள் 150 இல் வரியிலிடப்பட்டுள்ளது.

32. ஜனநாதன் என்றும் நராக்கன் மாராயன் என்றும் வழங்கப்படும் இவ்வதிகாரி இச்செப்பேட்டில் பல இடங்களில் கூறப்பட்டுள்ளார். அமைச்சராகவும் இவர் இருந்துள்ளார்.

33. ஏரியூர் என்பது வல்லம், தஞ்சாவூர்க் கல்வெட்டுகளில் இடம்பெறும் நாடாகும். காண்க: 'வரலாற்றில் வல்லம்' (–ச. கிருஷ்ணமூர்த்தி, சேகர் பதிப்பகம் 1995).

34. புரிசை என்ற பெயரில் பல ஊர்கள் உள்ளன. காஞ்சிபுரம் வட்டத்தில் உள்ள பரந்தூர் உள்வட்டத்தில் ஒரு புரிசை உள்ளது. புரிசை, நாடாக இருந்தது இடையார்பாக்கக் கல்வெட்டு மூலம் தெரிகிறது. (தொல்லியல் நோக்கில் காஞ்சிபுர மாவட்டம் –ச. கிருஷ்ணமூர்த்தி. மெய்யப்பன் பதிப்பகம், 2010).

35. கொட்டையூர் தற்போது கும்பகோணம் வட்டத்தில் உள்ளது. கொட்டையூர்ச் சிவக்கொழுந்து தேசிகர் சிறந்த தமிழ்ப்புலவர் ஆவார். இவர் மராத்தியர் ஆட்சிக் காலத்தில் வாழ்ந்துள்ளார்.

36. சென்னை நகரில் நுங்கம்பாக்கம், புலியூர், அரும்பாக்கம் போன்ற பகுதிகள் உள்ளன.

37. நிலங்களின் வகைகளை இங்கே விரிவாகக் காண்கிறோம்.

38. பல்வேறு வரிகள் இங்கே கூறப்படுகின்றன.

39. சிற்பிகளை விரிவாகக் காண இந்நூலாசிரியரின் 'தமிழ்நாட்டுச் செப்பேடுகள்' முதல் தொகுதியைக் காணவும். (மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம் 2003.)

40. அரசன் வாய்மொழியாகப் பிறப்பிக்கும் ஆணைகளை எழுத்து வடிவில் ஒருவர் எழுதுவதும் பிறகு அதனைப் பலர் ஒப்பிட்டுத் தொடர்புடைய கோயில் மற்றும் சபைக்கு அனுப்புவதும் எல்லை நிர்ணயிப்பதும் ஊரின் அமைப்பையே படம் பிடித்துக் காட்டுவதும் தமிழ்ப்பகுதிகளில் காணலாம். தலைநகரில் இருக்கும் அலுவலர்களுடன் கிராமத்தில் இருக்கும் அலுவலர் மற்றும் கிராம சபையின் உறுப்பினர்களின் பணிகள் கூறப்படும். இச்செப்பேட்டுத் தொகுதியில் இராசேந்திர சோழனுடைய போர்கள் வடமொழிப்பகுதியில் விரிவாக இருப்பினும் தமிழ்ப்பகுதியின் மெய்க்கீர்த்தியில் சுருக்கமாக உள்ளதை மறந்து விடக்கூடாது. மெய்க்கீர்த்திப் பகுதி வருமாறு:

| | | | |
|---|---|---|---|
| திருமன்னி | வளர | இருநில | மடந்தையும் |
| போர்ச்சய | பாவையும் | சீர்த்தனிச் | செல்வியுந் |
| தந்பெருந் | தேவிய | ராகி | இன்புற |
| நெடியதி | லூழியுள்இடை | டதுறை | நாடுந் |
| துடர்வன | வேலிப் | படர்வன | வாசியுஞ் |
| சுள்ளிச் | சூழ்மதிட் | கொள்ளிப் | பாக்கையும் |
| நண்ணற் | கருமுரண் | மண்ணைக் | கடக்கமும் |
| பொருகட | லீழத் | தரைசர்தம் | முடியும் |
| ஆங்கவர் | தேவியர் | ஓங்கெழில் | முடியும் |
| முன்னவர் | பக்கல் | தென்னவர் | வைத்த |
| சுந்தர | முடியும் | இந்திரன் | ஆரமும் |
| தெண்டிரை | ஈழ | மண்டல | முழுவதும் |
| எறிபடைக் | கேரளன்மு | றைமையிற் | சூடும் |
| குலதன | மாகிய | பலர்புகழ் | முடியும் |
| செங்கதிர் | மாலையும் | சங்கதிர் | வேலைத் |
| தொல்பெருங் | காவல் | பல்பழந் | தீவும் |
| மாப்பொரு | தண்டாற் | கொண்ட | கோப்பரகேசரி |
| வந்மரான | ஸ்ரீராஜேந்திர | சோழ | தேவற்கு |

# உ. செப்பேட்டுத் தொகுதியிலுள்ள சுலோகங்களின் தமிழ் வரிவடிவமும் மொழிபெயர்ப்பும் குறிப்புரையும்

**ஸ்வஸ்திஸ்ரீ கண்ட கண்டாபரண புஜக ராட(ண)மூர்த்னி மாணிக்ய மத்த்யே**
**த்ருஷ்டவ் ஆத்மீயாம் ஸலஜ்ஜா ப்ரதிக்ருதிம் அபராம் அங்கநாம் சங்கமாநா**
**ஆச்லே ஷா லோல சித்தம் க்ருத சரண நதி ப்ரார்த்தநம் வோ பவாநீ**
**திச்யாத் பச்யந்த்யதீரந் நிஜபதிம் அநிசம் ஸோர்ஷ்யம் அர்த்தேக்ஷணேந. (1)**

மங்களமுண்டாகட்டும். ஸ்ரீகண்டனான சிவபெருமானின் கழுத்தில் நாகங்களின் தலைவன் (மாலையாகக்) காட்சி தருகிறான். அவனுடைய சிரசில் உள்ள மாணிக்கத்தின் மத்தியில் தன்னைப் போன்ற பெண் இருப்பதைப் பார்த்து (தன் வடிவம் மாணிக்கத்தில் பிரதிபலிக்கிறது என்பதை அறியாமல்) இறைவியாகிய பவானி, வேறு ஒரு பெண்ணோ என்று ஐயம் கொள்ள, அப்போது சிவன் அவளை ஆலிங்கனம் செய்ய ஏங்கும் மனத்தோடு அவள் காலில் விழுந்து வணங்க, பவானி சீற்றத்துடன் சிவனை நோக்குகிறாள். அத்தகைய பவானி தேவி உங்களுக்கு அருள் புரிவாளாக.

இந்தக் காப்புச் செய்யுள் பவானியாகிய அம்மனை வழிபடுவதாக உள்ளது. பவானி என்ற பெயரும் பார்வதிக்குரியதாகும். கொங்குப் பகுதியில் பவானியம்மன் பெயரில் ஓர் ஆறே உள்ளது. பவானியில் சங்கமேஸ்வரர் கோயிலும் உள்ளது. நாகத்திடம் மாணிக்கம் இருப்பதாக ஒரு நம்பிக்கை இன்று வரை மக்களிடம் இருப்பினும் அறிவியல் முறைப்படி இது நிரூபணம் ஆகவில்லை. தன்னுடைய உருவத்தையே மாணிக்கத்தில் கண்டு பவானி ஊடல் கொள்வதாகச் சுலோகம் கூறுவது அழகிய கற்பனையாகும். தேவியின் ஊடலைத் தவிர்த்து ஆலிங்கனம் செய்யச் சிவன் அம்மையின் காலில் விழுவதாகக் கூறுவது உலக இயல்பாகும்.

இரணியன், ஊடல் நிகழும்போதும் தலைவணங்காத இயல்புடையவனாகக் கம்பர் இரணிய வதைப் படலத்தில் அவனுடைய

வீரத்தைக் குறிப்பிடவேண்டி மொழிவார். வள்ளுவர் ஊடலின்போது யார் தோற்கிறார்களோ அவர்களே வென்றவர்கள் என்று கூறுவர். சிவமூர்த்தங்களுள் ஆலிங்கன மூர்த்தம் ஒன்றாகும். அணைந்தெழுந்த நாயனார் என்று ஆலிங்கன மூர்த்தம் கூறப்படும்.

மகேந்திரவர்மனின் திருச்சிக் குடைவரையில் உள்ள கிரந்தக் கல்வெட்டு, கங்காதரனாகிய சிவன் காவிரி நதியை நோக்க, பார்வதியானவள் 'அய்யா கங்காதரரே காவிரியானவள் பல்லவ மன்னன் மகேந்திரவர்மனுக்கு உரிமையானவள். அவளை நோக்காதீர்' என்று கூறும் முகத்தான் மகேந்திரவர்மனின் ஆட்சி திருச்சிவரை இருந்தது என்பதைக் கூறுவதுடன் சிவபெருமான் நதிப் பிரியன் என்பதையும் குறிப்பிடுகிறது. இங்கும் சிறிய ஊடல் இடம்பெறுகிறது.

தமிழ் மொழியில் உள்ள சிற்றிலக்கியங்களில் 'திருவூடல்' என்பது ஒன்றாகும். காமாட்சியம்மன் சிவனுடன் ஊடல் கொள்ள, சுந்தரமூர்த்தி நாயனார் ஊடலைத் தீர்த்து வைக்க முயல்வார். பல்வேறு தலங்களுக்கும் திருவூடல் சிற்றிலக்கியம் முற்காலத்தில் பாடப்பட்டது.*

பரமசிவன் கழுத்தில் பாம்பிருப்பதாக மக்கள் நம்புகின்றனர். நடராசருடைய உருவ அமைதியைக் கூறும்போது பாம்பும் கூறப்படும். சிவன் சிற்பங்களிலும் ஐம்பொன் சிலைகளிலும் பாம்பினைக் காண்கிறோம்.

ஸ்ரீகண்டன் என்ற பெயர் சிவனுக்குரிய பெயர்களுள் ஒன்றாகும். கண்டம் – கழுத்து. ஆலிங்கனமூர்த்தி அல்லது அணைந்தெழுந்த நாயனார் சிற்பம், சிதம்பரம் கோபுரம், திருவாவடுதுறை கோமுக்தீஸ்வரர் கோயிலின் திருச்சுற்று மாளிகை மற்றும் வேறு சில கோயில்களிலும் காணலாம்.

**வீரஸ்ரீ ராஜஹம்ஸீ விஹ(ர)ண ஸரஸீ வித்வ தம்போஜ பாநுர்**
**த்ருஷ்டா த்ருஷ்டார்த்த மார்க்க த்வய பதிக மஹாலோக ஸார்த்தைக நாத:**
**ஸர்வ்வ க்ஷத்ராதி நாதஸ் ஸகல குணமணி ச்ரேணி ஜந்மாம் புரார்சீ(சி):**
**விச்வ க்லேசாபஹாரீ சிரமவது மஹீ[மண்ட]லஞ் சோளவம்ச (2)**

---

*இந்நூல் ஆசிரியர் பெரம்பலூர் அருகேயுள்ள செட்டிக்குளம் ஏகாம்பரேஸ்வரர் கோயிலில் எழுந்தருளும் காமாட்சி அம்மன் ஊடல் கொள்ளும் ஓலைச்சுவடி ஒன்றைச் சேகரித்து நகல் செய்து பதிப்பிற்குத் தயாராக வைத்துள்ளார். திருவீழிமிழலையைச் சேர்ந்த திருவூடல் ஓலைச்சுவடியைச் சேகரித்து அதனைப் பதிப்பித்துள்ளார். (திருவீழிமிழலை கும்பாபிஷேக மலரில் இத்திருவூடல் இடம் பெற்றுள்ளது.)

உலகின் துயரங்களைப் போக்கும் சோழ வம்சம் பூமியை வெகுகாலம் காக்கட்டும். அந்த வம்சம் வெற்றித் திருமகள் என்னும் அரச அன்னம் உலாவும் குளம்; அறிஞர்கள் என்னும் தாமரைகளுக்குச் சூரியன். கண்டது (இவ்வுலகம்), காணாதது (அவ்வுலகம்) என்னும் இருவழி செல்லும் பெருமக்களின் குழுவிற்கு ஒரே தலைவனான இறைவன் போன்றது; அரசுகள் யாவற்றிற்கும் தலைமை சான்றது. நற்குணங்களாகிய இரத்தினங்களுக்குப் பிறப்பிடமாகிய கடல் சோழ வம்சமாகும்.

உருவக அலங்காரம் மூலம் சோழ மரபினைப் பாராட்டி அம்மரபு நீண்டு தழைக்க, கவிஞர் விரும்புகிறார்.

**பஞ்சாச தேவ லிபய பரிவ்ருத்த ஸங்க்யாஸ் ஸங்க்யா மதீத்ய ரவிவம்ச குணா பி(வி) பாந்தி**
**ஏதைரஹும் கதமமூம் கதயாமி மஹ்யம்மாதஸ் ஸரஸ்வதி லிபீரபரா பி(வி)தேயா: (3)**

ஐம்பது எழுத்துகள் என வடமொழி (தேவ லிபி) வரையறுக்கப் பட்டுள்ளன. ஆயின் சூரிய குலத்தின் குணங்களோ எண்ணி மாள முடியாமல் உள்ளன. எனவே 50 எழுத்துகளைக் கொண்டு சோழர் குலத்தின் குணங்களை எப்படி கூறுவேன்? கலைமகளாம் தாயே மேலும் சில எழுத்துகளை எனக்கு அருள்வாயாக.

தமிழ் எழுத்துகள் உயிரும் உடம்புமாம் முப்பது என வரையறுப்பதுபோல் வடமொழி ஐம்பது என்கிறார். ஐம்பது எழுத்துகள் போதா என்பது ஒரு நயமாகும்.

**ஆஸீத் த்ரிலோகீ நயநம் விவஸ்வாந்**
**ஸர்வ்வ க்ஷிதிசாங்குர ஜந்ம பூமி:**
**ஆத்யோ நிருபாணாம் மநுர் ஆவிராஸீத்**
**அந்வர்த்தநாமா மநநாத் அமுஷ்மாத் (4)**

மூவுலகத்திற்கும் விழிபோன்ற சூரியன் தோன்றினான். அவன் எல்லா மன்னர்களும் தோன்றுவதற்குப் பிறப்பிடமானவன். அவனுடைய சிந்தனையிலிருந்து மனு தோன்றினான். நினைவில் இருந்து தோன்றியவன் என்ற பொருளுக்கேற்பப் பெயரைத் தாங்கிய மனுவே சோழ மன்னர்கள் எல்லாருக்கும் முதல்வன் ஆவான்.

திரிலோகம் அல்லது மூவுலகம் என்பது புவி உலகம், மேல் உலகம், பாதாள உலகம். எனவே மனிதர், தேவர், நரகர் உறையும் மூவுலகங்களையே சுட்டும். சூரியன் தோற்றத்திற்கு யாருமே காரணமன்று. மக்களும் முதன்

முதலில் சூரிய வழிபாட்டையே மேற்கொண்டனர் என்பர். மனம் என்ற சொல்லிற்கும் மனுவுக்கும் தொடர்புண்டு. நயனம் – கண். கலிங்கத்துப்பரணி நூல் விஷ்ணு, பிரமா, மருசி, காச்யபா, சூரியன் எனச் சோழ மரபைக் கூறுகிறது. மகன் என்றும் பாராமல் பசுவின் துயரைப் போக்க நீதி நெறியில் நின்று தண்டித்த மனுவைக் கலிங்கத்துப் பரணி கூறுகிறது.

**இக்ஷ்வாகுஸ் ஸமஜநி தஸ்ய ஸூநுர் உச்சைர்**
**வித்ரஸ்த த்ரிதசரிபுர்ம்மஹா ஹவேஷு**
**மக்நாபி ஸ்புடமமலே யச: பயோதௌ**
**யஸ்யாகா ததிமஹதீம் முதந்த்ரிலோகீ** **(5)**

அவனுக்கு மகனாக இக்ஷ்வாகு பிறந்தான். அவன் தேவர்களின் பகைவர்களைப் பெரும்போர்களில் அச்சுறுத்தியவன். மூவுலகமும் அவனுடைய கீர்த்திக் கடலில் மூழ்கியிருந்தாலும் பெரும் மகிழ்ச்சியை அடைந்திருந்தன.

தேவாசுரப் போர்களில் இக்ஷ்வாகு மன்னன் தேவர்களுக்கு ஆதரவாகப் போர் புரிந்தார். வேறு சில சோழ மன்னர்களும் தேவர்கள் பொருட்டு அசுரர்களுடன் போரிட்டு வென்றுள்ளனர் என்று சில புராணங்கள் கூறுகின்றன. மேருமலைக்கு வடக்கிலும் தெற்கிலும் இக்ஷ்வாகுவின் 114 மக்கள் மற்றும் 114 பேரர்கள் ஆண்டதாக மச்சய புராணம் கூறுகிறது.

**ஸகல ஜலதி வீசிமேகலா லங்க்ருதாயா**
**பதிர் அவநி யுவத்யாஸ் தத்தனூஜோ விகுக்ஷி**
**நமதகில நிருபேந்த்ர வ்ராத மௌலி ப்ரபாபி:**
**விரசித சரணாப்ஜோ வீர்ய்ய வாநாவி ராஸீத்:** **(6)**

அவனுக்கு விகுக்ஷி மகனாகத் தோன்றினான். கடலலைகளை இடையணியாகக் கொண்ட புவிமடந்தையின் கணவனாக அவன் திகழ்ந்தான். இந்திரன் போன்றோரின் கூட்டம் அவன் பாதத்தில் வீழ்ந்து வணங்க, அக்கூட்டத்தாருடைய மகுடங்களின் ஒளியால் அவன் திருவடித் தாமரைகள் ஒளிர்ந்தன.

அரசர்களின் மகுடங்களை ஒளியாகக் கூறியதால் விகுக்ஷியின் பாதங்களைத் தாமரைகளாகக் கவிஞர் குறிப்பிடுகிறார். மேகலா என்பது மேகலை என்று தமிழில் வழங்கப்படும். சசாதனன் (முயலை விழைந்துண்டவன்) என்று புராணம் கூறும். சசாதனன் விகுட்சியின் மற்றொரு பெயராகும். கலிங்கத்துப் பரணி இட்சவாகு மன்னனுக்குப் பின் குறிப்பிடாமல் புரஞ்சயனுக்குப் பின் இவனைக் கூறுகிறது.

**தஸ்யாஜநி ப்ரதித விக்ரம சௌர்ய்யராசிந்**
**நாம்நா புரஞ்ஜய இதி க்ஷிதிபஸ் தநூஜ:**
**யஸ்யா கிலஞ் ஜகத் அவாப்ய யசோவிகாஸ**
**ச்வேதாதபத்ரம் அதிரிக்தம்பூத் அகண்டம்** **(7)**

புகழ்வாய்ந்த பராக்கிரமம் மிக்க மகனாகப் புரஞ்ஜயன் என்பவன் அவனுக்குப் பிறந்தான். அவனுடைய புகழின் மலர்ச்சியே வெண் கொற்றக்குடையாய் உலகெலாம் பரவி மிகுந்து இடையறாது நின்றது.

ஸ்வேதா பத்ரம் – வெண்கொற்றக்குடை. ஸ்வேதாரண்யம் என்று வடமொழியில் வழங்கப்பட்ட ஊர், திருவெண்காடு என்று தமிழில் வழங்கப்பட்டது. திருவெண்காடர் என்று சிவன் அழைக்கப்படுவார். இப்பெயரைத் திருவெண்காட்டில் மட்டுமின்றி மதுராந்தகத்தில் உள்ள கோயிலிலும் காண்கிறோம். திருமாலின் அம்சம் நிறைந்தவனாக விஷ்ணு புராணம் இவனைக் கூறும். கலிங்கத்துப்பரணி இவனைக் கூறுகிறது.

**வ்ருஷப ரூபதரஸ்ய ஹரேர் அசௌ ககுதியத் ஸ்திதவாந் நிதிர் ஓஜஸாம்**
**யுதிஜகாந ஸுரேதர ஸைநிகாந் அஜநி தேந ககுஸ்த ஸமாஹ்வய** **(8)**

வலிமையின் நிதியான ககுஸ்தன், எருது வடிவு எடுத்த இந்திரனின் திமிலில் அமர்ந்து போரில் அரக்கர்களின் படையினை வென்றான். அதனால் அவன் ககுஸ்தன் (திமிலில் அமர்ந்தவன் என்று பொருள்) என்னும் பெயரைப் பெற்றான்.

சிவனுடைய வாகனமாகக் காளை உள்ளது. தருமத்தின் வடிவமாக இது கருதப்படுகிறது. விஷ்ணு ரிஷப வடிவெடுத்துச் சிவனை வழிபட்டதாகவும் கூறுவர். சமணத் தீர்த்தங்கரர்களுள் ஒருவரின் பெயர் ரிஷபதேவர் ஆகும். இச்சுலோகத்தில் எருது வடிவெடுத்த இந்திரன் சுட்டப்படுகிறான். விஷ்ணு புராணத்தில் தேவாசுரப் போரில் தேவர் பொருட்டுக் ககுஸ்தன் அசுரரை வென்றதாகக் கூறப்பட்டுள்ளது.

**ததபுத்ரம் விமல ஸிதாதபத்ர சந்த்ர**
**சாயாஸ்த க்ஷ(க்ஷி)தி தலதாபம் ஆமநந்தி**
**கக்ஷீவத் க்ஷிதிபதிமக்ஷத ப்ரபாவம்**
**கந்தர்வ்வைஸ் ஸுர ஸதநேஷு கீத கீர்த்திம்** **(9)**

அவனுடைய மகனாகக் கக்ஷிவான் (காக்சிவதன்) என்னும் அரசனைக் குறிப்பிடுவர். அவன் புகழ் தேவர்களின் இல்லங்களில் கந்தர்வர்களால் இசைக்கப்பட்டது. அவன் தன்னுடைய வெண்கொற்றக் குடை என்னும் நிலவின் நிழலால் புவியின் வெம்மையைப் போக்கினான்.

தேவகானம் இசைப்பவர்களாகக் கந்தர்வர்களைக் கூறுவர். வெம்மைக்குச் சூரியனும் தண்மைக்குச் சந்திரனும் கூறப்படுவர். 'திங்கள் மாலை வெண்குடையான் சென்னி செங்கோல்' என்று இளங்கோவடிகளும் சோழ மன்னனைக் குறிப்பிடுவார். மக்கள் அமைதியாக வாழ்ந்தனர் என்கிறார்.

**அர்ய்யமா நிஜபுஜாசல மந்த க்ஷோபிதார (ரி) ஜலதே: ஹ்ருத லக்ஷ்மீ:**
**ஃஸ்ய ஸூநுரஜநிஷ்ட விசிஷ்டஸ்தூயமாந மஹிமா ஜகதீச: (10)**

உலகிற்குத் தலைவனான அர்யமா என்பவன் அவனுக்கு மகனாகப் பிறந்தான். தன் தோளாகிய மலையையே மத்தாகக் கொண்டு எதிரியாகிய கடலைக் கடைந்து செல்வத்தை (லக்ஷ்மியை) அடைந்த அவன், சிறப்பாகப் பேசப்படும் மகிமையுடையவனும் ஆவான்.

'திருமகள் போலப் பெருநிலச் செல்வியும்' என்றும் 'திருமன்னிவளர இருநில மடந்தை' என்றும் தொடங்கப்படும் மெய்க்கீர்த்திகளில் இலக்குமி அல்லது ஸ்ரீ இடம்பெறுகிறாள். அர்யமா போரில் வல்லவன் ஆவான். தன் தோளாகிய மந்தர மலையால் போராகிய பாற்கடலைக் கடைந்தான்.

**அஜி(ஜ) நிஷ்ட சாபகுண ஸ்ரு(க்ரு)ஷ்ட புஜத்ரும(ய)ஜ ப்ரதாப தஹநாஸ்த ரிபு:**
**அநல ப்ரதாப இதி தஸ்ய குலே நிருபதி: ப்ரதீத மஹிமா ஜகதி (11)**

அந்தக் குலத்தில் அனலப்ரதாபன் என்ற மன்னன் தோன்றினான். எல்லோராலும் அறியப்பட்ட பெருமையை உடைய அவன் தன் வில் நாணால் உராயப்பட்ட தோளாகிய மரத்திலிருந்து தோன்றிய நெருப்பால் எதிரிகளை அழித்தான்.

பெயரிலேயே நெருப்பு (அனல்) உள்ள மன்னன் எதிரிகளை எரித்தான் என்பது நயமாகும். இச்சுலோகத்திலும் உருவகம் பயின்று வந்துள்ளது. மரத்தோடு மரம் கடுமையாக உரசும்போது நெருப்பு தோன்றுவது இயல்பாகும். மரமொத்த புயமுடையவன் என்க.

**தஸ்யாந்வ வாயாம்புதி பூர்ண்ணசந்த்ரோ பபூவ வேந: க்ஷிதி பாக்ரகண்ய:**
**தஸ்யாத்மஜ: பார்த்தீவஸார்த்தநாத: ப்ருது: ப்ருதுஸ்ரீர் அபவத் நரேந்த்ர: (12)**

சோழர்குலமாகிய கடலுக்குப் பூர்ணச்சந்திரன் போல வேனன் என்னும் அரசன் தோன்றினான். அவன் அரசர்களில் முதல்வனாகக் கருதத்தக்கவன். அவனுக்கு

மகனாக, ப்ருது என்பவன் பிறந்தான். நிறைந்த செல்வமுடைய அவன் அரசர் குழுவிற்குத் தலைவன் ஆவான்.

அழகு, செல்வம், விவேகம் உள்ளவனாக வேனன் விளங்கினான் என்று கவிஞர் கூறுகிறார். பிருது வம்சத்தில் அங்கன் சுனீதைக்கு மகனாக இவன் பிறந்தான் என்று விஷ்ணு புராணம் கூறுகிறது. அரசருள் ஏறு இவன் எனலாம்.

பூரண சந்த்ரோ – முழுநிலவு அல்லது பௌர்ணமி என்று பொருள். விஷ்ணுபுராணத்தின்படி மகாதேவரிடமிருந்து அஜகவா என்ற ஒப்பற்ற வில்லை இவன் பெற்றான் என்று அறிகிறோம்.

**வேநஸ்ய தக்ஷிணபுஜாத் (ந்) மதீதாத் (ந்) முநீந்தைர்ய்**
**ய: ப்ராதுராஸ கவசீ த்ருத ரத்ந மௌலி:**
**ஸஜ்யந்தநு: ஸசர மப்ரதி சக்தி பிப்ரத்**
**தேஹி பராக்ரம இவ அக்ரம நாசநாய: (13)**

வேனனுடைய வலது தோளை முனீந்தரர்கள் கடையும்போது ப்ருது தோன்றினான். அவன் தோன்றும்போது கவசம், இரத்னம், மகுடம், வில், நிகரற்ற அம்பு ஆகியவற்றைக் கொண்டிருந்தான். அக்கிரமத்தை ஒழிப்பதற்காகப் பராக்கிரமமே வடிவு கொண்டது போல் அவனுடைய தோற்றம் இருந்தது.

கர்ணன் கவசக் குண்டலத்தோடு பிறந்தது போல வேனனின் மகன் பிருது கவசம், ரத்தின மகுடம், வில், அம்புடன் பிறந்துள்ளான். பண்பு அல்லது குணத்தை ஒருவராகக் கூறுவது குணவணி அல்லது பண்பணியாகும். உருவகத்திலிருந்து இது சற்று மாறுபட்டது. 'இற்பிறப்பு என்பதொன்றும் இரும்பொறை என்பதொன்றும், கற்பெனப் பெயரதொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' எனக் கம்பரும் சீதையின் பண்பு நலன்களை அநுமன் வாயிலாகக் குறிப்பிடுவார். அதர்மம் பெருகும்போது விஷ்ணு பூமியில் தோன்றுவார் என்பது இந்துக்களின் நம்பிக்கையாகும். தன் வில் வலிமையால் மலைகளை உடைத்தவன். சிவனுடைய அசகவ வில்லை உடையவன்.

**அதிபலம் அஸுரந் நிஹத்ய துந்தும் ஸமஜநி யோ புவி துந்துமார நாமா**
**நரபதிரயம் அஸ்ய முஷ்ய வம்சே க்ஷிதி மகிலா மசிஷத் குணைகதாம: (14)**

இவனுடைய வம்சத்தில் பிறந்த மன்னன் ஒருவன் 'துந்து' என்னும் வலிமை பெற்ற அசுரனைக் கொன்றதால் துந்துமாரன் என்னும் பெயரைப் பெற்றான். உலகம்

முழுவதையும் ஆண்ட அவன் குணங்களுக்கு இருப்பிடமாகத் திகழ்ந்தான்.

துந்துமாரன் என்பது காரணப் பெயர் என்று சுலோகம் கூறுகிறது. இறைவனைக் குறிப்பிடும்போது எண்குண வடிவினனாகக் கூறுவது மரபாகும். இங்கே குணவானாக அரசனைக் கூறுகிறார். துந்துபி என்ற தமிழாண்டிற்கும் துந்துமாரனுக்கும் பெயர் ஒற்றுமை உள்ளது. விஷ்ணுபுராணத்தில், 21000 பிள்ளைகள் உதவியுடன் போரிட்ட துந்தி அரசனைக் கொன்ற துந்துமாரன் குவலயாச்வ என்ற பட்டம் பெற்றான்.

**ஸமஜநி யுவநாச்வஸ் தத்குலே பூமி பாலஸ்**
**தபஸி யசஸி ஸத்யே ஸத்குணே சாத்விதீய:**
**ஸகலபுவந ரக்ஷா வப்ரமஸ்ய ப்ரதாபம்**
**ஸ(ஸ்வ)மநுத ஸததோர்த்த(ம்)ஸர்வ்வ லோகஸ் ஸமந்தாத் (15)**

அந்தக் குலத்தில் யுவனாச்வன் என்னும் அரசன் பிறந்தான். அவன் தவத்திலும் புகழிலும் சத்தியத்திலும் நற்குணங்களிலும் இணையற்றவன். அவனுடைய வீரம் எல்லா உலகையும் காப்பதை எல்லையாகக் கொண்டது. அத்தகு வீரம் எப்போதும் பெருகுவதாக என்று அனைவரும் எண்ணினர்.

சாத்வீகம், இராஜஸம், தாமசம் என்ற முக்குணங்களில் யுவனாச்வன் நன்மைக்குரிய சாத்வீக குணத்துடன் சத்தியவானாகவும் இருந்துள்ளான். வீரமுடையவனாகவும் இருந்துள்ளான். விஷ்ணுபுராணத்தில் துந்துமாரனுக்குப்பின் எட்டாவது மன்னனாக இவன் கூறப்படுகிறான். எனவே இருவர் இப்பெயரில் இருந்தனர் எனலாம்.

**புத்ரஸ் தஸ்ய ப்ரதித மஹஸோ மாந நீயஸ்ய மாந்யைர்ம்**
**மாந்தாதாபூத் த்ருதி மதிரதி ஸ்ரீ ஸரஸ்வத்ய தீச:**
**லோகாலோக க்ஷிதிப்ருதவதி க்ஷ்மாந் தயாஜந்ம பூமீ**
**ரக்ஷாசக்திஸ் ஸ்வயமிவ சிரம் மூர்த்தி மத்யப்ய ரக்ஷத் (16)**

மதிக்கத்தக்கவர்களால் மதிக்கப்பெற்றவனும் புகழ்மிக்கவனுமாகிய அவனுக்கு மாந்தாதா புத்திரனாகப் பிறந்தான். அவன் துணிவு, காதல், செல்வம், கல்வி மிக்கவனாக இருந்தான். தயை எனப்படும் கருணைக்குப் பிறப்பிடமான அவன் காக்கும் சக்தியே ஒரு வடிவு கொண்டு வந்தது போல லோகாலோக மலை வரையிலான இவ்வுலகை நீண்ட காலம் காத்து வந்தான்.

செல்வத்தை ஸ்ரீ என்றும் கல்வியை ஸரஸ்வதி என்றும் காதலை ரதி என்றும் இச்சுலோகத்தில் காண்கிறோம். விஷ்ணுபுராணத்தில் இவன்

கூறப்பட்டுள்ளான். இந்திரனால் போஷிக்கப்பட்ட இவன் ஏழு உலகையும் ஆண்டான் என்று கூறப்பட்டுள்ளது.

**உந்தா(த்தா) மாஸுர ஸைந்ய ருந்த(ருத்த) திவிஸ (ஷ)த் ஸேநாநி வேசாவந**

**வ்யாபாராஹித ஜாகரஸ்ஸுரபதி ப்ரீத்ய ஆப்த நித்ராபர:**
**தத்ஸூநுர்ம் முசுகுந்த இத்யஜநி யஸ்ஸத்யஸ் ஸகோபோந்மி(ஷ)த்**
**சக்ஷி(ர்த்) க்த விதக்த கால யவநாநந்தந் முகுந்தோ நிருப: (17)**

அவனுக்கு மகனாக முசுகுந்தன் என்னும் மன்னன் தோன்றினான். அவன் ஒழுங்கீனமான அசுரர்களை வெல்லத் தேவர்களின் படைத்தலைவர் பொறுப்பை ஏற்றான். அதற்காக வெகுகாலம் விழித்திருந்தான். அதன் பிறகு தேவர்களின் தலைவன் உவந்து வரம் அளித்ததால் தூக்கத்தில் ஆழ்ந்தான். அவனைக் காலயவனன் என்னும் அசுரன் எழுப்பினான். அதனால் கோபத்தோடு விழி திறந்தான். வலிமை கொண்ட அவ்வசுரன் அழிந்தான். அதனால் (விஷ்ணுவிற்கு) மகிழ்ச்சியை ஏற்படுத்தினான்.

கலிங்கத்துப்பரணி இம்மன்னனைக் கூறுகிறது. முசுகுந்தனுக்கு மூத்தவர் இருவர் இருந்ததாகப் புராணங்கள் கூறும். ஒரு செயல் வெற்றிபெற வேண்டுமானால் கண் துஞ்சாது மெய்வருத்தம் பாராது இருக்க வேண்டும் என்பதால் முசுகுந்தனும் இவ்வாறு இருந்துள்ளான். ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும்போது ஒருவர் எழுப்பினால் யாருக்குமே கோபம் வரும். இங்கும் முசுகுந்தனுக்கு வருகிறது. தீய அசுரரை அழிப்பதாகிய தன் வேலையை முசுகுந்தன் செய்ததால் முகுந்தன் மகிழ்ந்ததாகக் கவிஞர் கூறுகிறார். குரங்கு முகமுடைமையால் இம்மன்னன் முசுகுந்தன் எனப்பட்டான். திருவாரூர், திருவாவடுதுறை போன்ற தலபுராணங்களில் முசுகுந்த சக்கரவர்த்தி இடம் பெற்றுள்ளார். இவரே சப்தவிடங்கர்களைத் திருவாரூர் உள்ளிட்ட பல தலங்களில் ஏற்படுத்தியுள்ளார் என்று கூறுவர்.

**ஸாயகாக்நிசலபீ க்ருதசத்ரூர்ய்ய ச்ரகார வளபீ மலதுஸ்ரீ:**
**ஸோப்யபூத் மஹித விக்ரம ராசீ(சி)ஸ் (மோப்யபூந்மஹிதவிக்ரமகாஸிஸ்)**
**தத்குலே வளப இத்யுதிதாக்ய: (18)**

அந்தக் குலத்தில் பெருமையும் வீரமும் கொண்ட வளபன் என்னும் பெயருடைய மன்னன் தோன்றினான். அவன் தன் அம்பென்னும் நெருப்புக்கு எதிரிகளை விட்டிலாக்கியவன். வளபீ என்னும் நகரை நிர்மாணித்தவன்.

நெருப்பில் வீழ்ந்த விட்டில் பூச்சியாக வளபனின் பகைவர் நிலை இருந்ததாகக் கவிஞர் கூறுகிறார். சங்ககாலச் சோழ மன்னர்கள் வளவன் என வழங்கப்பட்டுள்ளார்கள். சான்றாகத் திருமா வளவனைக் குறிப்பிடலாம்.

**தஸ்ய ஆவிராஸீத் ப்ருதுலாக்ஷநாமா ஸுராஸுரௌ கைர் அ(பி) யாச்ய மாந: பீயூஷஸித்யை ப்ருது மந்த்ராத்ரிம் பயோநிதௌயோ ப்ர(மயா)ஞ்சகார.(19)**

அவனுக்குப் பிருதுலாக்ஷன் என்னும் புதல்வன் பிறந்தான். தேவர் மற்றும் அசுரர் சேர்ந்து பாற்கடல் கடைந்தபோது பெரிய மந்தர மலையைப் பாற்கடலில் சுழற்றியவன் இவனே ஆவான்.

'மந்தரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி' விஷ்ணு திருப்பாற்கடலைக் கடைந்ததைச் சிலப்பதிகாரமும் குறிப்பிடும். புராணங்கள் பலவற்றில் பாற்கடல் கடைந்த வரலாறு கூறப்பட்டுள்ளது. அங்கவம்ச மாபலி மன்னனுக்கு எட்டாவதாகப் பிருதுலாக்ஷணன் என்ற மன்னன் பிறந்தான் என்று விஷ்ணுபுராணம் கூறுகிறது.

**அபவத்தி பார்த்திவ சூடாமணிர் இத்தஸ்ய ஆத்மஜ ப்ரபாவ நிதி: பாய்(ய) தி யோ முகுந்தே தேவாநாம் அம்ருதம் மமர்த்த தைத்ய பலம் (20)**

அவனுக்கு வீரத்தின் நிதியான பார்த்திவ சூடாமணி என்னும் புத்திரன் பிறந்தான். முகுந்தன் (விஷ்ணு) தேவர்களுக்காக அமுதத்தைப் பாதுகாத்தபோது இவன் அசுரர் படையை அழித்துள்ளான்.

தந்தையைப் போன்றே இவனும் பாற்கடல் கடைந்தபோது பங்கு பெற்றுள்ளான். தேவர்கள் அமுதம் பெற விஷ்ணுவே காரணம் ஆவர். அவருக்கு உதவியாகப் பார்த்திவ சூடாமணி இருந்துள்ளான். அம்ருதம் என்பது அமிழ்தம், அமுதம், அமிர்தம், அமிர்து என்றெல்லாம் தமிழில் வழங்கப்படுகின்றது.

**தீர்க்க பாஹுரத சக்ரவர்த்தி அபூத் தத்குலா பரண முக்தா மாக்ரணீ: யத்ப்ரதாப தஹநம் ஸதாம் மநஸ்தாப ஹாரிணம் முசந்தி ஸூ ரய: (21)**

அதன்பிறகு அந்தக் குலத்திற்கே ஆபரணமானவனும் நல்லோர்களின் முதல்வனுமான தீர்க்கபாஹு என்பவன் சக்கரவர்த்தி ஆனான். அவனுடைய வீரமாகிய நெருப்பு நல்லோர்களின் மன வருத்தத்தைப் போக்கியது என்று கல்விமான்கள் கூறுவர்.

மனஸ்தாபம் என்ற சொல் தற்போதும் பேச்சு வழக்கில் உள்ளது. அரசர்களுக்கெல்லாம் அரசரை வடமொழியில் சக்கரவர்த்தி என்பர். தமிழில் பேரரசன் என அழைப்பர்.

இதில், முரணணி பயின்று வந்துள்ளது. ஆற்றலாகிய எரியினையும் கருணையாகிய மழையினையும் இவன் கொண்டிருந்தான்.

**குருதார ஹரந் நிசாகரம் ஸுரவித்வேஷி பலஞ்ச துர்ஜ்ஜயம் ஜிதவாந் அபவத் ஸ சந்த்ரஜித் விஜய ஸ்ரீகுல மந்திர நிருப: (22)**

அந்த அரசன் குரு(வியாழன்) பகவானின் மனைவியைக் கவர்ந்த சந்திரனையும் யாராலும் வெல்ல முடியாத அசுரர் படையையும் வென்று சந்திரஜித் என்ற பெயரைப் பெற்றான். விஜய எனப்படும் வெற்றித் திருமகளின் குலத்திற்கே இருப்பிடமான மன்னனாக விளங்கினான்.

புராணங்களில் இந்திரனும் சந்திரனும் பிறர் மனைவியைக் கவர்ந்தவர்களாகக் கூறப்பட்டுள்ளனர். இங்கே குருவின் மனைவியைப் புணர்ந்த சந்திரன் கூறப்படுகிறான். இவனை வென்ற மன்னன் சந்திரஜித் என அழைக்கப்பட்டான்.

யோகியாகித் தவம் மேற்கொண்ட சிவன்மீது மலரம்பு எய்தி அதனால் சிவனால் எரிக்கப்பட்ட மன்மதன் சிவஜித் என்ற பெயரைப் பெற்றதாகக் காஞ்சிக் காமாட்சியம்மன் தல வரலாற்றில் உள்ளது. இங்கே சந்திரனை வென்ற சந்திரஜித்தைக் காண்கிறோம். இராவணனுடைய மகன் மேகநாதன் இந்திரனை வென்று இந்திரஜித் என்ற பட்டம் பெற்றான்.

**ஸாங்க்ருதி: க்ருத யுகஸ்ய விராமே சக்ரவர்த்ய பவதஸ்ய தநூஜ:**
**யோ யசச் சசி மரீசிபிர் உச்சைர் அந்வரஞ் ஜயத் இளாம் இதி சித்ரம் (23)**

அவனுடைய மகனான ஸாங்கிருதி என்னும் மன்னன் கிரேதாயுகத்தின் முடிவில் சக்கரவர்த்தி ஆனான். அவன்தன் கீர்த்தியாகிய நிலவின் ஒளியால் புவியை மகிழ்வித்தான் என்பது ஆச்சர்யப்படத்தக்கதாகும்.

நான்கு யுகங்களில் ஒன்று திரேதாயுகம். இந்த யுக முடிவில் ஸாங்கிருது என்ற மன்னன் இருந்ததாகக் கூறப்படுகிறது. இவனுடைய புகழை நிலவின் ஒளியோடு உருவகப்படுத்தப்பட்டுள்ளது. நிலவொளியில் மக்கள் மகிழ்வது இயல்பாகும்.

**ஜித பஞ்சசரோ வபுர்க்குணைர் விஜயி(யீ) பஞ்சப இ(த்யூ) தீரித:**
**அதி பஞ்ச திவோ விளம்பயந் ஸமபூத் தத்குல பூஷண நிருப: (24)**

அந்தக் குலத்தில் தோன்றிய பஞ்சபன் குலபூஷணனாக விளங்கினான். அவன் தன் உடலழகினாலும் குணங்களாலும் காம தேவனையும் வானுலக அதிபதியையும் வென்றவன் ஆவான்.

ஆபரணம் என்பது போலப் பூஷணம் என்பதும் அணிகலனைக் குறிக்கும் வடசொல் ஆகும். வானுலகின் அதிபதி இந்திரன் ஆவான். இவன் ஐந்து யட்ச விருந்தினர்க்குத் தன் குருதியைத் தாகசாந்திக்காக வழங்கியவன் என விஷ்ணுபுராணம் கூறுகிறது.

**ஸத்யவ்ரதஸ் தஸ்ய பூவ வம்சே பித்ரானுசிஷ்டோ ஹயமே தஸ்ருஷ்டம் ரக்ஷந் துரங்கந் ஜிதவாடந் பலேந ஸ வாரணாஸீ பதி காசிராஜம் (25)**

அவனுடைய குலத்தில் சத்யவிரதன் என்பவன் பிறந்தான். அவன் தன் தந்தையால் அறிவுறுத்தப்பட்டு அச்வமேதயாகத்தில் விடப்பட்ட குதிரையைப் பாதுகாக்க வேண்டி, படையோடு சென்றான். அதற்காக வாரணவாசிபதி என்ற காசிராஜனையும் வென்றான்.

மகாபாரதத்தில் காசிராஜன் இடம்பெற்றுள்ளான். வட இந்தியாவில் உள்ள வாரணாசி என்ற காசி சைவர்களின் புனிதநகரமாகும். சங்க நூலான கலித்தொகையில் வாரணவாசி இடம்பெறுகிறது. கேகய வம்ச இளவரசியை மணந்த சத்யவிரதனைப் புராணம் கூறுகிறது.

தமிழ் இலக்கியங்கள், புராணங்கள் பலவற்றில் இடம்பெற்றுள்ள காசி, சாசனங்களின் ஓம்படைக் கிளவிகளில் இடம்பெறுகிறது. காசியை மனதில் கொண்டு தமிழகத்தில் தென்காசி உருவாயிற்று. அச்வமேத யாகத்தைத் தமிழக மன்னர்களும் செய்வித்துள்ளனர். பாண்டியன் பெருவழுதியின் காசுகளில் அச்வமேத யாகத்தைக் குறிப்பிடும் குதிரைச் சின்னம், யூபத்தூண் காணலாம். உண்மை பேசுவதையே விரதமாகக் கொண்ட ஒருவனுக்குச் சத்யவிரதன் என்ற பெயர் ஏற்பட்டது இயல்பாகும். திருமெய்யத்தில் உள்ள சிவபெருமானுக்குச் சத்தியமூர்த்தி என்று பெயராகும்.

**சாபநிர்ய்யத் இதரேதர பாண வ்ராத கட்டந ஸமுத்தத வஹ்நௌ ஆஹவே விஜித ருத்ர மவாதீத் ருத்ரஜித் வமிதியம் ஸுரஸங்க: (26)**

வில்லிலிருந்து அடுத்தடுத்துப் புறப்பட்ட அம்புக் குவியலின் மோதலால் நெருப்பெழும் பெரும் போரில் அவன் ருத்ரனை வென்றான். எனவே தேவர் குழாம் அவனை ருத்ரஜித் என அழைத்தது.

ருத்ரனே சிவன் என்று சிலர் கூறுவர். சிவன் வேறு ருத்ரன் வேறு என்று சிலர் குறிப்பிடுவர். வல்லம் தலபுராணத்தில் கௌதம முனிவனின் காலிலிருந்து வந்த தீயும் சிவனுடைய நெற்றிக் கண்ணிலிருந்து வந்த தீயும் எல்லா உலகையும் செயலிழக்கச் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது. சிவனுக்குச் சமமாகக் கௌதம முனிவர் கூறப்பட்டுள்ளார். இங்கே ருத்ரனை வென்ற சத்ய விரதனைக் காண்கிறோம். சத்தியவிரதன், ருத்ரசித்தன், அரிச்சந்திரன் யாவரும் ஒருவரே என்றும் கூறுவர்.

**ச்யேநத்ரஸ்த கபோதரக்ஷண க்ருணாத் யக்தாத்ம தேஹஸ்ப்ருஹ:**
**ஸ்ரீமத்தத்குல பூஷணம் சிபிரபூதௌசீநரோபூபதி:**
**தத்வம்சாபரணம் பூவ புவநே க்யாதோ மருத்தோ ந்ருபோ**
**யத்யாகாவஹி தாவ சேஷித தநைர்ய்யஜ்ஞ: க்ருத: பாண்டவை: (27)**

சோழர் குலத்தின் பூஷணமாகச் சிபி என்னும் சக்கரவர்த்தி தோன்றினான். அவன் பருந்தினால் அஞ்சிய புறாவைக் காப்பாற்றக் கருணையோடு தன் உடல் மீதிருந்த பற்றை விட்டான். இவன் உசீரனின் மகன் ஆவான். பிறகு அந்தச் சூரிய குலத்தின் ஆபரணமாக மருத்தன் என்ற மன்னன் பிறந்தான். அவன் யாகம் செய்த பிறகு இருந்த மீதி செல்வத்தைக் கொண்டே பாண்டவர்கள் யாகம் செய்தனர்.

சிபியின் மரபினரை வடமொழியில் சைப்யாஸ் என்பர். தமிழில் வழங்கும் செம்பியன் இச்சொல்லுடன் ஒத்துள்ளது. உஷநராவின் நான்கு புதல்வர்களில் சிபி ஒருவன் என்பர். சிபியின் வரலாறு பலரும் அறிந்தது என்பதால் சுருக்கமாகக் குறிப்பிடும் கவிஞர் தன் உடம்பில் இருந்த சதை அரிந்து போட்டதைக் கூறாமல் உடம்பின் மீது இருந்த பற்றை விட்டான் என்று கூறுகிறார். கருணைக்கு உதாரணமாக இந்தச் சிபி மன்னவனைக் கூறுகிறார். விக்கிரமாதித்தன் கதைகளில் ஒன்றான பேசாமடந்தை என்ற கதையில், இலங்கை சென்று சமுத்திரவல்லி என்ற இளவரசியைச் சப்தகேசரி மணந்து கொண்டான். அவன் பாம்பின் பிடியில் சிக்கிய தவளையின் கூக்குரலைக் கேட்டு இரக்கம் கொண்டு தன் தொடையிலிருந்து சதையை அரிந்து போட, பாம்பு தவளையை விட்டு விட்டு, சதையைப் பற்றிக் கொண்டது. இதனால் தவளை உயிர் பிழைத்தது. இதே தவளை மற்றோர் சமயத்தில், கடலில் தள்ளப்பட்டு உயிருக்குச் சப்தகேசரி போராடிய போது காப்பாற்றி அவனைக் கரை சேர்த்ததாக அதே கதையில் உள்ளது. (காண்க: விக்கிரமாதித்தன் – பேசாமடந்தை கதை –ச. கிருஷ்ணமூர்த்தி 2010. சேகர் பதிப்பகம், சென்னை – 78.)

இந்தச் சுலோகத்தில் மூன்று மன்னர்கள் கூறப்பட்டுள்ளனர். சிபியின் வரலாறு மகாபாரதத்தில் உள்ளது. சிலம்பு, கலிங்கத்துப்பரணி போன்ற நூல்களிலும் இடம்பெற்றுள்ளது.

'உடல் கலக்கற வரிந்து தசையிட்டவன்' என்று கலிங்கத்துப்பரணி கூறுகிறது. சதபத ப்ரமானம், ஐத்ரேயம் ஆகிய நூல்களில் இருந்து மன்னன் அஸ்வமேதயாகம் மற்றும் ராஜசூயம் செய்தமையைக் காண்கிறோம்.

**துஷ்ஷ்(ய)ந்த மஸ்ய குலபூஷணம் ஆமநந்தி**
**தௌஷ்ஷ்(ய)ந்திர் அஸ்யபரதஸ் ஸமபூத் தநூஜ:**
**சோளாஹ்வயஸ் ஸமஜநிஷ்ட ததிய ஸூநூர்ய்**
**யந்நாமத: ப்ரதிதமர்க்ககுலம் ப்ருதிவ் யாம்** **(28)**

அந்தக் குலத்தின் பூஷணமாகத் துஷ்யந்தனைக் கூறுவர். அவனுடைய மகனாகப் பரதன் தோன்றினான். பரதனுக்குச் சோழன் என்னும் பெயருடையவன் பிறந்தான். அவனுடைய நாமத்தைக் கொண்டே சூரியனுடைய குலம் பூமியில் புகழ் பெற்றது.

காளிதாசனுடைய சாகுந்தலம் என்ற நூலில் துஷ்யந்தனின் வரலாற்றைக் காணலாம். பரதனுடைய பெயரில்தான் பரதகண்டம், பாரததேசம் வழங்கப்படுகிறது. பூருவம்சத்தில் பிறந்தவனாக விஷ்ணுபுராணம் இவனைக் கூறுகிறது. துஷ ஈந்த் என்றும் துஷ்யந்தைப் படிக்கலாம்.

**சோள ராஷ்ட்ர விவிதோஜ் வலஸம்பந் யக்க்ருத ஸ்வபுர ஸம்பத மிந்த்ரம் யம் வதந்த்யமர நாதமவந்யாம் ஸூர்யஸ்ஸமப(வ) தீர்ண்ணம் உதாரம் (29)**

> சோழ நாட்டில் பலவிதமாகத் திகழும் செல்வத்தால் தேவலோகத்தின் செல்வம் கீழாக்கப்பட்டது. அதனால் தேவர்களின் தலைவனும் பரந்த மனம் உடையவனுமான இந்திரன் பூமியில் அவனுருவில் அவதரித்ததாக அறிஞர் கூறுவர்.

தேவலோகமான அமராவதியைக் காட்டிலும் சோழநாடு வளமாக இருந்ததாகக் கூறுவதுடன் இந்திரனே சோழனாக அவதரித்ததாகக் கவிஞர் குறிப்பிடுகிறார். சோழர்களின் தலைநகரான தஞ்சாவூரும் அளகாபுரம் எனக் குபேரனின் பெயரில் வழங்கப்பட்டதாகத் தஞ்சையின் தலபுராணம் கூறுகிறது. வல்லத்திற்கு இந்திரகீல பருவதம் என்ற பெயரும் இருந்தது.

**நகரோத்த லிதாராதி குஞ்ஜர: பஞ்சரம் ச்ரி(ய):**
**ராஜகேஸரிவர்ம்மா ஸீத் தநய: சோளவர்ம்மண: (30)**

> தன் நகத்தைக்கொண்டே பகைவர்களின் யானைகளைப் பிளந்தவனும் செல்வத்தின் இருப்பிடமானவனும் சோழவர்மனின் மகனுமான ராஜகேஸரி பிறந்தான்.

விலங்குகளின் தலைவனாகச் சிங்கம்(கேசரி) விளங்கியதுபோல் மக்களுக்குத் தலைவனாக ராஜகேஸரி மன்னன் விளங்கினான். சிங்கம் என்று கூறியதால் கூர்மையான நகத்தால் அது யானையைப் பிளந்தது என்று கவிஞர் கூறுகிறார். நரசிம்மர் வடிவில் வந்த விஷ்ணு நகத்தையே ஆயுதமாகக் கொண்டு இரணியனைக் கொன்றதாக அறிகிறோம்.

**ராஜ கேஸரிண: புத்ரோ பூபதி: பரகேஸரீ**
**அபவத் யஸ்ய கோபாக்நி க்ருஹஸ்த மாஸீத் விஷத் பலம் (31)**

> அந்த இராசகேசரியின் புத்திரனாகப் பரகேஸரி பிறந்தான். அவனுடைய கோபாக்கினியில் எதிரிகளின் படை அழிவுற்றது.

ராஜகேசரி – அரசர்களுக்குச் சிங்கம் போன்றவன் என்க.

**தத: ப்ரப்ருதி சோளாநாம் அபிஷேக க்ரமா திமே**
**நாமநீ பரிவர்த்தேதே ராஜ்ஞாம் ஆஜ்ஞாபிதாயிநீ (32)**

அதனைத் தொடர்ந்து அச்சோழ மன்னர்களின் பட்டாபிஷேகக் கிரமத்தை (மேற்படி இரண்டு பெயர்களை) மாறிமாறிச் சோழமன்னர் சூடிக்கொண்டனர்.

சோழர்களின் கல்வெட்டுகள் பல ராஜகேஸரி, பரகேஸரி என்ற பெயர்களைச் சுட்டுகின்றன. இயற்பெயரோ வேறு பெயரோ சுட்டாமல் ராஜகேஸரி, பரகேஸரி என வெறுமனே கூறுவதுமுண்டு. சோழர் போன்று பாண்டியரும் மாறன், சடையன் என மாறி மாறி அழைத்துக் கொண்டனர். கலிங்கத்துப்பரணி நூலில் இரண்டு ராஜகேசரி மன்னர் கூறப்பட்டுள்ளனர்.

**அபூத் சித்ர ரதே(ா)ராஜா பரகேஸரி ஸம்பவ:**
**சித்ராச்ரவஸ் தத்ஸுதஸ் தஸ்ய சித்ர தந்வா மஹீபதி: (33)**

பரகேஸரியிடமிருந்து சித்ரரதனும் சித்ர ரதனிடமிருந்து சித்ராச்ரவனும் சித்ராச்ரவனிடமிருந்து சித்ரதன்வா என்னும் மன்னனும் பிறந்தனர்.

இந்த ஒரு சுலோகத்தில் மூன்று புராண மன்னர்கள் கூறப்பட்டுள்ளனர்.

**ஸர்வ்வ திகப் யஸ் ஸமாநீதா: பார்த்திவைர் அர்த்த ராசய:**
**தஸ்யாக்ரதோ வ்யகிர்ய்யந்த தேநாபி ஸஹஸார்த்திநாம் (34)**

பிற அரசர்களால் எல்லாத் திசைகளிலிருந்தும் செல்வக்குவியல் சித்ரதன்வாவுக்குக் கிடைக்க அவன் அதனை உடனே யாசிப்போருக்கு அளித்து விடுவான்.

தமக்கு அடங்கிய நாடுகளிடமிருந்து வசூலிப்பது திறையாகும். அதனை ஏழைகளுக்குச் சித்ராதன்வா வழங்குவதாக இச்சுலோகம் கூறுகிறது.

**ஸுரஸரித் அவதாரிதேதி மத்வா தபஸி ரதேந பகீரதேந ராஜ்ஞா**
**நரபதிர் அவதாரயந் யசோர்த்தீ நிஜபுவி தாம் ஸ கவேர கந்யா காக்யாம் (35)**

தவத்தின் மூலம் பகீரதன் ஆகாய கங்கையைப் பூமிக்குக் கொண்டு வந்தான். இதனைக் கேள்வியுற்ற சித்ரதன்வா புகழை வேண்டியவனாய்த் தவத்தில் முனைந்து கவேரனின் மகளைத் தன் நாட்டிற்கு வரவழைத்தான்.

காவேரி ஆற்றைத் தவத்தின்மூலம் சித்ரதன்வா கொண்டுவந்தான் என்று இச்சுலோகம் குறிப்பிடுகிறது. அகத்தியன் கையில் இருந்த கெண்டியைக் காக வடிவில் வந்த விநாயகர் கவிழ்க்க அந்த நீரே காவேரி நதியாகப் பெருக்கெடுத்து ஓடியது என்ற புராணமும் உண்டு.

அவதாரியந் என்பது அவாதார்யத் என்று மாற்றி வாசிக்கலாம் என்பர்.

**ஸுர குருர் அபவத் ததீய வம்சே குலபவநம் விஜயேந்த்ரா யுவத்யா:**
**நிஜ மஹிமாஜி தாந்தகஸ் ஸ்வராஜ்யே நரபதிராப ஸ மிருத்யுஜித் ஸமாக்யாம் (36)**

அந்தக் குலத்தில் ஸூரகுரு என்னும் அரசன் தோன்றினான். அவன் வெற்றித் திருமகளின் உறைவிடம். தன்பெருமையால் யமனை வென்றவன். அதனால் தனது நாட்டில் மிருத்யுஜித் என்னும் பெயரைப் பெற்றான்.

திருக்கழுக்குன்றத் தலபுராணத்தில் சுரகுரு என்ற இப்புராண மன்னர் இடம்பெற்றுள்ளார்.

மருத்து – யமன். விஜயம் – வெற்றி. கலிங்கத்துப் பரணி சுராதிராஜன், மிருத்யூஜித் என இருவராகக் கூறுகிறது.

**வ்யாக்ரகேதுர் இதி சித்ரரதோ பூத் வ்யாக்ரவத் வஜபட: க்ஷிதிநாத:**
**தத்குலே ப்ரதித விக்ரம ராசிர்த்தா தகீ குஸும பூஷித மௌலி (37)**

அந்தக் குலத்தில் வியாக்கிரகேது என்ற சித்ரரதன் பிறந்தான். அவன் புலி பொறிக்கப்பட்ட கொடியை உடையவன். வீரத்தின் திருவுருவான அவன் ஆத்திப் பூக்களால் ஆன மகுடத்தை உடையவன்.

சோழருடைய கொடியான புலிக்கொடியும் அவர்களுக்குரிய ஆத்திமலரும் இச்சுலோகத்தில் கூறப்பட்டுள்ளன. வ்யாக்ரம் – புலி. புலிக்கால் முனிவர் சிவனை வழிபட்டு உய்ந்தவர். சிதம்பரம் தலத்துடன் புலிக்கால் முனிவரைத் தொடர்புபடுத்துவர். வியாக்ர புரி என்ற பெயரில் ஊரும் உண்டு. செங்கல்பட்டு அருகே இப்பெயரில் ஊரும், மலைமீது வியாக்ரபுரீஸ்வரர் கோயிலும் உள்ளன. மிருத் யூஜித்தின் மகனாக வியாக்ர கேதுவைக் கூறாமல் அவனுக்கு முன்பு வேறோர் மன்னனை (விச்வஜித்) கலிங்கத்துப்பரணி கூறுகிறது. சோழருடைய கொடியின் பெயரை ஒரு சோழன் பெற்றிருந்தான்.

**த்ரேதாயுகே கதவதி க்ஷயமஸ்ய ராஜ்ஞு**
**புத்ரோ நரேந்த்ரபதிர்: இத்யபவ(ந்ந) ரேந்த்ர:**
**யத்பாத பீடலுடநாத்(ந்) மகுடாந்ய பூவந்**
**ராஜ்ஞாம் ஸதாசிதில பந்த களத்(ந்) மணீநி (38)**

திரேதாயுகம் முடிந்தபோது இவன் புத்திரனாக நரேந்திரபதி என்பவன் தோன்றினான். அவனுடைய பாதபீடத்தை உராய்ந்ததால் பிற மன்னர்களின் மகுடங்களின் மணிகள் கட்டற்றுச் சிதறின.

சோழ மன்னரான நரேந்திர பூபதியைப் பிற மன்னர்கள் வீழ்ந்து வணங்கினார்கள் என்ற விவரத்தைக் கவிநயத்துடன் இச்சுலோகம் குறிப்பிடுகிறது. புட்பகேது என்ற பெயரும் இவனுக்கு உண்டு.

**உபரிசர இதிஸ்புடாபிதாநஸ் ஸூரபதி தத்தவிமாந காமசாரி**
**வஸூர ஸூரவிநாச ஹைதுருச்சைர்த் திநகரவம்ச சிகாமணிஸ் ததோபூத் (39)**

அதன்பிறகு சூரிய குலத்தின் சிகாமணி போன்ற வசு என்பவன் பிறந்தான். இவனுக்கு உபரிசரன் என்ற பெயருமுண்டு. இந்திரனால் வழங்கப்பட்ட விமானத்தில் தன் விருப்பம்போலச் செல்லும் பெருமையுடைய இவன் அசுரர்களை அழிக்கும் காரியத்தில் ஈடுபட்டவன் ஆவான்.

சிகாமணி – தலையணி. வசுவுக்கும் இரண்டு பெயர்கள் உள்ளன. தேவர் தலைவன் என்று இந்திரன் இச்சுலோகத்தில் கூறப்படுகிறான் (சுரபதி என்க) சோழ மன்னர்களில் புராண மன்னர்கள் பலரும் தேவர்களுக்கு ஆதரவாக அசுரர்களை அழித்ததாகக் காண்கிறோம். சீவக சிந்தாமணி, இராமாயணம் எனப் பல நூல்களில் விண்ணில் செல்லும் விமானங்கள் கூறப்பட்டுள்ளன. 'சுடர் மணித்திரள் விமானமதுவான் மிசை உயர்த்த அவனும்' என்று கலிங்கத்துப்பரணி கூறுகிறது.

**த்வாபரஸ்ய விராமேஸ்ய ராஜசூடாமணே குலே**
**விச்வஜிந் நாம விச்வேஷாஞ்ஜே தாஸீத் அரி பூப்ருதாம் (40)**

அவனுடைய குலத்தில் துவாபர யுகத்தின் முடிவில் விச்வஜித் என்னும் மன்னன் தோன்றினான். பகை அரசர்களை எல்லாம் வெற்றி கொண்டதால் இவன் அரசர்களுக்குச் சூடாமணியாகத் திகழ்ந்தான்.

சென்ற சுலோகத்தில் சிகாமணி கூறிய கவிஞர் இதில் சூடாமணி கூறுகிறார். தலையில்அணியும் சிறந்த அணி சூடாமணி. முன்னர் திரேதாயுகம் கூறியவர் இதில் துவாபரயுகத்தைக் கூறுகிறார். யுகங்கள் நான்கென்பது மரபாகும். பூருவமிசத்தவனாக இவனை விஷ்ணு புராணம் கூறுகிறது.

**ஸகலாவநி பால மௌலிபிர்ம் மணிமாலா கலிதைஸ் ஸமர்ச்சிதா:**
**(க)மலாநிலய: கலாகர: பேருநத்(பெருநற்) கிள்ளிர் அபூத் ததந்வயே (41)**

அந்தக் குலத்தில் கலைகளின் குவியலான பெருநற்கிள்ளி என்ற மன்னன் தோன்றினான். பிற அரசர்களுடைய மணி மாலைகள் பதிப்பிக்கப்பட்ட மகுடங்களால் அலங்கரிக்கப்பட்ட இவ்வரசன் இலக்குமியின் உறைவிடமாகத் திகழ்ந்தான்.

சங்க காலத்தில் இருந்த சோழ மன்னர்களுள் பெருநற்கிள்ளி ஒருவன் ஆவான். அவனை இச்சுலோகத்தில் காண்கிறோம். பேருநத் என்று சுலோகத்தில் உள்ளது. (ற் எழுத்து மற்றும் எகரமெய் வடமொழியில் கிடையாது) இம்மன்னன் கலாரசிகனாகவும், வீரமிக்கவனாகவும் செல்வனாகவும் இருந்ததைக் கவிஞர் நயமாகக் கூறுகிறார். மன்னர் வரிசை பெரிய லெய்டன் செப்பேட்டில் மாறுபடுகிறது.

'தளவழிக் குகையினில் பொழிபுலத்தின் வழியே
தனிநடத் துரகர் தங்கள்மணி கொண்டவனும்'

என்று கலிங்கத்துப்பரணி நூல் இவனைக் கூறுகிறது.

**காலத்வாத் கரிணாம் கலேக்ஷ ஸகல க்ஷோணீ ப்ருதாந் நாயகம்**
**யம் ப்ராஹு: கலிகாலமுந்நதிமதா மக்ரேஸரம் ஸத்குணை:**
**காஞ்சீம் யக்ஷ நவீச கார கநகைஸ்: ஸோபூதமுஷ்யாந் வயே**
**காவேரீ தடபந்தந ப்ரகடிதஸ் பீதாத்ம கீர்த்தி நிருப (42)**

> யானைகளுக்கும் கலிகாலத்திற்கும் காலன் ஆதலால் கலிகாலன் எனப்பட்ட மன்னன் அரசர்களுக்கு அரசன் இந்தக் குலத்தில் பிறந்தான். நற்குணங்களை உடைய பெரியோர்களில் முதல்வனாக இவ்வரசன் திகழ்ந்தான். காஞ்சிநகரை அழகுபடுத்தும் விதமாகப் பொன்மாளிகை எடுப்பித்தான். காவிரியின் கரைகளைக் கட்டி, தன் திரண்ட புகழை வெளிப்படுத்தினான்.

இச்சுலோகம் சோழர்களில் சிறந்த கரிகால மன்னனைக் குறிப்பிடுகிறது. சுலோகத்தில் கலி கால என்றே உள்ளது. கால தேவனான கூற்றுவனுக்கே இவன் கூற்றுவன் என்று இச்சொல்லுக்குப் பொருளாகும். உயர்ந்தவர்களின் உயர்ந்தவனாக இருந்த இவன் காவிரியின் வெள்ளத்தைத் தடுக்கக் கரைகளை உயர்த்திக் கட்டினான். காஞ்சி நகரில் பொன்னால் அரண்மனை கட்டினான் என்பதைவிடத் தங்கத்தால் கோயில் விமானத்தை அமைத்தான் எனலாம். காமாக்ஷி அம்மன் கோயிலுடன் இவனைத் தொடர்பு படுத்துவர். கலிகால என்ற பெயர் பெரிய லெய்டன் செப்பேட்டிலும் கலிங்கத்துப்பரணி நூலிலும் இடம்பெறவில்லை. காவிரி நதிக்கு இடையில் அணை (கல்லணை) கட்டினான் என்ற விவரம் இதில் காவேரி தட பந்தன் என்றுள்ளது. சேதுபந்தன் என்ற பிற்காலத் தொடரும் ஒப்பு நோக்கலாம். கரிகாலன் என்ற சொல்லிற்குப் பலவாறு அறிஞர் விளக்கம் தருவர். ஆயின் இங்கே கலிகாலனே வந்துள்ளது. கரி – யானை; கரி – தீப்புண்பட்டு கரிய; காலன் – யமன்; காலன் – காலையுடையவன்.

**கோச் சே(செ)ங்கணாந்(ன்) குவலய தலச்யா மலாலோள த்ருஷ்டிச்**
**சம்போர் பக்தயா த்ரிபுரஜயிநோ லூநலூதாங்க பந்த:**
**லோகா லோகக்ஷிதி ப்ருதவதி க்ஷமாம் புஜேந் ஆத தாநோ**
**வம்சே தஸ்ய ப்ரதித மஹஸ சக்ரவர்த்தீ பபூவ: (43)**

அவனுடைய வம்சத்தில் வலிமையும் புகழும் பெற்ற கோச்செங்கணான் என்னும் சக்கரவர்த்தி பிறந்தான். இவன் விழிகள் குவளையின் இதழ்கள் போல் அசைந்தாடும் அழகுடையன. திரிபுரம் எரித்த பரமன் மீது கொண்ட பக்தியால் சிலந்திப் பிறப்பை விட்டவன். லோகாலோகம் வரையிலான உலகைத் தன் தோளால் சுமந்தவன்.

கரிகாலனுடைய வம்சத்தில் கோச்செங்கணான் பிறந்தான். பிறந்தபோது சிவந்த கண்ணுடன் இருந்ததால் செங்கணான் என அழைக்கப்பட்டான். திருவானைக்காவல் என்ற ஜம்புகேஸ்வரத்தில் சிலந்தி வடிவில் சிவலிங்கத்தை வழிபட்டு மறுபிறப்பில் அரசனாகப் பிறந்தவன். இவன் பெருநிலப் பரப்பை ஆண்டதாக இச்சுலோகம் கூறுகிறது. தருமபுரி அருகே சிவாடி என்ற ஊரிலும் பெண்ணாகடம் என்ற பாடல் பெற்ற தலத்திலும் கோச்செங்கண்ணீஸ்வரம் என்ற பெயரில் பிற்காலச் சோழர் காலத்தில் கோயில்கள் இருந்தமை சாசனங்கள் மூலம் அறிகிறோம். (காண்க: பெண்ணாகடம் கோயில்கள் –ச. கிருஷ்ணமூர்த்தி 2000, சேகர் பதிப்பகம், சென்னை.) சிம்மவிஷ்ணு என்ற பல்லவ மன்னன் இவனை வென்றதாகவும் கூறுவர். (காண்க: பல்லவர் செப்பேடுகள் முப்பது.) அப்பர் பெருமானும் திருமங்கை ஆழ்வாரும் இவனைப் போற்றுவர். 63 நாயன்மார்களுள் ஒருவனான இவனைப் பெரியபுராணத்தில் விரிவாகக் காணலாம்.

**ஸமஜநி விஜயால(ய)ஸ் ததீயே மஹதி குலேமகி(க)நீய விக்ரமஸ்ரீ: அஹமஹமிகயா ப்ரணாம ச(சு) ஞ்சு க்ஷிதிபதி மௌலி விகட்டிதாங் க்ரிபீட: (44)**

அந்தப் பெருங்குலத்தில் பெருமை வாய்ந்த வீரமும் செல்வமும் உடைய விஜயாலயன் என்ற மன்னன் பிறந்தான். பிற அரசர்கள் போட்டி போட்டுக்கொண்டு நான், நான் என்று வணங்கும் மகுடங்களால் உராயப்பட்ட பாதபீடத்தை உடையவனாக அவன் விளங்கினான்.

விஜயாலயன் பிற்காலச் சோழப் பேரரசை நிறுவிய முதல் மன்னன் என்று வரலாற்றறிஞர் குறிப்பிடுவர். பிற்காலப் பாண்டியப் பேரரசை உருவாக்கியவன் கடுங்கோன் என்பது வரலாறு. விஜயாலயன் யாருடைய மகன் என்ற விவரம் இதில் இல்லை. பராந்தகனுடைய திருத்தணி வேலஞ்சேரிச் செப்பேட்டில் விஜயாலய சோழனுக்கு முன் ஒற்றியூரன் பெயர் இடம்பெறுவதால் விஜயாலயனின் தந்தை ஒற்றியூரன் என்று வேலஞ்சேரிச் செப்பேட்டைப் பதிப்பித்த அறிஞர் இரா. நாகசாமி கருதுகிறார். ஸ்ரீகண்ட சோழனின் மகன் என்ற கருத்தினைச் சிலர் கூறுவர்.

**ஸத்ருஞ்சி (ங்வசி)த்ராம் அளகாபிராமாம் வ்யாப்தாம் பராமாத்மவதுாமிவாசௌ தஞ்ஜாபுரீம் சௌதஸுதாங்கராகாம் ஜக்ராஹ ரந்தும் ரவிவம்ச தீப :(45)**

சூரிய குலத்தின் விளக்கான விஜயாலயன் அனுபவிப்பதற்காகத் தன் தேவியைக் கொள்வதுபோலத் தஞ்சாவூர் என்ற நகரைக் கைக் கொண்டான். அந்த ஊர் கண்களுக்குத் தகுந்த சித்திரங்களை உடையது. (கண்களால் ஓவியமானவள் என்பது தேவிக்குச் சிலேடையால் அடைமொழி) அழகாபுரி நகர்போன்று அவ்வூர் அழகியது. (அளகம் என்றால் கூந்தல் என்பதால் கூந்தலால் அழகானவள் என்பது மன்னனின் மனைவிக்குச் சிலேடை) கட்டடங்களால் ஆகாயம்வரை பரவியது (ஆடையால் மறைக்கப்பட்டவள் என மனைவிக்குச் சிலேடை) சுண்ணத்தால் மாளிகைகள் வண்ணமாக விளங்குகின்றன. (சந்தனத்தால் பொலிவுகொண்ட மேனியுடையவள் என்பது தேவிக்குச் சிலேடை)

இச்சுலோகத்தில் தஞ்சாவூரின் சிறப்பும் விஜயாலய சோழனுடைய மனைவியின் சிறப்பும் சிலேடை மூலம் கூறப்பட்டுள்ளன. இதுவரை அச்சில் வராத 'கபிலைக் கதை' என்ற ஓலைச்சுவடியில் தஞ்சையை வென்று அங்கு அரண்மனையைக் கட்டியதுடன் எண்ணாயிரம் பிராமணரை விஜயாலய சோழன் தஞ்சையில் குடி அமர்த்தினான் என்ற செய்தி அதில் உள்ளது. (வரலாற்றில் வல்லம் – ச. கிருஷ்ணமூர்த்தி, சேகர் பதிப்பகம் 1995). அளகாபுரி என்பதை அளகாபுரமாகத் தமிழில் கூறலாம். குபேரனின் நகரம் அளகாபுரியாகும். தஞ்சை மகாத்மியத்தில் இவ்வூரின் பெயர்களுள் ஒன்றாக அளகாபுரி கூறப்படுகிறது. திசைகளையே ஆடையாகக் கொண்ட சிவனை அண்டாபரணர் என்று சிதம்பரம் கல்வெட்டு கூறுகிறது. ஆடையின்றி இருக்கும் சமணரைத் திகம்பரர் என்று கூறுவர்.

குறுந்தொகையில் உள்ள 'கொங்குதேர் வாழ்க்கை' என்று தொடங்கும் பாடல், தலைவியின் கூந்தல் சிறப்பைக் கூறுகிறது. அளகாபரணம் என்பது கூந்தல் அலங்காரமாகும். சுதம் என்பது சுண்ணாம்பு என்பதுடன் சந்தனத்தையும் சுட்டும். முத்தரைய அரசரிடமிருந்து விஜயாலயன் தஞ்சையைக் கைப்பற்றியபின் அந்நகரைத் தலைநகராக்கி அழகுபடுத்தினார். இடைக்காலச் சோழரின் தலைநகராகப் பழையாறை விளங்கியது. முதலாம் இராசேந்திரன் காலம் முதல் சோழப் பேரரசு மறையும் வரை கங்கைகொண்ட சோழபுரம் தலைநகராக இருந்துள்ளது. விஜயநகர அரசன் நரச நாயக்கர் சாசனம் தஞ்சாராஜ்யம் என்று தஞ்சையைக் கூறுகிறது.

**அத ப்ரதிஷ்டாப்ய நிஸு (சு)ம்ப ஸூதநீம் ஸுராஸுரைர் அர்ச்சிதபாத பங்கஜாம்**
**சதுஸ் ஸமுத்ராம் பர சோபி நீம் புவம் பபாரமாலா மிவ தத் ப்ரஸாதத(46)**

> பிறகு சுரர்களாலும் அசுரர்களாலும் வணங்கப்பட்ட பாத தாமரைகளை உடையவளும் நிசும்பனை வதைத்தவளுமான துர்க்கையை விஜயாலயன் பிரதிஷ்டை செய்தான். அவளுடைய கருணையால் நான்கு கடல்களையும் ஆடையாகக் கொண்டு திகழும் பூமிதேவியை ஒரு மாலையைப் போலத் தாங்கினான்.

நிசும்பன் என்ற அசுரனை அழித்த துர்க்கை நிசும்பசூதனி என்ற பெயரைப் பெற்றாள். தஞ்சை மகாத்மியம் மட்டுமின்றி வல்லம் தலபுராணத்திலும் ஏகவீரி என்ற துர்க்கையும் அரியும் நிசும்பன் உட்பட மூன்று அரக்கரை அழித்ததாகக் காண்கிறோம். நிசும்பனை அழித்ததால் எஞ்சிய அசுரர்கள், சுரர்கள்(தேவர்கள்) போன்று துர்க்கையை வழிபட்டனர். ஏழுகடல் என்பதுபோல் சதுசமுத்திரம் ஒரு மரபு போலும். இனி, நான்கு திசைகளிலும் உள்ள சமுத்திரத்தை ஆடையாகக் கொண்ட நிலமகள் என்றும் பொருள் கூறலாம். அரசாண்டான் என்பதையே பூதேவியைத் தாங்கினான் என்று செப்பேடு கூறுகிறது. விஜயாலயன் எடுப்பித்த நிசும்ப சூதனி கோயில் தற்போது இல்லை என்றாலும் பிரதிஷ்டை செய்த துர்க்கையின் கற்சிலை தற்போதும் உள்ளது. தஞ்சை பூமால்ராவுத்தன் கோயில் தெருவில் இது உள்ளது.

**ஆதித்ய வர்ம்மா நிருபதிஸ் தநூஜோ புதாச்ரய(ஸ்)ஸந்திஷ்ணஸ் தரஸ்வீ தோஷாபநீதௌ ஸததம் ப்ரவ்ருத்தஸ் ஸன்மார்க்க வர்த்தீ க்ஷிதிம் அந்வரக்ஷத் (47)**

> அவனுடைய புத்திரனான ஆதித்தவர்மன் பூமியைக் காத்தவன். அறிவாளிகளுக்கு அடைக்கலமானவன். அறிவுடைய வியாழனைப் போன்றவன். செயல்களில் வேகமிக்கவன். பாவங்களைப் போக்க எப்போதும் விரும்புபவன். நன்மார்க்கத்தில் செல்பவன்.

இச்சுலோகமும் சிலேடையில் கூடியது. வேகமாகச் செல்லுதல், தோஷமாகிய இருட்டைக் களைதல், நிலையான வழியில் என்றும் செல்லுதல் சூரியனுக்குச் சிலேடையாகும். கி. பி. 871 இல் ஆதித்தன் இளவரசன் ஆனான். 881 இல் தந்தை இறந்தபின் சோழநாட்டின் மன்னன் ஆனான்.

**தஸ்யை கதவளச் சத்ரச் சாயாமாச்ரித்ய மேதிநீ**
**அசர்ம்ம கர்ம்ம ஜன்மார்த்திந் ஆப்யஜாநாத் கதாசந (48)**

அவனுடைய ஒரே வெண்கொற்றக்குடையின் நிழலைச் சார்ந்த பூமகள் பாவம் என்னும் வெப்பத்தால் தோன்றிய துயரை ஒருபோதும் அறிந்ததில்லை.

நிலமகள் துயர் அடையவில்லை என்று கூறுவதின்மூலம் மக்கள் மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள் என்பதை இச்சுலோகம் குறிப்பிடுகிறது.

**அபராஜித மப்யஸௌ ரணே ஜிதவாந் பல்லவம் உல்ல ஸத்பலம் (ஸத்வலம்)**
**தயிதாமபி தஸ்ய மேதிநீம் ஸ்வவம்சீக்ருத்ய தா(த)ப்யா பூத் க்ருதீ (49)**

எழுச்சியையுடைய படைகொண்ட பல்லவ மன்னனான அபராஜிதனைப் போரில் ஆதித்ய சோழன் வென்றான். அவன் மனைவி போன்ற நிலத்தைத் தன்வசப்படுத்தியும் தர்மவானாகவே திகழ்ந்தான்.

அரசனுக்கு அவனுடைய பூமியும் ஒரு மனைவி போன்றவள். எனவே மனைவியைப் போலப் பூமியையும் (நாடு என்க.) காக்கவேண்டும். அபராஜிதனை ஆதித்தன் வென்றதுபோல் கம்பவர்மனை விஜயாலய சோழன் வென்று தஞ்சையைக் கைப்பற்றியதாக இராஜாதிராஜனுடைய கழுக்காணி முட்டச் செப்பேடு கூறுகிறது.

வள்ளுவரும் 'ஊக்கமில்லாத நிலமுடையவனை நிலமென்னும் நல்லாள் ஊடி விடுவாள்' என்று கூறும்போது உழவனின் மனைவியாக நிலத்தைக் கூறுகிறார்.

அபராஜிதனை ஆதித்தன் கொன்றதாகக் கன்னியாகுமரிக் கல்வெட்டும் கூறும்.

திருமன்னிவளர இருநிலமடந்தையும் என்று தொடங்கும் இராசேந்திரன் மெய்க்கீர்த்தியில் பூமிதேவி கூறப்படுகிறாள். திருப்புறம்புயம் போரில் பல்லவப் பேரரசனுக்காகப் பாண்டியருடன் போரிட்டுவென்ற ஆதித்தசோழன் தக்க சமயத்தில் அபராஜிதனாகிய பல்லவனைக் கொன்று தொண்டை நாட்டையும் கைப்பற்றிக் கொண்டான். அபராஜித வர்மனுடைய பூமி தேவியாகிய மனைவியைக் கவர்ந்துகொண்டாலும் ஆதித்த சோழன் தர்மவானாகத் திகழ்ந்தான் என்பது நயமாகும். மாற்றான் மனைவியைக் கவருவதே பாவமாகும். மாறாக மாற்றார் நாட்டை வென்று அந்நாட்டைச் செங்கோலாட்சி செய்வது தர்மமேயாகும். பொதுவாகப் பகைவர் நாட்டை அழிப்பதே வென்ற மன்னனின் இயல்பாகும். ஆயின் பல்லவ நாட்டை வென்று அந்நாட்டின் வளர்ச்சியில் ஈடுபட்ட ஆதித்த சோழனின் கல்வெட்டுகள் திருக்கழுக்குன்றம், திருவொற்றியூர் உட்படப் பல ஊர்களில் காண்கிறோம்.

**ஆநந்த ஸந்தோஹ இவ ப்ரஜாநாந் ததிய ஸூநுஸ் தநுமாந் பபூவ**
**பராந்தகோ நாம யதார்த்த நாமா புராந்த காங்க்ரித்வய பந்(த்)ம**
**ப்ருங்க (50)**

ஆதித்தனுடைய மகன் பராந்தகன் பெயருக்குத் தகுந்த பொருளுடையவன். அவன் மக்களின் ஆனந்தக் குவியலே ஓர் உருக் கொண்டதைப் போன்றவன். திரிபுராந்தகனின் திருவடித் தாமரையிணையில் வண்டானவன்.

பராந்தகன் – எதிரிகளுக்கு அந்தகன் (யமன்) என்று பொருள். பராந்தகன் ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியாக இருந்தனர். சிவபெருமானை மறவாத சிந்தனை உடையவனாக இவன் இருந்தான் என்பதை இச்சுலோகம் கவித்துவமாகக் கூறுகிறது.

**யஸ்ய ப்ரதாப தஹநேந பரியமாணஸ்**
**த(த்த)த்தா(ப) சாந்திமிவ கர்த்து மனாஸ்ஸேவக:**
**ஸத்யஸ் ஸமுத்ர மவீ சந்ந(ந்நி) ஜ ராஜலக்ஷ்மீம்**
**ப்ருத்வீம் குலக்ரமாக தாஞ்சவிஹாய பாண்ட்ய (51)**

பராந்தகனுடைய வீரமென்னும் தீயால் எரிக்கப்பட்ட பாண்டிய மன்னன் அந்த வெம்மையைப் போக்குபவன் போல வேகத்தோடு தன்னுடைய ராஜலக்ஷ்மியையும் குலமுறைப்படி வந்த நிலத்தையும் விடுத்துக்கடலில் நுழைந்தான்.

பராந்தக சோழனிடம் தோல்வி அடைந்த பாண்டியன் கடல் வழியாகச் சிங்கள நாட்டிற்குத் தப்பிச் சென்றான் என்பது வரலாறு. சோழனுடைய போர்வெப்பத்தைத் தணிவித்துக் கொள்ளக் கடலின் குளிர்ச்சியைப் பாண்டியன் நாடினான் என்பது கவிதை நயமாகும். பாண்டியனை வென்றதுடன் அவன் நாட்டையும் பராந்தகன் கைப்பற்றிக்கொண்டான் என்பது இச்சுலோகத்தின் கருத்தாகும். இதையே இவனுடைய மெய்க்கீர்த்தி **மதுரைகொண்ட பரகேசரி** என்று குறிப்பிடுகிறது.

**யஸ்ய கோபதஹநோ தஹந் த்விஷச் சாந்தி மாப ந ஸமுத்ரவாரிணி**
**சஸ்த்ரக்ருத்தஹத சிம்ஹளாங்கநா நேத்ரவாரிணி ஸ மஞ்ஜ காம ச (52)**

பராந்தகனுடைய சினத்தீயானது கடல் நீரால் அமைதி அடையவில்லை. ஆயுதங்களால் வெட்டப்பட்டு மாண்ட சிங்கள வீரர்களின் மனைவிமார்களின் கண்ணீரினால் அமைதியடைந்தது.

பராந்தகனுடைய போரினால் கணவன்மார்களை இழந்த சிங்களப் பெண்கள் அழுதனர். அவர்களுடைய கண்ணீரினால் பராந்தகனுடைய கோபம் தணிந்தது. பெண்டிரின் அழுகையே ஒருவருக்கு இரக்கத்தை உருவாக்கும். இங்கே கணவன்மார்களைப் பறிகொடுத்த சிங்களப் பெண்டிர் விட்ட கண்ணீர் சோழனுடைய சினத்தைத் தணிவித்தது என்பது

இயல்பேயாகும். ஈழநாட்டை வென்ற முதல் பிற்காலச் சோழன் பராந்தகன் ஆவான். எனினும் ஈழநாட்டைச் சோழப் பேரரசில் இணைத்தவன் முதலாம் இராசராசன் ஆவான்.

ஸமுத்ரவாரிணி – பெருங்கடல்நீர். நேத்ரவாரிணி – கண்ணீர். சிங்களநாட்டை மதுராந்தகன் வென்றதை அவனுடைய மெய்க்கீர்த்தி 'மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி' என்று கூறுகிறது. திருப்பாற்கடல் கல்வெட்டு சோழனுடன் இலங்கைப்படையும் பாண்டியர் படையும் வெள்ளூரில் போரிட்டுத் தோற்று ஓடியதைக் கூறுகிறது. (S. I. I. Voll. – III எண் 99)

**ரஜத கிரிஜுஷ புரா புராரேர க்ரு (குரு)த ஸ தப்ரஸபா பிதாநமோக:**
**கநக மயமுதார ஸம்பதா யஸ்ஸசிவம் அமுஷ்ய ச லஜ்ஜிதம் தநேசம்(53)**

வெள்ளிமலை வாசனான திரிபுரம் எரித்த சிவபெருமானுக்குத் தப்ரசபையில் (திருச்சிற்றம்பலத்தில்) பராந்தகன், கனகசபை ஏற்படுத்தினான் (பொன்னம்பலத்தில் பொன்வேய்ந்தான் என்க). இதனால் சிவபெருமானுடைய நண்பனும் செல்வத்துக்கு அதிபதியுமான குபேரன் வெட்கப்பட்டான்.

கைலாசகிரியே வெள்ளிமலையாகும். இமைய பர்வதம், பனிமலை என்றெல்லாம் இது வழங்கப்படும். வெள்ளிமலையில் இருப்பவருக்குத் தில்லையில் பொன்னம்பலம் உருவாக்கினான் என்பது முரணணியாகும். குபேரன் லஜ்ஜைப்படும்படி பொன்வேய்ந்தான் என்பது அபூத உவமையாகும். லஜ்ஜை என்ற வடசொல் இன்னும் தமிழ்நாட்டில் வழக்கில் உள்ளது.

**ராஜாதித்யஸ் தத்ஸுத க்ருஷ்ணராஜஞ் ஜித்வா யுத்தே ஸ்வர்க்க(ம)த்யா ருரோஹ**
**தத் ப்ராதாபூத் கண்டராதித்ய நாமா ராஜா பூப்ருந் மௌலி மாலார்ச்சி தாங்க்ரி (54)**

அவனுடைய (பராந்தகனுடைய) மகனான ராஜாதித்யன் கிருஷ்ண ராஜனுடன் (மூன்றாம் கிருஷ்ணனாகிய கன்னரதேவனுடன்) போரிட்டு வென்று சொர்க்கத்துக்குச் சென்றான். அவனுடைய சகோதரனும் (தம்பியும்) அரசர்களின் மகுடங்களால் ஆன மாலைகளால் போற்றப்பட்ட பாதபீடங்களை உடைய கண்டராதித்தன் சோழ மன்னன் ஆனான்.

கன்னரதேவனாகிய மூன்றாம் கிருஷ்ணன் என்ற இராட்டிரகூட அரசனுடன் முதலாம் இராஜாதித்யன் தக்கோலம் என்ற ஊரில் போரிட்டான். போரில் இறந்துபட்டான் என்பது வரலாறாகும். இதனைச்

செப்பேடு இராஜாதித்யன் சொர்க்கத்துக்குப் போனான் என்று கூறுகிறது. பராந்தக சோழனுடைய இரண்டாவது மகனான கண்டராதித்தன் சிவநெறிச் செல்வன் ஆவான். அரச பதவியில் நாட்டமின்றி அரனுடைய தலங்கள் தோறும் வழிபட்டவன். திருவிசைப்பா பாடிய புலவர்களில் ஒருவன். மேற்கெழுந்தருளிய தேவர் என இவன் அழைக்கப்பட்டான். இவனுடைய பெயரில் கண்டராதித்ய சதுர்வேதி மங்கலம் ஏற்படுத்தப்பட்டது.

இவனுடைய மனைவியான செம்பியன்மாதேவியார் கணவனைப் போன்றே சிவனடியாராக வாழ்ந்தார். கணவன் சிவப்பேறு எய்திய பின்னர் நீண்டகாலம் வாழ்ந்து எண்ணற்ற கோயில்களுக்குத் திருப்பணிகள் புரிந்தார். ஐம்பொன் சிலைகளைச் செய்து அளித்தார். கோனேரிராஜபுரம் என இன்றழைக்கப்படும் திருநல்லத்தில் கண்டராதித்தன் சிவனை வணங்குவது போன்ற சிலையைச் செய்து அளித்துள்ளார். உத்தமசோழனை ஈன்றெடுத்த இவ்வம்மையார் இராஜராஜன் மற்றும் இராசேந்திரன் கல்வெட்டுகளிலும் கொடையாளராகச் சுட்டப்பட்டுள்ளார்.

**அரிந்தமஸ் ஸார்த்தக மேவ நாம பிப்ரத் பபூவ க்ஷிதி பால வர்ய**
**யத்கோபத: ப்ராத்ரவதாம் நிருபாணாம் வநாநி தீவ்ராணி புராண்ய பூவந்(55)**

எதிரிகளை நசுக்கியவன் என்று பொருள்படும் பெயரைத் தாங்கிய அரிந்தமன் அரசர்களில் சிறந்தவனாக இருந்தான். அவனுடைய சீற்றத்தால் ஓடிய அரசர்களின் காடுகள் நகரங்களாக மாறின.

பராந்தகனுடைய மூன்றாவது மகனான அரிந்தமன் என்பவன் கண்டராதித்யனுக்குப் பிறகு (கண்டராதித்த சோழன் மேற்கெழுந்தருளிய பிறகு என்க) சோழ மன்னன் ஆனான். அரிஞ்யன், அரிகுலகேசரி என்றெல்லாம் இவன் வழங்கப்பட்டுள்ளான். இம்மன்னனுக்கு அஞ்சிய பகை அரசர்கள் காடுகளில் பெருகியதால் காடுகள் நகரங்களாக மாறின எனச் செய்யுள் கூறுகிறது. வல்லம் நகரில் அரிகுல கேசரீஸ்வர் என்ற பெயரில் சிவன்கோயில் இருந்ததைச் சாசனம் ஒன்று குறிப்பிடுகிறது. அரிஞ்யன் பதவியேற்றபோது கண்டராதித்த மகன் உத்தமசோழன் சிறுவனாக இருந்துள்ளான்.

**நரபதிர பூதர்க்காத் தேஜ: ப்ரதாபி கபீரதா மபி**
**ஜலநிதேஸ் ஸத்வாதாராத் வரேரதி சூரதாம்**
**வபுரநுபமம் காமாத்விஷ்ணோச்ரியம் சசிநோ த்யுதிந்**
**ந(ா)யந சுபகாமாதாயாஸ்மாத் பராந்தக இத்யஸௌ (56)**

அவனிடமிருந்து பராந்தகன் தோன்றினான். அவன் கதிரவனிட மிருந்து பெரும் வலிமையையும் சமுத்திரத்திடமிருந்து

ஆழத்தையும் அரியிடமிருந்து பெரும் வீரத்தையும் காமதேவனிடமிருந்து இணையில்லாத வடிவழகையும் திருமாலிடமிருந்து செல்வத்தையும் சந்திரனிடமிருந்து கண்ணுக்கினிய ஒளியையும் பெற்றான்.

அரிஞ்யனுடைய மகன் பராந்தகனை இரண்டாம் பராந்தகன் என்று வரலாற்றாசிரியர் குறிப்பிடுவர். வலிமை, வீரம், புலமை, எழில், செல்வம் ஆகிய பலஷம் இப்பராந்தகனிடம் இருந்தன. இவை யார் யாரிடமிருந்து பெறப்பட்டன என்பதைச் சுலோகம் நயமாகக் கூறுகிறது. ஜல என்பதைச் சமுத்திரமாகக் கொள்ளவேண்டும். அரியிடமிருந்து என்பதற்கு இந்திரனிட மிருந்து என்றும் கொள்ளலாம். ஏனெனில் விஷ்ணுவிடமிருந்து செல்வத்தைப் பெறுவது இச்சுலோகத்திலேயே இடம்பெறுகிறது. அரிஞ்யன் தன் அண்ணன் கண்டராதித்தனுடைய மகன் உத்தமசோழனுக்கு முடி சூட்டாமல் தன்மகன் சுந்தர சோழனுக்குச் சூட்டினான்.

**கலேர்பலாத் ப்ரஸ்கலிதம் ஸ்வசாஸ்த்ரம் புநர்வ்யவஸ்தாபயிதும் ப்ருதிவ்யாம் ப்ராப்தம் மநும் யம்மநுதே ஜநௌகः ப்ரவ்ருத்த சாரித்ர ரதிம் நிருபேந்த்ரம்** **(57)**

கலியின் வலிமையால் தன்னுடைய (மனுநீதி) சாஸ்திரம் நழுவியதை அறிந்து அதனை மீண்டும் நிலைநிறுத்த அந்த மனுவே பராந்தகனாக அவதரித்ததாக மக்கள் நம்பினர். நன்னடத்தையில் காதல் கொண்டவனாக இந்திரன் போன்று இவன் விளங்கினான்.

சோழ மன்னர்களுள் ஒருவரான மனுநீதிச் சோழனை நாமறிவோம். நாட்டில் ஒழுங்கும் அமைதியும் நிலவ மனு, யாக்ஞவல்கியர் போன்ற முனிவர்கள் அறக்கருத்துகளை (ஸ்மிருதி) எழுதி வைத்தனர். மனுநீதி சாஸ்திரம் புகழ்பெற்ற நூலாகும். கலியின் கொடுமையால் மனுநீதி நெறிமாறி நாட்டில் ஒழுங்கு கெட்டு, குழப்பம் மிகவே, சாஸ்திரம் சொன்ன மனுவே மீண்டும் நீதி நிலைநாட்ட பராந்தகனாக (இரண்டாம் பராந்தகன் என்க) மண்ணில் தோன்றினான். மனுநெறி ஒரு குலத்துக்கு ஒரு நீதியை வரையறுப்பதால் இன்றைய அறிஞர்கள் பலர் மனுநெறி தேவையில்லை என்பர். காலத்திற்கேற்பவே சாத்திரம் அமைய வேண்டும்.

**தஸ்மிந் அவதி பூசக்ரச் சக்ரவர்த்திநி ஸுந்தரே**
**ஹாராதிஷு பதேஷ்வேவ ஹாசப்த ச்ரூயதே ஜநை** **(58)**

பூமி வளையத்தின் சக்கரவர்த்தியான அந்தச் சுந்தரன் நாடாண்ட போது ஹாரம் முதலான சொற்களிலேயே ஹா என்னும் சத்தம் மக்களால் கேட்கப்பட்டது.

பூசக்ர என்ற சொல் மூலம் பூமி உருண்டை என்பதைக் கவிஞர் மறைமுகமாக உணர்த்துகிறார். சக்கரவர்த்தியாகிய சோழமன்னன் சுந்தர சோழன் ஆட்சியில் ஹாரம் முதலான சொற்களில் ஹார என்னும் சத்தம் கேட்க்கப்பட்டது என்பதால் மக்கள் துக்கத்தினால் 'ஹா' என ஒலிக்கவில்லை என்று பொருளாகும். ஹார அரனுடைய நாமமாகும்.

**குவல[ய] மமலோ பலப்ரகாசாத் கநகமயாத் வலயாதபி ப்ரகாமம்**
**புஜ புஜக யுகஸ்ய பூஷணம்யஸ் ஸமகலயத் கலிகால காலகல்ப: (59)**

> கலிகாலத்திற்குக் காலனைப் போன்ற சுந்தரசோழன் தூய கற்களின் ஒளியோடு கூடியதும் தங்கமயமானதும் ஆன தோள்வளைகளைக் காட்டிலும் தன் இருதோள்களாகிய பாம்புகளுக்கு ஆபரணமாக இந்தப் பூமியையே கருதினான்.

குவலயம் – பூமி. தோளில் அணிந்துகொள்ளும் அணிகளைக் காட்டிலும் பூமியைக் காப்பதே கடமையாகச் சுந்தரசோழன் கருதினான். புஜம் – தோள். புயம் என்றும் அழைக்கப்படும். பூஷணம் – ஆபரணம். கரிகாலச் சோழனைக் குறிப்பிடும்போது கலிகால என்று கவிஞர் குறிப்பிட்டுள்ளார். கலி என்பதைச் சனியுடன் தொடர்புபடுத்துவதற்கு மாறாகக் கலி அரசராகிய களப்பிரருடன் ஈண்டுத் தொடர்புபடுத்தக் கூடாது. கலியாகிய சனியீஸ்பரன் சொல்லொண்ணாத துயரங்களைத் தருபவன். அவனுக்கே காலனாக இம்மன்னன் இருந்தான் என்று கவிஞர் குறிப்பிடுகிறார். தோளிலணியும் தோளணிகளைச் சிற்பங்களில் காணலாம்.

**தஸ்ய ஹேமபிர் உத்தாமதாந கோலாஹல ச்யுதை:**
**துரங்கம குரக்ஷுணை(ண்ணை): பாம்ஸுலா த்வார பூமய (60)**

> அவனுடைய வாயில் பகுதியில் தானம் பெற வந்தவர் மிகுதியாகத் தானம் பெற்றதால் அவற்றிலிருந்து நழுவி விடப்பட்ட தங்கம் அங்கே சிதறிக் கிடந்தது. அது குதிரைகளின் குளம்புகளால் தூளாக்கப்பட்டு வாயிற் பகுதியைப் புழுதி உடையதாக்கிற்று.

மன்னனின் வள்ளல் தன்மையை இச்சுலோகம் கற்பனை நயத்துடன் குறிப்பிடுகிறது. பட்டினப்பாலை என்ற நூலில் நகரின் செல்வ வளத்தைக் குறிப்பிட, மகளிர் தங்களுடைய காதணிகளை வீசி எறிந்து தானியம் கொத்தவரும் கோழிகளை விரட்டுவர் என்று கவிஞர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிடுவார்.

**அஜநி புஜயுகேந ப்ராஸ தீர்கேண தீப்த**
**ச்ரிய மகில சரீராச்லேஷி(ணி) மாததாந:**

**அதிகரம (த) ரேகாரூபிணௌ சங்கசக்ரௌ**
**தததருண்மொழி வர்ம்மா தஸ்ய ஸூனுர்ம் முராரி (61)**

சுந்தர சோழனுக்கு அருண்மொழிவர்மன் மகனாகப் பிறந்தான். நீண்ட வேல் போன்ற கூர்மையும் வலிமையுமிக்க இரு புஜங்களோடு திரு ஒளிரும் உடம்பும் கொண்டு தனது கைகளில் ரேகை வடிவில் சங்கு, சக்கரங்களைக் கொண்டு மற்றொரு முராரி பிறந்ததுபோலத் தோன்றினான்.

அருள்மொழி என்பது இராஜராஜனின் இயற்பெயர்; 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே' என்ற ஆழ்வாரின் கருத்து நோக்குக. சங்கு, சக்ர ரேகை இருப்பது சிறப்பெனச் சோதிட நூலும் கூறும்.

**உபய பக்ஷ விசுத்த மஹௌஜஸி ப்ரதித மண்டல தாரிணி ஸர்வ்வதா**
**தநு ப்ருதாம் நயநாநி சிராய தத்வ (த்வ)புரபூர்வ்வ ஹிமத்யுதி ரேமிரே(62)**

இருமரபுகளிலும் தூயவனும் (கிருஷ்ண, சுக்ல என இரு பக்ஷங்களிலும் ஒளியுடையவன் எனச் சந்திரனுக்குச் சிலேடை) புகழ்பெற்ற மண்டலத்தை எப்போதும் தரித்தவனுமான (நிலவு ஒளி பெற்ற மண்டிலத்தைக் கொண்டது) அந்த அபூர்வச் சந்திரனை யொத்த அவனுடைய திருமேனியைக் கண்டு உயிர்களின் கண்கள் இலயித்தன (சந்திரன் ஒரு பக்ஷத்தில் மட்டுமே பிரகாசிப்பவன் என்பதால் அபூர்வ சந்திரன் என்க.)

உபயபக்ஷ என்பதைத் தந்தை வழி, தாய்வழி என இருமரபு எனவும் சுக்ல கிருஷ்ண பக்ஷம் எனவும் கொண்டு இராசராசனுக்கும் சந்திரனுக்கும் சிலேடை காண்க. சந்திரன் சுக்லபக்ஷத்தில் பிரகாசித்துக் கிருஷ்ணபக்ஷத்தில் தேய்வதால் ஒளியும் இருளும் இருக்கும். இதுபோலின்றி எப்போதும் புகழுடைய மேனி கொண்டிருப்பதால் மன்னனை முழு நிலவு என்று சுலோகம் கூறுகிறது.

**பர்த்த்ரு பூபரம ஸௌ விநேஷ்யதி ப்ராயசோ ந இதி நாக யோஷித:**
**குர்வ்வதே ஸ்ம பரிநர்த்தநந் ததா ஜந்ம லப்தவதி சக்ரவர்த்திநீ(நி) (63)**

அந்தச் சக்கரவர்த்தி பிறப்பெடுத்தபோது தங்கள் கணவன் மார்களின் பூமி பாரத்தைப் பெரிதும் அவன் குறைத்து விடுவான் என்று நாகலோகப் பெண்கள் நடனம் ஆடினர்.

பாதால லோகம் ஒன்று இருப்பதாகவும் அங்கே நாகர்களும் நாகப் பெண்களும் இருப்பதாகவும் கூறுவது ஐதீகம். நாகர் தலைவன் ஆதிசேடன் என்க.

**ரக்ஷிதும் க்ஷிதிபதிஸ் ஸுரலோகந் தைத்ய தாநவ பலைர் உபருத்தம் ப்ராத்திதஸ் ஸுரகணை ரதிசூர: ப்ராப்தவாந் ஸபதி ஸுந்தரசோள (64)**

தேவர்களால் வேண்டப்பட்டவனாயத் தைத்ய மற்றும் தானவர்களின் படையால் தாக்கப்பட்ட அமரருலகைக் காப்பதற்காகச் சுந்தர சோழன் தேவலோகம் அடைந்தான்.

தைத்ய தானவபலைர் என்பதை அரக்கர், அரக்கியர் என்று கூறலாம். தேவர்களைக் காப்பதே சோழர்களின் வேலையாக இருந்துள்ளது. காஞ்சிப் பொன்மாளிகையில் துஞ்சியவனாகச் சுந்தரசோழன் சுறப்படுகிறான்.

**தேவஸ்தர (ஸ்த்ரீ) பிர். அலோபிதோ பவதி மே யாவத் பதிஸ் ஸுந்தரஸ் தாவத் கந்தும்(த கரந்தும்) அஹம்: ப்ரவ்ருத்தமதிர் இத்யாக்யாத வத்யாதராத் சார்த்வம் தேந கதா. . (திண(ந)மிவ) த்யக்த்வா; ஸ்வயகீ யஞ்ஜநம் தேவீ தஸ்ய பதிவ்ரதா குண கணைஸ்ஸாக்ஷாத் அருந்ததிஅ செள (65)**

தேவர்குல மகளிரால் என் கணவன் எதுவரை மயக்கப்படாமல் இருப்பாரோ அதற்குள் நானும் செல்ல விரும்புகிறேன் என்று விருப்பத்துடன் கூறிய அவனுடைய மனைவியானவள் பகலை இரவு தொடர்வதைப்போலத் தன்மக்களை விட்டுக் கணவனை நாடிச் சென்றாள். அந்தப் பதிவிரதைத் தன் நற்குணங்களின் குவியலால் அருந்ததியே நேரில் தோன்றியது போல விளங்கினாள்.

கணவன் இறந்தவுடன் மனைவி இறந்து விடுவாள். பாண்டியன் நெடுஞ்செழியன் இறந்தவுடன் கோப்பெருந்தேவி இறந்துவிட்டாள் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. தன்னுயிர் கொண்டு அவனுயிர் தேடுநள் போல அவள் மாண்டதாகச் சிலம்பு கூறுகிறது.

இச்சுலோகத்தில் சுந்தரசோழன் இறந்து மேல் உலகம் சென்று விட்டான். அவன் அழகானவன் என்பதால் அவனைத் தேவமாதர் நெருங்கிவிடுவர் என்பதால் தானும் மேல் உலகம் செல்வதாகக் கூறுகிறாள் சுந்தர சோழனின் மனைவி. கற்பின் அடையாளமாக அருந்ததியைக் கூறுவர். சோழமாதேவி அருந்ததிபோல் இருந்தாள் என்று இச்சுலோகம் கூறுகிறது. நூற்றுக் கணக்கான சதிக்கற்கள் அல்லது மாசதிக் கற்கள்

தென்னிந்தியாவில் காண்கிறோம். திருக்கோயிலூரில் உள்ள கீழையூர் பாடல் கல்வெட்டு, குழந்தையாக இருந்த இராஜராஜனையும் விட்டு விட்டு வானவன் மாதேவி மேல் உலகம் சென்றதாகக் கூறுவதை இச்சுலோகத்துடன் ஒப்பிடலாம் 'கணவனை. இழந்தோர்க்குக் காட்டுவது இல்' என்பது அக்காலத் தமிழ்ப் பெண்டிர் நிலையாகும்.

**ஸ்ரீவாநவந் மஹாதேவி தேநா சௌ த்ரு (த்ரி) திவம் கதா**
**அப்ஸரோ க்ரஹபீத் யேவ தத்ராப் யாஸந்ந வர்த்திநீ (66)**

ஸ்ரீவானவன் மஹாதேவியாகிய சுந்தரசோழன் தேவி, அரம்பையரிடமிருந்து பயந்தவள் போல அவனோடு தேவலோகம் சென்று அங்கும் அவனுடன் உறைபவள் ஆனாள்.

தேவ மாதரிடம் வானவன் மாதேவி பயம் கொள்ளக் காரணம் தன் கணவனைத் தான் இல்லாததால், உரிமை கொள்வரோ என்பதால் என்க. எனவே இறந்துபட்டாள் என்று பொருளாகும்.

**ததநந்தரம் ஏததாத்மஜ; க்ஷிதிம் ஆதித்ய ஸமாஹ் வயோந் வசாத் நிஜ காந்திவி நிர்ஜ்ஜிதாந்மபூ (த்மபூஸ்) ஸமரே பாண்ட்ய நிருபஞ்ஜ காந ஸ: (67)**

அதன்பிறகு அவனுடைய மகனான ஆதித்யன் என்னும் பெயருள்ளவன் ஆண்டான். அவன் தன் ஒளியால்தானே தோன்றிய மன்மதனை வென்றவன். போரில் பாண்டிய இளவரசனைக் கொன்றவன்.

சுந்தர சோழன் ஆட்சியிலிருக்கும்போதே ஆதித்த கரிகாலன் சதிகாரர்களால் கொல்லப்பட்டதால் சுந்தர சோழன் மனமொடிந்து காஞ்சியில் பொன்மாளிகையில் இறந்தான் என்ற கருத்துடன் இச்சுலோகம் மாறுபட்ட கருத்தைக் கூறுகிறது.

**பாண்ட்ய ராஜ சிரஸ்துங்க ஜயஸ்தம்பம் ஸ்வகே புரே**
**நிதாய கதாவாந் அஸ்தம் ஆதித்யஸ் ஸ்வ(ர்த்தி) த்ருக்ஷயா (68)**

பாண்டிய அரசனைக் கொன்று அவன் தலையைத் தன் நகரில் உள்ள கம்பத்தில் தொங்கவிட்ட ஆதித்த கரிகாலன் வானுலகைக் காணும் ஆசையோடு அஸ்தமனமானான்.

வீரபாண்டியன் தலைகொண்ட ஆதித்தன் என்று கல்வெட்டுகள் இவனைச் சுட்டுகின்றன. ஆதித்த கரிகாலனுடைய சமகாலத்தில் கோபார்த்திவர்மன் என்பவன் தொண்டை மண்டலத்தில் சுந்தர சோழன் கீழ் நாடாண்டுள்ளான் என்பது வரலாறாகும். காட்டுமன்னார்குடி

கல்வெட்டு உயர் பதவியில் இருந்த பிராமணர் சிலர் சதிசெய்து ஆதித்தனைக் கொன்றதைக் கூறுகிறது.

**ப்ரபல கலி பலாந்த் (தத்வா)ந்த வித்த வம்ஸ ஹேதோஸ் ஸ்வயம் அருண்மொழி வர்ம்மா ப்ரார்த்யமாந ப்ரஜாபி : அசகமத ந ராஜ்யம் ஸ்வே பித்ருவ்யே ஸ்வதேச ப்ரணயிநி மநஸாபி க்ஷத்ர தர்மார்த்த வேதீ (69)**

வலிமை வாய்ந்த கலியின் பலத்தால் உண்டான கும்மிருட்டைக் கண்டிக்கும் காரணத்தால் மக்கள் மிகவும் வேண்டிக் கொண்டதற்கிணங்க அருள்மொழிவர்மன் நாட்டை ஆளும் பொறுப்பை உடனே ஏற்றுக் கொள்ளவில்லை. அரச தருமத்தின் பொருளை அறிந்த அவன் நாட்டின் ஆட்சியில் விருப்பம் கொண்டவரான தன் சிறிய தந்தையாரிடம் சோழர் ஆட்சியை ஒப்படைத்தான்.

கலியின் கொடுமையால் நாட்டைச் சூழ்ந்த இருள் என்பது இளவரசன் ஆதித்த கரிகாலன் கொலை உண்டதும் அதையடுத்து சுந்தரசோழன் மாண்டதும் என்று குறிப்பிடலாம். ஆதித்த கரிகாலனும், சுந்தர சோழனும், சுந்தர சோழன் மனைவியும் மாண்டபின் நாட்டில் குழப்பம் இருந்தது. இராஜராஜன் பாலருந்தும் சிறுவனாக இருந்தான் என்பது திருக்கோயிலூர் சாசனம் கூறும் வரலாறு. தன் சிறிய தந்தை உத்தமசோழன் உயிருடன் இருக்கும்வரை சிந்தையாலும் அரச பதவியை விரும்ப மாட்டேன் என்று இராஜராஜன் கூறியதாகப் பெரியலெய்டன் செப்பேடு கூறுகிறது. மேற்கெழுந்தருளிய தேவர் கண்டராதித்தன் மகன் உத்தம சோழன் சிறுவனாக இருந்ததால் அரிஞ்யன் பதவி ஏற்றான் போலும். அரிஞ்யன் இறந்த பின்னர் உத்தமசோழன் பதவிக்கு வந்திருக்கவேண்டும். எனினும் அரிஞ்யனின் மகன் சுந்தரசோழன் பட்டமேற்றுள்ளான். சுந்தரசோழன் தனக்குப் பிறகு தன் மகன் ஆதித்த கரிகாலன் நாட்டையாள விழைந்து இளவரசனாக்கினான். தந்தையின் கீழ் ஆதித்தன் தொண்டை மண்டலத்தை நிர்வாகம் செய்ததுடன் பாண்டியருடன் போரிட்டு வீரபாண்டியனையும் கொன்றுள்ளான். எனினும் சதிகாரணமாக ஆதித்தன் கொலையுண்டான். மகன் மாண்டதால் சுந்தர சோழனும் காஞ்சி அரண்மனையில் துயரத்தால் மாண்டான். அப்போது குழந்தையாக இராசராசன் இருந்ததால் உத்தம சோழன் சோழமன்னராகும் சூழ்நிலை ஏற்பட்டது. அப்போது உத்தம சோழன் நாற்பது வயதிற்கும் மேற்பட்டவராக இருந்திருக்க வேண்டும். இராஜராஜன் சிறுவனாக இருந்த நிலையில் உத்தமசோழனின் தாயும் இராஜராஜனின் பாட்டியுமான செம்பியன் மாதேவி இராஜராஜனின் தமக்கை குந்தவை போன்று

அன்புடன் வளர்த்ததாலும் உத்தம சோழன் வயது முதிர்ந்தவர் என்பதாலும் நாட்டை ஆள உத்தம சோழன் விரும்பியதாலும், மக்கள் இராஜராஜன் அரசனாக வேண்டும் என்று கூறியபோதும் தவிர்த்துவிட்டான். சிறிய தந்தை உயிருடன் இருக்கும்வரை சிந்தையாலும் அரச பதவியை விழையேன் என்று கூறி உள்ளான். உத்தமசோழனும் தன் மகன் கண்டராதித்தனுக்கு இளவரசர் பட்டம் கட்டாமல் இராஜராஜனுக்கே வழிவிட்டுள்ளான்.

**த்ரிஜகதவந தக்ஷமம் புஜாக்ஷம்**
**ஸ்வயமவ தீர்ண்ணம்முந் நிருப்ய சி[வி] ஹ்நை**
**அருண்மொழி மஹிபிச்ய (மபி பிசா) யோ (யௌ) வாராஜ்யே**
**தரணி துரத்ம (ம்ம) துராந்த கோ பபார (70)**

மதுராந்தகனாகிய உத்தமசோழன் திரிபுவனத்தையும் காப்பதில் நிபுணனான தாமரைக் கண்ணனே அருண்மொழி வர்ம்மனாக அவதரித்தான் என்பதை அவனது உடலில் உள்ள சின்னங்களால் கண்டறிந்து அவனை இளவரசனாக அபிஷேகம் செய்து பூபாரத்தைத் தாங்கினான்.

உத்தமசோழன் மக்களின் அபிலாஷையை நிறைவேற்றும் வகையில் நடந்து கொண்டான். இராஜராஜனுடைய அங்க லட்சணத்தையும் கண்டறிந்து நாட்டைச் செம்மையாக ஆட்சி புரிவான் என்று எண்ணி இராஜராஜனுக்கு இளவரசுப்பட்டம் கட்டினான். உத்தமசோழனுக்கு அப்போது கண்டராதித்தன் என்ற அருமை மகன் இருந்தும் இராஜராஜன் பிற்காலத்தில் முறைப்படி அரசன் ஆவதற்கு வழி வகை செய்தான். சிறிய தந்தை நாடாள இராஜராஜன் விரும்பியதும் மகனைத் தவிர்த்துப் பங்காளியின் மகனுக்கு இளவரசு பட்டம் கட்டியதும் விவேகமான செயல்கள் எனலாம்.

**மநச்சர்வ்வே குர்வ்வந் தநமபி தத ப்யர்ச்சந விதோ(தௌ)**
**தா வாஸாரம்பே பரிஜந்ம சேஷம் ஸ நிருபதி**
**ஜகத் ஸர்வ்வந் தஸ்யோத்ஸவ விதிஷு கோபம் ரிபுவதே**
**ஸ்ரீயம் ஸத்விப்ரேஷு க்ஷிதிமபி புஜே பூயஸி ததே (71)**

அந்த அரசன் மனத்தைச் சிவபெருமானிடத்தில் வைத்தான். தன் சுற்றம் முழுவதும் அவனை அர்ச்சிக்கவும் அவன் கோயில் கட்டும் செயலிலும் மனத்தை ஈடுபட வைத்தான். உலக மாந்தர்களை எல்லாம் (கோயில்) விழாக்களிலும், தன் கோபத்தைப் பகைவர்களைக் கொல்வதிலும், செல்வத்தைச் சிறந்த பிராமணர்களிடத்தும் பூமியைத் தன் தோளிலும் வைத்தான்.

உத்தமசோழனின் செயல்களைத் தன்மை நவிற்சி அணியின் மூலம் சுலோகம் குறிப்பிடுகிறது. மன்னன் பெயர் இச்சுலோகத்தில் சுட்டப்படாததால் இராஜராஜனுக்கும் இச்சுலோகம் பொருந்தும்படி உள்ளது.

திருவிசைப்பா பாடிய கண்டராதித்தன் மகன் உத்தமசோழன் சிவனைமனதில் கொண்டான். இவன் தாய் செம்பியன் மாதேவி கோயில் திருப்பணி புரிந்ததுடன் பொன்னும்பொருளும் வழங்கினாள். மனைவியரும் கொடைகள் அறிந்துள்ளனர். மகன் மதுராந்தகனும் கோயில் தணிக்கை அதிகாரி.

**ப்ரகட படஹ கண்டா காஹல ச்ரேணி பேரீ**
**முரவ துமுல சங்க த்வாந கத்யத் தி(த்தி) கந்த :**
**கலிமலமத ஹர்த்தும் ஸ்வாங்க தோர்யை த்வராயாஸ்**
**ஸ்வயம் அருண்மொழி வர்ம்மா ராஜ்ய பாரே அப்யஷேசி (72)**

ஒலிமிகு சிறுபறை, மணி, எக்காளம் போன்றவற்றின் வரிசையாலும் போர்ப்பறை, முரசு, பேரொளி, சங்கம் முதலியவை திசைகளில் முழங்க (அபிஷேக) நீரால் பூமியில் கலியால் தோன்றிய அழுக்கை நீக்குபவன் போல அருண்மொழி வர்ம்மன் தானே மன்னனாக முடிசூடினான்.

உத்தமசோழன் இறந்தபிறகு இராஜராஜன் முடிசூடிக் கொண்டான். பல்வேறு இசைக் கருவிகள் முழங்க முடிசூடிக் கொண்டான். பிரகட என்ற சொல்லிலிருந்து பிரகடனம் என்ற சொல் உருவாயிற்று. பேரி, பேரிகைக்கும் முரவ, முருசுக்கும் தொடர்பு உள்ளது.

**ஸ்ரீய மஸ்ய புஜாந்தர ஸ்திதாம் ஸ்வஸுதாந் த்ரஷ்டு மிவாப்யுபேஇ(யி)வான்**
**தவளாதப வாரணாத்மநா ககநே மண்டலித: பயோநிதி (73)**

அவனுடைய தோளிடையில் தாங்கப்பட்ட தன் மகளான இலக்குமியைக் காண வந்தது போன்று பாற்கடல் வானத்தில் வெண்கொற்றக் குடை வடிவமாக மண்டலமிட்டு நின்றது.

பாற்கடல் வானத்தில் இருப்பதாகக் கூறுவது கற்பனையாகும். சந்திரன் மகளாக இலக்குமியைக் கூறுவது அபூத உவமையாகும்.

**நூநம் யசாஸி (யசாம்ஸி) ஸ்புரதிந்து காந்தி காந்தீநி**
**வாலவ்ய ஜநாநி க்ருத்வா**
**திகங்கநா திக்விஜயே க்ருஹீதாஸ் ஸே(ர) வாம்**
**அகுர்வ்வந் ஜையி நோஸ்ய ராஜ்ஞ: (74)**

உண்மையில் திசைகளாகிய பெண்கள் அவனுடைய புகழையே சந்திரனைப் போன்று ஒளிரும் அழகுடைய சிறு சாமரங்களைக் கொண்டு வெற்றி கொள்ளும் அந்த அரசனுக்குத் திக்விஜய காலத்தில் தொண்டு புரிந்தனர்.

மாற்றரசர்களை வெல்வதற்குச் செல்லும் படையெடுப்புகளுக்குத் திக்விஜயம் என்று பெயராகும். மீனாட்சி அம்மன் திக்விஜய முடிவில் சோமசுந்தரரை மணந்த புராணம் பலரும் அறிந்த தாகும்.

**துலி தோபி துலாபாரே துலயா ஹேமஹி(பி)ர் நிருப :**
**ஸோதுலோ பூத விஜ்ஞேயோ மஹிமா மஹதாமத : (75)**

அவன் துலாபாரத்தில் தங்கத்துக்குச் சமானமாக இருந்தாலும் இணையற்றுத் திகழ்ந்தான். பெரியோர்களின் பெருமை அறிவதற்கு அரியது.

கும்பகோணம் அருகில் உள்ள வலஞ்சுழி என்ற ஊரில் இம்மன்னன் துலாபாரம் மேற்கொண்டதை அங்குள்ள கல்வெட்டு சுட்டுகிறது.

**அநுபம விபவ ப்ரபாவ வித்யா புஜ பலவிக்ரம சௌர்ய தைர்யராசி:**
**அஜயத் அவநிபஸ் : த்ரிசங்கு காஷ்டா ப்ரப்ருதி யதா க்ரமம் ஆக்ரமந்**
**திஸஸ் (76)**

இணையற்ற பெருமை, வலிமை, கல்வி, தேதஸ், பலம், பராக்ரமம், வீரம், துணிவு ஆகியவை ஒரு சேர கொண்டிருந்த அவ்வரசன் திரிசங்காகிய தென்திசை துவங்கி முறைப்படி ஆக்ரமித்தான்.

முதலாம் பராந்தகனும் முதலில் பாண்டிய நாட்டின் மீதுதான் படையெடுத்து வென்று மதுரைகொண்ட பரகேசரி ஆனான். பகையரசர்களை வென்றதுடன் அவர்களுடைய நாடுகளையும் தன்னுடைய பேரரசில் இணைத்துக் கொண்டதால் ஆக்ரமன் என்று சுலோகம் கூறுகிறது. விபவ, பிரபாவ, விக்ரம என்ற சொற்கள் தமிழ் ஆண்டுகளின் பெயர்களையும் நினைவூட்டுகின்றன.

**ஸ்வகீய வம்ச ப்ரபவஸ்ய பாண்ட்ய ராஜஸ்ய ரக்ஷாமிவ கர்த்தும்**
**இந்து ச்வேதாத பத்ரம் ஸமபூத ஹஞ்ச ராஜேதி மத்வாஸ்ய திசஞ்ஜிகி**
**ஷோ: (77)**

தன்னையும் ராஜா என்று நினைத்துத் தன்னுடைய திசையை வெல்ல விரும்பும் அந்த அரசனுக்குத் தன்னுடைய வம்சத்தில் பிறந்த பாண்டிய மன்னனைக் காப்பது போன்று சந்திரன் வெண்கொற்றக் குடையாக ஆனான்.

பாண்டியரின் குலம் சந்திர குலம். இராஜராஜ சோழனுடைய வெண்கொற்றக்குடை சந்திரன் போல் பிரகாசிப்பதைக் கொண்டு மன்னனைக் காப்பாற்ற சந்திரன் குடையாக மாறினான். இராஜா என்பது அரசனையும் சந்திரனையும் சுட்டும். இச்சொல்லை இரண்டிலும் பயன்படுத்தும் நயத்தை இச்சொல்லில் காண்கிறோம்.

**அமர புஜங்க க்ரஹணாத் ராஜ புஜங்காஸ் ததோ திபி(பீ)ததிய: நிப்ருத குடில(ா)போகா: (க)க்வாபி நிலேதும் ஸமப்ய லஷன் (78)**

அமரபுஜங்கன் என்னும் மன்னனைப் பிடித்த பிறகு மிகவும் பயந்த மனதுடைய அரசர்கள் மறைந்து கொண்டனர். மறைந்த போகங்களை உடைய மற்ற ராஜநாகங்கள் மறைந்து கொள்வதற்கு எண்ணின.

அமரபுஜங்கம் என்ற சொல் அரசனை மட்டுமின்றிப் பாம்பையும் சுட்டும். போகம் என்ற சொல் போகங்களையும் பாம்புத் தோலையையும் குறிப்பிடும். அமரபுஜங்கனைத் தொடர்ந்து பிற அரசர்கள் சோழனுக்குப் பயந்து ஒதுங்கினர். அமரபுஜங்கம் என்னும் நாகம் பிடித்தபின் பிற ராஜ நாகங்கள் மறைந்து கொள்ள நினைத்தன. இராஜநாகம் கொடிய விஷமுடையது.

இராஜராஜனுடைய ஆட்சியின்போது பல போர்கள் நிகழ்ந்துள்ளன. அமரபுயங்கன் எனக் கல்வெட்டுகளில் அமர புஜங்கம் அழைக்கப்பட்டுள்ளது.

**ஜலநிதி பரிகம் விளிந்த முச்சை ஸ்புரதுருவப்ரம் அபேத்யம் அந்யபௌ(யோ)தை ரவிகுல திலகஸ்ய தண்டநாதோ விஜயரமா குல மந்திரஞ் ஜிகாய (79)**

சூரியகுல திலகமாகிய இராஜராஜனின் தண்டநாயகன் வெற்றித் திருமகளின் குலத்திற்கு உறைவிடமானவன். உயர்ந்த விளிந்தை என்ற நகரை அவன் வென்றான். கடலையே அகழியாகக் கொண்டு எதிரிப் படையால் தகர்க்க முடியாத அரணுடையதாக அது விளங்கியது.

இக்கவியில் இராசராசனின் விழிஞ்சப்போர் சுட்டப்பட்டுள்ளது. கேரள நாட்டில் (பழைய சேர நாட்டில் என்க) உள்ள கடற்கரை ஊர் விழிஞமாகும். தண்டநாயகத்தின் பெயர் இச்சுலோகத்தில் கூறப்படவில்லை. விளிந்தை அல்லது விளிந்தம் என்பது விழிஞமாகும்.

**பத்த்வா ஜே(ஸே)துஞ் ஜலநிதிஜலே ராகவேந்த்ர : கபீந்த்ரை :**
**லங்காநாதம் கதமபி சரைஸ் தீக்ஷண ச்ருங்கைர்ஜ் ஜகாந்**
**நௌபிஸ் தீர்த்வா ஜலநிதிம் அசௌ யஸ்ய தண்ட : ப்ரசண்டோ**
**லங்காநாதம் நிரதஹ(த்) தஸ்தேந ராமோபி பூத : (80)**

இரகு குலத்தின் இந்திரனான ஸ்ரீராமன், அனுமன்களில் இந்திரன் போன்ற சுக்ரீவன், ஆஞ்சநேயன் முதலானோரைக் கொண்டு கடலில் சேதுவைக் கட்டி (பாலம் கட்டி) இலங்கை அரசனைக் கூரிய முனையையுடைய அம்புகளால் கொன்றான். ஆனால் இவனுடைய படையோ கப்பல் மூலம் கடலைக் கடந்து இலங்கையை வென்றது. பாலம் அமைத்துச் சென்ற இராமன் செயலைக் காட்டிலும் இராஜராஜன் கப்பல் மூலம் சென்றது எளிதானது.

சங்ககாலத்தில் கரிகால் சோழனும், பல்லவர்காலத்தில் முதலாம் நரசிம்மவர்மனும் சோழர் காலத்தில் முதலாம் பராந்தகனும் இராஜராஜனுக்கு முன்பே கப்பல்மூலம் இலங்கை சென்று போரிட்டு வென்றுள்ளனர் என்பது வரலாறாகும். சோழரின் கடற்படை வலிமை வாய்ந்ததாகும்.

**ஸத்யாச்ரயோ யத்ப(வ)பலஸிந்து ரோதாத் கஷ்டம் பரித்யஜ்ய பலாயிதோபி**
**கஷ்டாச்ரய ச்ரி த்ரமிதஞ்ச(ந்ந) சித்ரந் தைல ப்ரபாவ த்ரவணம் யதஸ்ய (81)**

அவனுடைய கடல் போன்ற பெரும்படை மோதுவதால் சத்யாசிரயன் என்னும் மன்னன் துயரைவிட்டு ஓடியும் துயருற்றவன் ஆனான் என்பது வியப்பாகும். ஆனால் அவன் தைலத்தின் பழக்கத்தால் ஓடினான் என்பதில் ஆச்சரியம் இல்லை.

இராஜராஜனுடைய போர் வெற்றிகளுள் சத்யாச்சிரயனை வென்றது முக்கியமாகும். சுலோகத்தில் வரும் ப்ரபாவ என்பதைப் பிரபவ என்றும் படிக்கலாம். இராஜராஜனின் படைவலிமைக்கு முன் தான் ஒன்றும் செய்ய முடியாது என்று ஓடிய இராஜாச்ரியன் தைல மரபினன் என்பதால் வழுக்கி விழுந்தான். தைலம் – எண்ணெய் மற்றும் தைல அரசன் என இருபொருள். வழுக்கி விழும் தன்மையால் எண்ணெய் தைலமென நயமாகச் சுட்டப்படுகிறது.

இரண்டாம் தைலவ மன்னனின் மகனை வென்றதின் அடிப்படையில் ஒரு வளநாட்டிற்குச் சத்யாச்ரிய வளநாடு என்று பெயர் சூட்டப்பட்டது. **சத்தியாசிரயனை அழித்து எழுந்தருளி வந்து ஸ்ரீபாத புஷ்பமாக அட்டித் திருவடி தொழுதான்** என்று தஞ்சாவூர் சாசனம் கூறுகிறது.

**தண்டேந பீமேந யுதி ப்ரவீணோ யத்ராஜராஜோ நிஹதோ மதாக்ய :**
**தத்பீமநாமாநம் அரந்த்ர மந்த்ர (ந்தரம்) ஹந்மீதி தண்டேந ஜகாந**
**தம் ஸ (82)**

> தன் பெயருடையவனும் யுத்தத்தில் தேர்ந்தவனுமான இராஜராஜன், பீமனால் தண்டாயுதத்தின் மூலம் கொல்லப்பட்டான். அதற்குப் பழிவாங்க அந்த அரசனான பீமன் தவறிழைக்காதவனாயினும் தன் தண்டாயுதத்தால் கொல்வேன் என்று கூறி இராஜராஜ சோழன் கொன்றான்.

மகாபாரதப் போரை இணைத்துச் சிலேடையாகக் கவிஞர் குறிப்பிடுகிறார். துரியோதனின் பெயர்களுள் இராஜராஜனும் ஒன்றாகும். அவனைப் பஞ்சபாண்டவரில் ஒருவனான பீமன் தன் தண்டாயுதத்தால் கொன்றான். இதற்குப் பழிவாங்குவது போன்று சாளுக்கிய மன்னனான பீமனை இராஜராஜ சோழன் தன் தண்டத்தால் (படையால்) கொன்றான் என்பது நயமாகும். சொற்களில் பயின்றுவரும் பெயர்களையொட்டி அலங்காரமாக இச்சுலோகம் கூறப்பட்டுள்ளது. அதாவது சொல்லணி இதில் பயின்று வந்துள்ளது. கீழைச் சாளுக்கிய மன்னன் ஜடா சோட வீமனைக் கொன்று சக்திவர்மனுக்கு ஆதரவு தந்து சக்திவர்மனின் தம்பி விமலாதித்தனை வேங்கி மன்னனாக ஆக்கியதுடன் இவனை மருமகனாகவும் இராசராசன் ஆக்கிக் கொண்டது வரலாறு.

**ஸர்வ்வ க்ஷத்ரவத வ்ரத ப்ரணயிநா ராமேணயந் நிர்ம்மிதம்**
**ராஷ்ட்ரம் (சி)ஷ்டஜநாபிராமம் அதுலந் துர்க்கம் மஹீந் ப்ரார்த்த (த்ரார்ண)**
**வை**

**ஜித்வா தத் ஸகலாவநீந்த்ர மகுடச்ரேணி லஸத்(ச்) சாஸநஸ்**
**ஸோபூத் ஸர்வ்வ தநுப்ரு (ர்ப்ரு) தாம் க்ஷிதி ப்ருதாம் ஆநந்த**
**ஸந்தோபவ (ஹஸூ)த் (83)**

> சத்திரியர்களைக் கொல்வதையே விரதமாகக் கொண்ட பரசுராமனால் நிர்மாணிக்கப்பட்ட நன்மக்களால் மனம் கவர்ந்த ஒப்பற்ற, கேரளநாட்டுக் கோட்டை, மலை, கடல்களோடு, சேரநாட்டை இராஜராஜன் வென்றான்.

மன்னர்களில் இந்திரன் போன்ற அரசர் அனைவரின் மகுடங்களின் வரிசையில் செல்லத்தக்க ஆணையுடையவன் ஆனான். எல்லா வில்லாளிகளுக்கும் மன்னர்களுக்கும் இன்பத்தின் குவியலைத் தருபவனாய் அவன் திகழ்ந்தான்.

இச்சுலோகத்தில் கேரள நாட்டுடன் தொடர்புடைய புராணச் செய்தி இடம்பெற்றுள்ளது. சத்திரிய மரபை ஒழிக்க விரதம் பூண்ட பரசுராமன் உருவாக்கிய கேரள நாடு மலை, கோட்டை, கடல் என இயற்கை அரண்களால் சூழப்பட்டதாயினும் சத்திரியனான இராஜராஜன் கேரளாவை வென்று பிற அரசர்களுக்கு மகிழ்ச்சியைத் தேடித் தந்தான். போரில் வில்லாளிகளின் பங்கு மகத்தானது. கேரள அரசனுடைய கொடி விற்கொடி என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். காந்தளூர்ச் சாலை கலமறுத்து அல்லது சாலை கலமறுத்து என இராஜராஜனுடைய மெய்க்கீர்த்தி கேரள நாட்டு வெற்றியைக் கூறும். சமீபத்தில் செங்கம் வட்டத்தில் கண்டறியப்பட்ட இராஜராஜனுடைய நடுகல் கல்வெட்டு, இராஜராஜன் சாலை வென்றதுடன் மலையாளரை அறுத்து என்று கூறுவதை இச்சுலோகத்துடன் ஒப்பிட்டு மகிழலாம். அப்போது கேரளாவைப் பாஸ்கர ரவிவர்மன் நாடாண்டுள்ளான்.

**ஜித்வா கங்க கலிங்க வங்க மகதாரட்டோட்ட சௌராஷ்ட்ரகாந் சாளுக்யாந் அபராந் அபிக்ஷிதி புஜோ யுத்தே ஸ நை (தை) ரார்ச்சித வித்வத் வர்க்க முகாரவிந்த நிசய ப்ரோந்யோத்நோந்யத்ரவி :**
**(ப்ரத்யோத நோத்யத்ரவி)**
**ப்ருத்வீம் ஸர்வ்வஸமுத்ரவாரிரசநாம் ஸ்ரீராஜராஜோந் வசாத் (84)**

ஸ்ரீராஜராஜ சோழன் கங்கர், கலிங்கர், வங்கர், மகதர், ஆரட்டர், ஒட்டர், சௌராஷ்டிரர், சாளுக்கியர் மற்றுமுள்ள அரசர்களையும் யுத்தத்தில் வென்று அவர்களால் பூஜிக்கப்பட்டவனாய்– அறிஞர்களின் முகத்தாமரைக் குவியலுக்கு எழுகின்ற எழுஞாயிறாய் – நீரால் சூழப்பட்ட கடலை இடையணியாகக் கொண்ட பூவுலகை ஆண்டான்.

தமிழகத்திற்கு வடக்கே உள்ள பல நாடுகளை இராஜராஜன் வென்றான் என்பதை இச்சுலோகத்தால் அறிகிறோம். ஆரட்டர் யார் என்பது விளங்கவில்லை என்று இச்செப்பேட்டைப் பதிப்பித்த கல்வெட்டாய்வாளர் கருதுகிறார். விஜயநகர அரசர்களின் புகழ்ச்சிமாலைகளிலும் (மெய்க் கீர்த்திகள் என்க) இப்பெயர் தவறாகச் சுட்டப்பட்டு ரட்டர் என்றிருப்பதாகக் கூறுகிறார். ராஷ்ட்ரகூடரை ஏன் இச்சொல் சுட்டியிருக்கக் கூடாது? எனவே இராட்டிர கூடரை இது குறிக்கக் கூடும்.

**ஸமஜநி மதுராந்தகஸ் ஸமஸ்த க்ஷிதிபதீ(தி) லக்ஷண லக்ஷிதாகிதாங் (கிலாங்) க :**
**(அ) ப ஹ்ருத ஹர ஹுங்க்ருதிர்ம் மநோபூர் அபர இவாஸ்ய நரேச்வரஸ்ய ஸூநு : (85)**

அவ்வரசனுக்கு மதுராந்தகன் மகனாகப் பிறந்தான். அவன் அரசருக்குரிய சகல இலக்ஷணங்களும் இலங்கும் அங்கங்களை உடையவன். சிவபெருமானின் ஹூம்காரத்தைக் காணாத மற்றொரு காமதேவனைப் போன்றவன்.

முதலாம் இராசேந்திர சோழனின் இயற்பெயர் மதுராந்தகன் என்பதாகும். இராஜராஜனைப் போல ராஜ அம்சம் உடையவனாய் இருந்த இவன் காமனாகிய மன்மதன்போல் அழகனாய் இருப்பினும் சிவபெருமானால் எரிக்கப்படாத புதுமையானவனாக இருந்தான். யோக நிலையில் இருந்த சிவபெருமானின் தவத்தைக் கெடுக்கும் வகையில் காமன் மலர் அம்பு விட்டதால் சிவனால் எரிக்கப்பட்டான் என மன்மதனிடமிந்து ஒருவகையில் வேறுபட்டவனாக மதுராந்தகனை இச்சுலோகம் குறிப்பிடுகிறது.

**யத்ர ரக்ஷதி மஹீமிமாஞ் சிரம்மார்க்க வர்த்திநி ஸதாம் மஹௌஜஸி தத் களத்ர நயநாந் யஹோ ச்ருதேர்ம் மார்க்க லங்கநம் அகுர்வ்வ (த) ஸ்புடம் (86)**

அவன் நீண்ட காலம் நல்லோரின் பெருமை மிகுந்த மார்க்கத்தில் இப்பூமியைக் காக்கும்போது அவனுடைய மனைவியரின் கண்கள் சுருதியைத் தாண்டின. இது ஆச்சர்யமல்லவா?

இச்சுலோகத்தில் இருபொருள் படும் ச்ருதி கூறப்படுகிறது. வேதம் மற்றும் காது இரண்டையும் இச்சொல் சுட்டும். அரசியரின் விழிகள் காதுவரை நீண்டிருந்தன. காதளவோடிய கண்கள் என்பது பெண்களுக்கு அழகாகும். கண்ணகியே இவ்வாறு இருந்திருக்கவேண்டும் என்பர். சொல்லணி விரோதா பாஸமாக இச்சுலோகத்தில் உள்ளது. நல்லோரின் மார்க்கம் சுருதி மார்க்கமாகும். அதாவது வேத நெறியாகும்.

**தீவ்ர ப்ரதாப தபநோ மதுராந்தகஸ்ய**
**வ்யாப்ய ஸ்திதஸ் ஸகலதிக் வலயாந்தராளந்**
**தூர ஸ்திதாந் அபி தஹந் ஸக•ாவநீந்த்ராந்**
**ஆஸந்ந ஸர்வ நிருப தாப ஹரோபி (தி)சித்ரம் (87)**

அவனுடைய பராக்கிரமம் என்னும் சூரியன் திசைகளின் வளையத்தில் அனைத்துப் பகுதிகளையும் வியாபித்துத் தூரத்தில் உள்ள இந்திரன் போன்ற வலிமை மிக்க அரசர்களைத் தகித்தது. ஆனால் அருகில் உள்ள அரசர்களின் வெம்மையைப் போக்கியது ஆச்சரியம்.

முதலாம் இராசேந்திர சோழனுடைய பராக்கிரமம் என்ற நெருப்பு பகை மன்னர்களாக இருந்தவர்களை – உறவு இல்லாதவர்களை எரித்தது. அடைக்கலம் புகுந்து அருகில் இருப்பவர்களுக்கு வெம்மையைத் தரவில்லை. அருகிலிருப்பவரைச் சுடாமல் தொலைவில் இருப்பவரைச் சுடும் என்பது நயமாகும். திருவள்ளுவர், 'தொடிற்சுடின் அல்லது காமநோய் போல விடிற்சுடல் ஆற்றுமோ தீ'? எனப் புதுமையான தீயைக் குறிப்பிடுவார்.

**கட்க வாரிதி ஜலேஸ்தம் உபேதம் ராஜமண்டலம் உதேதி ந தஸ்ய**
**சித்ர மேதத் இதம் அப்யாதி சித்ரகம் ஸ்வஸ்த மேவ யதபூல் லஸதம்சு: (88)**

> அவனுடைய வாளென்னும் கடல் நீரில் அஸ்தமனம் அடைந்த இராஜமண்டலம் மீண்டும் உதிக்கவே இல்லை என்பது ஆச்சர்யம். அதைவிடப் பெரிய ஆச்சர்யம் அது வானில் ஒளிரும் கிரணங்களோடு நின்றது.

இச்சுலோகமும் சிலேடையாகக் கூறப்பட்டுள்ளது. கட்க – வாள். வாரிதி – கடல். திருக்குறளில் 'ஏரின் உழாஅர்' என்ற குறளில் வாரிதி என்பது வாரி என ஆளப்பட்டுள்ளது.

மதுராந்தகனுடைய வாள் என்னும் கடல் நீரில் அஸ்தமனம் அடைந்த இராஜமண்டலம் மீண்டும் உதிக்காததற்குக் காரணம் பூமியில் இறந்துபட்டதாகும். சந்திரமண்டலம் என்று எடுத்துக் கொண்டு பாண்டியர் எழுச்சி பெறவில்லை என்றும் கூறலாம்.

வானில் பிரகாசிக்கக் காரணம் இறந்த பகை அரசர்கள் ஒளிர்வார்கள் என்பதால் ஆகும். அரசர் மட்டுமின்றி வீரர்களும் வானுலகை அடைவார்கள் என்பதை நடுகற்களின் மூலம் அறியலாம். (காண்க: நடுகற்கள் –ச. கிருஷ்ணமூர்த்தி, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம், பதிப்பாண்டு – 2003).

**நிஜபுஜ விஜிதேந புண்ய ஜாதம் தநநிசயேந சிகீர்(சிகாரி) ஷுர்ய்யசஸ்வீ**
**ப்ரபல பல ஸமந்விதோ நரேந்த்ரோதிய மத திக்விஜயே நியதத்த தீர: (89)**

> அரசர்களில் இந்திரன் போன்றவனும் அறிஞனுமான மதுராந்தகன் தன் தோளால் வெல்லப்பட்ட செல்வக் குவியலைக் கொண்டு புண்ணிய காரியங்கள் செய்ய விரும்பினான். எனவே வலிமை கொண்ட படையுடன் திக்விஜயம் மேற்கொள்ள முடிவெடுத்தான்.

போரில் கைப்பற்றப்பட்ட செல்வங்களைப் பெரும்பாலும் புண்ணிய செயல்களைச் செய்யவே மன்னர்கள் பயன்படுத்தி உள்ளனர். திக்விஜயம் செய்த மன்னர்களில் அலெக்ஸாண்டர் ஒருவர் ஆவர். தமிழகத்தைப்

பொறுத்தவரை முதலாம் இராசேந்திரனே மிகுதியாகத் திக்விஜயம் செய்த மன்னன் எனலாம். இந்தச் செப்பேட்டுத் தொகுதியில் இடம்பெறாத பல போர்கள் இராசேந்திரன் மெய்க்கீர்த்திகளில் உள்ளன. வடஇந்தியா சென்று பல மன்னர்களை வென்று கங்கை நீரைச் சோழ நாட்டிற்குக் கொண்டு வந்து வெற்றியின் சின்னமாகச் சோழகங்கம் ஒன்றை இவன் வெட்டினான். வெங்கைய்யா வடஇந்தியப் படையெடுப்பைத் தீர்த்தயாத்திரை என்று கூறுவார்.

**ப்ரதம மத திசம் த்ரிசங்கு சிஹ்நாந் நிரகமத் உத்தம சோளபூமிபால: பி(வி) ஹித நிஜபுராவந: ஸ பாண்ட்ய க்ஷிதிபதி மப்ரதிமோ விஜேதுகாம: (90)**

> ஒப்பற்ற உத்தம சோழனான மதுராந்தகன் தன் நகருக்குக் காவலைச் செய்துவிட்டு திரிசங்குவின் அடையாளமுடைய (தென்) திசையில் பாண்டியனை வெல்லும் ஆசையுடையவனாய்ப் புறப்பட்டான்.

கண்டராதித்தனுடைய மகனுக்கு உத்தமசோழன், மதுராந்தகன் என்ற பெயர்கள் உள்ளன போன்று இராசேந்திரனுக்கும் இருந்தன. இராஜராஜன் போல இவனும் முதலில் பாண்டிய நாட்டின் மீதே படையெடுத்துள்ளான்.

**ரவிகுல திலகஸ்ய தண்டநாத : ப்ரபல பல நிஜகாந பாண்ட்ய ராஜம் மலய கிரிம் அகஸ்த்ய தாம பீத ச்சரண மகாத் ஸ்வபுவம் விஹாய பாண்ட்ய: (91)**

> இரவிகுல திலகனான உத்தமசோழனின் படைத்தலைவன் வலிமைமிக்க படையுடன் பாண்டிய மன்னனுடன் மோதினான். பாண்டியன் பயந்து அகஸ்தியரின் உறைவிடமான மலைய மலையில் தன்னாட்டை விடுத்து அங்கே அடைக்கலம் ஆனான்.

நெல்லை மாவட்டம் பாபநாசம் நகரில் தாமிரபரணியாறும் அவ்வாறு தோன்றுதற்கு இடமானபொதிய மலையும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தவை. பரந்தும் விரிந்தும் காணப்படும் பொதிகை மலையில் பல குகைகள் உள்ளன. இம்மலையை அகஸ்தியரின் உறைவிடமாகவும் குறிப்பிடுவர். இங்குள்ள குகை ஒன்றில் ஒளிந்து கொண்டால் பகைவரால் கண்டுபிடிக்க முடியாது என்று எண்ணி, பாண்டிய மன்னன் ஒளிந்துகொண்டதாக இச்சுலோகத்தில் கூறப்படுகிறது. மேலும் விரிவுக்கு இந்நூலாசிரியரின் விக்கிரமசிங்கபுர உலா என்ற நூலைக் காணவும்.

**பாண்ட்ய ராஜ யசசாம் விமலாநாம் பீஜதாவி(மி)வ கதாநி லஸந்தி ராஜராஜ தநயோ நயவேதி (தீ) மௌக்திகாநி ஜக்ருஹே விமலாநி (92)**

> இராஜராஜனின் மகனும் அறமறிந்தவனும் ஆன இராசேந்திரன் பாண்டிய மன்னனின் தூய புகழுக்கு விதைகள் போல விளங்கும் உயர்ந்த முத்துக்களைக் கைக்கொண்டான்.

பாண்டியநாடு முத்துடைத்து என்பர். கொற்கையில் முத்துக் குளித்தல் பெருவழக்காகும். பிற்காலத்தில் சேதுபதிகள் மன்னார் வளைகுடாவில் முத்துக்குளித்தலுக்கு ஏற்பாடு செய்தனர். முத்துச் சலாபம் தொடர்பாகச் சில செப்பேடுகள் திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ளன. இராசேந்திரன் காலத்தில் முத்துக்களை மன்னன் பெற்றுள்ளான். இராஜராஜனுடைய பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில் பல்வேறு முத்துக்கள் கூறப்பட்டுள்ளன. இராஜராஜன் எண்ணற்ற முத்துக்களை இறைவனுக்குச் சமர்ப்பித்துள்ளான். மௌக்திகானி – முத்துக் காணிக்கை என்க. அந்தாதியாக இச்சுலோகம் உள்ளது.

**தத்ர ப்ரதிஷ்டாப்ய ததீய ராஷ்ட்ர ரக்ஷார்த்தம் ஆத்மீயதநூஜ மேநம்**
**ஸ்ரீ சோள பாண்ட்யம் ரவிவம்ச தீபோஜேதும் ப்ரதீசீந்தசமுச்ச(ஜ்ஜ) காம**
**(93)**

இரவிகுலத்தின் விளக்கான அவன் தன் மகனை அந்த நாட்டைப் பாதுகாக்க வேண்டி அங்கு அனுப்பி வைத்துப் பின் மேற்குத் திசை நோக்கிச் சென்றான். பாண்டிய நாட்டிற்குச் சென்ற இளவரசன் சோழ பாண்டியன் என அழைக்கப்பட்டான்.

முதலாம் இராஜேந்திரனுக்குப் பிறகு இந்தச் சோழ பாண்டியனே இராஜாதிராஜன் அல்லது விஜய ராஜேந்திரன் என்ற பெயரில் சோழ நாட்டை ஆண்டான். பாண்டியர் மத்தியில் தன்னையும் பாண்டியனாக இராஜாதிராஜன் கூறிக்கொண்டது அரசியல் சாணக்கியமாகும்.

**பரிபவ முவ(ப) கர்ண்ண ய சோ (ஸோ) பிமாநீதரணி ப்ருதாம் யுதி**
**பார்க்கவாத் அவாப்தம்**
**புவி தமநு பலப்ய பூமிபாலஸ்தது பஹிதாஞ் ஜகதீஞ் ஜகீஷுராசீத் (94)**

பிருகு குலத்தில் பிறந்த பரசுராமனிடமிருந்து மன்னர்களுக்கு நேர்ந்த தோல்வியைக் கேள்விபட்ட அவன் (இராசேந்திரன்) பூமியில் அவரைத் தேடிக் கிடைக்காததால் அவரால் உருவாக்கப்பட்ட கேரள தேசத்தை வெல்லும் நோக்கத்தோடு இருந்தான்.

இராஜராஜன்போல் இராஜேந்திரனும் கேரள நாட்டின்மீது படையெடுத்தான் என்பது வரலாறாகும்.

**ப்ருகு குலதிலக ப்ரபாவ குப்தாம் அநுபஹதாம் அரிபிஸ்ததாதி ப்ருத்வீம்**
**கதமபி மநஸா விசாரயேத் க : பரிபவிதும் பரமேச்வராத் இதோந்ய: (95)**

பிருகுவம்ச குலதிலகமான பரசுராமரின் வலிமையால் பாதுகாக்கப் பட்டதும் பகைவர்களால் தாக்கப்படாததுமான அந்த ஆதி பூமியை வெல்வதற்குப் பரமேச்வரனைத் தவிர வேறு யார் மனதாலும் நினைப்பர்?

விஷ்ணுவின் ஓர் அவதாரமான பரசுராமன் தாபித்தது என்பதாலும் அரண் மிக்கது என்பதாலும் பரமேச்வரன் தவிர மற்றவர் அந்த நாட்டின்மீது போர் தொடுக்க நினையார் என்பது சுலோகத்தின் கருத்தாகும். எனினும் சிவன் சிந்தனையை மறவாத இராசேந்திரன் படையெடுத்துள்ளான்.

**அதிலங்க் ய(தி) ஸஹ்யம் அபநீத பயோ மதுராந்தகஸ் ஸபதி கேரளேச்வரம்**
**ஸபலம்ருரோத ததநு க்ஷிதிபக்ஷ யகாரி யுத்தம் அபவத் பயங்கரம் (96)**

பயமற்ற அந்த மதுராந்தகன் ஸஹ்ய மலையைத் தாண்டினான். உடனே பெரும்படையோடு கூடிய கேரள மன்னனோடு மோதினான். அரசர்களுக்கு அழிவைத் தரும்படியான கொடிய யுத்தம் பிறகு நடந்தது.

சேரநாடு கேரளேச்வரம் என இதில் உள்ளது. கேரளாவில் சோழர் படை நுழைந்து அதிபயங்கரமாகப் போரிட்டது.

**ஜித்வா கேரள பூபதிம் ப்ருகுபதேச்சித்வா தபோரக்ஷிதாம்**
**ப்ருத்வீம் பார்த்திவ நந்தநோ நிஜபுரம் ப்ராயாத் ஸ தாம் ச்ரிய**
**நிருத்யந்தீமிவ சஞ்சளை த்வஜ படீஹஸ்தைஸ் ஸமுல்லாஸிபிர்ஜ்**
**ஜல் பந்தீமிவ மஞ்ஜுளை சளத்ருஸாம் காஞ்சி குணைஸ் ஸ்வாகதம் (97)**

அவன் பிருகு குல மன்னரான பரசுராமனால் ஏற்படுத்திக் காக்கப்பட்ட கேரள மன்னனை வென்று அழித்தான். மதுராந்தகனின் இளவரசனும் செல்வத்தின் உறைவிடமான வனுமான அவன், கொடியைக் கையில் ஏந்தியவர்களான பெண்களின் இடையணிகளால் நல்வரவு கூறப்பட்ட வனாய்த் தன் நகரை அடைந்தான். அந்த இடையணிகள் ஆடல் புரியும் நடனமங்கையர் போல அசைவன. மகிழ்ந்து கொஞ்சும் பெண்ணைப் போல அழகிய ஓசை உடையன.

வெற்றி பெற்ற வீரர்கள் நாடு திரும்பும்போது இன்பக் கேளிக்கைகள் நிகழும் போலும்.

**அதாகமத் வைச்ரவணஸ்ய காஷ்டாஞ் ஜேதும் ந்ருபேந்த்ரச் சிபிவம்ச தீப**
**யஸ்யாஸ் த்ரிபுண்ட்ரம் ரஜதாத்ரி ராஸீத் கைலாஸ ஸம்ஸேவித சங்கராயா:(98)**

அதன் பிறகு சிபி வம்சத்தின் தீபம் போன்ற அவன் குபேரனின் திசையான வடதிசை நோக்கிச் சென்றான். கைலாயத்தில் பரமசிவனால் ஸேவை சாதிக்கப்படும் அந்தத் திசையின் திருநீற்றின் முப்பட்டைத் திலகமாய்த் திகழ்வது வெள்ளி மலையேயாகும்.

வைஸ்ரவன என்ற சொல் குபேரனின் வட திசையைச் சுட்டும். கைலாய மலை – இமயமலை.

**ஸ்ரீ சோள பாண்ட்யம் ஸ்வஸுதம் விதாய பாச்சாத்ய பூமேர் அபிரக்ஷணாய காஞ்சீம் ஸ காஞ்சீமிவ பூமி தேவ்யாஸ் ஸமாவிசத் தைல குலைக காலः (99)**

தைல குலத்தின் காலனான அவன் சோழபாண்டியனான தன் மகனை மேற்குப் பூமியின் காவலுக்கு வைத்துவிட்டு, பூமி தேவியின் இடையணியான காஞ்சி நகரை அடைந்தான்.

தைல குலம் என்பது மேலைச் சாளுக்கிய அரசமரபாகும். கைப்பற்றிய பகுதி தொடர்ந்து தன் பேரரசில் இருக்க, தன்னுடைய மகனை ஆட்சி புரியுமாறு செய்து விட்டு மதுராந்தகன் சோழர்களின் துணைத்தலைநகரான காஞ்சியை அடைந்தான். காஞ்சி என்றாலே மேகலையாகிய இடையணி அல்லது ஒட்டியாணம் ஆகும். காஞ்சி என்ற சொல் ஒரு நகர் மற்றும் ஓர் அணிகலனைச் சுட்டும். சோழ பாண்டியனே இராஜாதிராஜன் என்பதை முன்பே குறிப்பிட்டோம்.

**சாளு(க்ய) நாதஞ் ஜயஸிம்ஹ ராஜம் ஸ்வயம் கலேர் ஆச்ரயமாகலைர்ய்ய (லய்ய)**

**பூர்வ்வந் ந(த)மேவா பிஜகாம ஜேதும் ராஜேந்த்ர சோளः கலிகாலகாலः (100)**

கலி காலத்திற்குக் காலனான இராஜேந்திர சோழன் சாளுக்கிய மன்னனான ஜய சிம்ஹனைக் கலியின் அடைக்கலம் என்று கருதி அவனை முதலில் வெல்வதற்குச் சென்றான்.

இராஜேந்திர சோழன் மேற்கொண்ட சாளுக்கியப் போர் இதில் சுட்டப்படுகிறது. இம்மன்னனுடைய மெய்க்கீர்த்திகளில் சாளுக்கியப் போர் அழகாகக் கூறப்படுகிறது. கலிக்கே காலன் என்பதால் கலிக்கு அடைக்கலம் தந்தவனைச் சும்மாவா விடுவான்? எனவே படையெடுத்தான் எனலாம்.

**தைலஸ்ய ஸந்ததி மாவாப்ய ததிய கோப :**
**வஹ்நிஸ் ஸமுஜ் வலிதவான் இதிநைவ சித்ரம்**
**சித்ரம் த்விதம் பவதி ஸர்வ ஸமுத்ர வாரீணி**
**யுல்லங்க்ய யந்நிரதஹ த்விஷதிண்ட(ந்த)நாநி (101)**

தைல ஸந்ததியை அடைந்தும் அவனுடைய கோபத்தீ பெருகிற்று என்பதில் ஆச்சர்யம் இல்லை. ஆனால் எல்லாக் கடல் நீரையும் கடந்தும் பகைவர்களாகிய விறகுகளை அது எரித்தது என்பதே ஆச்சர்யம்.

தைல குலத்தினன் என்றும் தைல (எண்ணெய்) குவியலின் என்றும் முதல் சொல்லுக்குச் சிலேடையாகப் பொருள் காணவேண்டும். கடல்நீரைக் கடந்து சென்று மேலைச் சாளுக்கியனை வெல்ல வேண்டியதில்லை. எனினும் கவிஞர் கற்பனை நயத்துக்காக இவ்வாறு கூறியுள்ளார்.

**தஸ்மின் ஸமுந்யோ கவதி க்ஷிதீசே ஜேதும் ஸகோபே ஜயஸிம்ஹ ராஜம் ரட்டாங்க நாநாம் நயநாம் புஸிக்தச் சோகாக்நிர் ஆஸிஜ்ஜவலி தோதி சித்ரம் (102)**

ஜயசிம்மனைக் கொல்லக் கோபத்தோடு அந்த மன்னன் முயலும் போது இரட்டநாட்டைச் சேர்ந்த மகளிரின் கண்ணீரினால் நனைக்கப்பட்டும் அவர்களுடைய சோகத் தீ மேலும் கொழுந்துவிட்டது என்பது மிகவும் ஆச்சர்யம்.

கண்ணீராகிய நீர் கோபக் கனலைத் தணித்துவிடும். ஆயின் இரட்ட மகளிரின் கண்ணீர் கோபக் கடலைத் தணிவிக்கவில்லை என்பதால் ஆச்சரியம் என்று கவிஞர் கூறுகிறார்.

**தச்சண்ட தண்ட பரிகண்டித ரட்டராஜ**
**நாரீ பயோதர தடாநி அவிபூஷணாநி**
**தந் நேத்ர வாரி கணி கோஜ் ஜ்வல மௌக்தி காநி**
**தத் காந்தி மந்திர் விலஸந்தி மஹாந்ய(ந்த)ய பூவந் (103)**

வேகமிக்க அவனுடைய படையால் துண்டாடப்பட்ட இரட்ட அரச பெண்டிருடைய மார்பசத தடங்கள் ஆபரணங்களற்று இருந்தாலும் அவர்களின் கண்ணீர்த் துளிகளாகிய ஒளிரும் முத்துக்களோடும் ஒளியோடும் பெருத்தும் திகழ்ந்தன.

கணவன்மார்கள் போரில் இறந்ததால் துயரத்தில் அணிகலன்கள் இன்றி இரட்டருடைய பெண்கள் இருந்தாலும் அவர்களுடைய அழுகையான கண்ணீர் மார்பகங்களில் பட்டு முத்துக்களைப்போல காட்சி தந்ததாகச் சுலோகம் வருணிக்கிறது.

**சோளேந்த்ர ஸிம்ஹ ஜயஸிம்ஹ பலாந்ய குர்வ்வந**
**யுத்தம் ப்ரவ்ருத்தம் இதரேதரம் இத்தரோஷம்**
**உத்துங்க மத்த கஜதந்த விகட்ட நோந்ய(த்ய)த்**
**வஹ்நி த்வஜாநி ஸகலாநி ததாஹ யத்ர (104)**

சோழமன்னர்களில் சிங்கம் போன்ற மதுராந்தகன் படைகளும் ஜயசிம்மனுடைய படைகளும் பரஸ்பரம் பெருகும் சினத்தோடு பெரும்போர் புரிந்தன. அப்போரில் உயர்ந்த மதம் பிடித்த களிறுகளின் தந்தங்கள் உராய்வதால் தோன்றும் தீ எல்லாக் கொடிகளையும் எரித்தது.

சோழேந்திர சிம்ஹ, ஜயசிம்ஹ என இரண்டு சிம்மங்கள் மோதும் போர் கடுமையாகத்தானே இருக்கும். இச்சுலோகத்தில் யானைப் படைமோதும் காட்சி சுட்டப்படுகிறது. போரின் கடுமையைக் குறிப்பிட, தீ தோன்றி, கொடிகளை எரித்ததாகக் கவிஞர் கூறுகிறார்.

**குலதநம் அகிலம் யசஞ்ச முக்த்வா பயம் அவலம்ப்ய பலாயணஞ் சகார ரவிகுல திலக ப்ரகோப வஹ்நே : பரிஹரணாய ஸ ரட்ட ராஷ்ட்ர நாத: (105)**

> இரட்ட நாட்டுத் தலைவனான அவன் சூரியகுல மன்னனின் சினத்தீயிலிருந்து விடுபடுவதற்காகத் தன்குலச் செல்வத்தையும் புகழையும் விடுத்து, அச்சத்தினால் நாட்டைவிட்டு ஓடினான்.

இரட்ட ராஷ்ட்ரநாதன் ஜயசிம்மனாவான். உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அவன் ஓடியதால் அவனுடைய செல்வத்தையும் குடிப்புகழையும் இழக்க வேண்டியதாயிற்று.

**அரிபலம் அவசிஷ்ட மிஷ்ட கீர்த்தேர்வ் வளப குலா பரணஸ்ய கோப பீத த்ருதம் அபஜத காநநாநி ஸேநாரஜ இவ தஸ்ய குஹா ச்ரபூதராணாம் (106)**

> வளபகுலத்தின் ஆபரணம் போன்றவனும் புகழை உடையவனுமான அவனுடைய கோபத்திற்குப் பயந்தவனான இரட்ட அரசன் சோழப் படையினரின் கால் தூளி பறப்பதைப் போல் காடுகளையும் மலைகளின் குகைகளையும் விரைவில் அடைந்தான்.

தமிழில் வளவன் என்று கூறுவதே வடமொழியில் வளப என்று வந்துள்ளது. சோழருடைய வளவ குலத்தின் அணிகலனாக இராசேந்திரன் விளங்கினான். ஜயசிம்மன் பயந்து ஓடுவதைக் கவிதை நயமாகக் கவிஞர் கூறுகிறார்.

**அவிரள சரவ்ருஷ்டிச் சாதிதாசாந்த ராளா**
**ரவிகுல திலகஸ்ய க்ஷோபிதா ஸைன்ய வீரை**
**ப்ரபல பவந வேகோத் தூய மாநேவ மேகா**
**வலிரபஜதி (த) பங்கம் ரட்ட ராஜஸ்ய ஸேநா (107)**

> எண்ணற்ற அம்புகளின் மழையால் திசைகள் மறைக்கப்பட்டன. சூரிய குல திலகனின் படை வீரர்களால் கலங்கடிக்கப்பட்டதான இரட்ட ராஜாவின் படை, வலிமை வாய்ந்த காற்றின் வேகத்தால் அலைக்கழிக்கப்படும் மேகத் தொடரைப் போல் பங்கப்பட்டது.

காற்றின் வேகத்தில் மேகக்கூட்டத்தின் நிலை எத்தகையதோ அத்தகையதே சோழர் படையின் முன் இரட்டரின் படை என்று சுலோகம்

கூறுகிறது. மிகுந்த அம்புகள் தொடுப்பதைச் சரவ்ருஷ்டி (அம்புமழை) என்று சுலோகம் கூறுகிறது.

**ரட்டராஜம் அவஜித்ய ஸஸைந்யம் ராஜராஜ தநயோ நயவேதி (தி) தைர்ய்ய சௌர்ய்ய விஜயாந்யகிலை ஸ்வைஸ் ஸேவிதோ குணகணை புரமாப (108)**

இரட்ட மன்னனைப் படையோடு வென்றவனும் தருமத்தை அறிந்தவனுமான இராஜராஜனின் மகன் துணிவு, வீரம், வெற்றி போன்ற நற்குணங்களால் போற்றப்பட்டவனாகத் தன் நகரை அடைந்தான்.

இரட்ட அரசனை வெற்றி கொண்ட பிறகு இராசேந்திரன் தன் நாடு திரும்பினான். மகனோடு தந்தையையும் கவிஞர் போற்றுகிறார்.

**தப: ப்ரபாவாத் அவதீர்ண்ணகங்கம் பகீரத(ம்) பாஹு பலாத் ஹஸன்ஸ: கங்கா ஜலை: பாவயிதும் ஸ்வகீயாம்(மி) யேஷ ப்ருத்வீம் ரவிவம்ச தீப (109)**

தவத்தின் வலிமையால் கங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்த பகீரதனைப்போல் தன் தோள் வலிமையால் நகைத்த அந்த இரவிகுல தீபம் போன்ற அரசன் கங்கை நீரால் தன் நாட்டைப் புனிதமாக்கினான்.

தவ வலிமையால் ஆகாய கங்கையை மண்ணுலகிற்குப் பகீரதன் கொண்டு வந்தான். இராசேந்திரனோ தவம் ஏதும் செய்யாமல் படை வலிமையால் கங்கை நீரைத் தன் தலைநகருக்குக் கொண்டு வந்தான். எளிதாகத் தன்னைப் போல் கங்கையைக் கொண்டு வராமல் கடுந்தவத்தின் மூலம் பகீரதன் கொண்டு வந்ததை இராசேந்திரன் எண்ணி நகைத்ததாகக் கவிஞர் எள்ளல் சுவையுடன் கூறுகிறார். இந்தச் செய்யுளை மனதில் கொண்டு கல்வெட்டாய்வாளர் வெங்கையா இராசேந்திரனின் வடஇந்தியப் படையெடுப்பைத் தீர்த்த யாத்திரை என்று கூறுகிறார் போலும்.

**ததீய தீரஸ்தித பூமிபாலாந் விரோதிநோ ஜேது மதாதிசே(ஸ) தண்டாதிநாதம் பலவத் பலௌகம் சௌர்ய்யா ஸ்பதம் நீதிமதக்ர கண்யம் (110)**

பிறகு அந்த நதியின் கரையில் வாழும் பகை அரசர்களை வெல்வதற்கு வீரத்தின் உறைவிடமும் வலிமை வாய்ந்த படையையுடையவனும் அறமறிந்தோரில் முதல்வனும் ஆன தன் படைத்தலைவனுக்கு ஆணையிட்டான்.

சேரன் செங்குட்டுவன் கண்ணகித் தெய்வத்திற்குச் சிலைசெய்யக் கல் கொண்டுவர வில்லவன் கோதையை அனுப்பி வைத்தான். இராசேந்திரன் தன் படைத்தலைவனை அனுப்பி, கங்கைநீரைக் கொண்டுவர ஏற்பாடு செய்தான்.

**சலபஹள துரங்கமோர்ம்மி கங்கா ஜல மிவ ஹைமவதாத்தடா மு (து) தக்ரம்**
**களகளமுகரீ க்ருதாகிலாசந் நிரகமத் அஸ்ய துரோதிபூ(பு)ரி ஸைந்யம் (111)**

ஓடும் பெருங்குதிரைகளாகிய அலைகளைக் கொண்டதான அவனுடைய பெரும்படை கலகல என்னும் ஓசையால் திசைகளில் பேரொலி எழுப்பி, இமயமலையின் ஓரத்திலிருந்து வரும் கங்கை நீரைப் போலச் சென்றது.

குதிரைகளின் காலடி ஓசையையும் கங்கைப் பெருக்கெடுத்தோடும் அலையோசையையும் கவிஞர் ஒப்பிடுகிறார். கலகல என்ற இரட்டைக் கிளவி தமிழில் தற்போதும் வழங்கப்படுகிறது. ஸைன்யம் – படை.

**கரி நிகரநிபந்த (த்த) ஸேதுமார்க்கை பலமதரத் ஸ்(ஸ)ரிதஸ் ததீயம் அக்ரயம்**
**கரிதுரக நரோப யோக சுப்யம் ஜலநி வஹாச்சரணை ச்ரஸைந்யம் அந்யத் (112)**

சோழர் படையின் முன்பகுதி யானைகளின் தொகுதிகளால் அமைக்கப்பட்ட பாலத்தில் நதியைக் கடந்தது. எஞ்சிய படை முன்புள்ள படையின் யானை, குதிரை, மனிதர் முதலியோர் பயன்படுத்தியதால் காய்ந்த கங்கை நதியைக் காலால் நடந்து சென்றது.

யானைகளை ஒருகரையிலிருந்து மறுகரை வரை பாலம் போல் நிற்க வைத்து வீரர்களின் ஒரு பகுதி கங்கையைக் கடந்ததாகவும் மற்றோர் பகுதியான யானை, குதிரை, மனிதர் முழுமையாக நீரைப் பயன்படுத்தியதால் தரை வழியாக நடந்து சென்றதாகவும் கூறப்பட்டுள்ளது. படையின் பெருக்கத்தைக் குறிப்பிட இவ்வாறு கவிஞர் கூறுகிறார்.

**த்விர தாச்வ பதாதி மண்டல க்ஷுபிதை ரேணு பிராப்த திக்மு கா :**
**ஸஹஸா ரிபுராஜ மண்டலாந் அவி(ச)ந் விக்ரம சோள ஸைநிகா (113)**

யானை, குதிரை, காலாட்படை ஆகியவற்றால் கிளப்பப்பட்ட தூளிகளைத் திசைகளின் முகத்தில் பரப்பியபடி விக்ரம சோழனுடைய படைவீரர்கள் எதிரிப் படையின் கூட்டத்தில் நுழைந்தனர்.

இராசேந்திர சோழனுக்கு விக்ரம சோழன் என்ற பட்டப் பெயருமுண்டு. எசாலம் செப்பேட்டிலும் இப்பெயர் வருகிறது. முப்படையும் பகைவரின் படைக்களத்தில் நுழைந்தன.

**ப்ரபல பல கஜாச்வ பத்ரி (த்தி) ஸங்கைர் அபிமுகம் இந்த்ரரதஞ் ஜிகாய பூர்வ்வம்**
**ரவிகுல திலகஸ்ய ஸைந்யநாத சசிகுலபூஷண பூமிம் அக்ரஹீத் ஸ (114)**

சூரியகுலத் திலகமான அம்மன்னனின் படைத்தலைவன் வலிமை வாய்ந்த யானை, குதிரை, காலாட்படை தொகுதியினால் இந்திரரதனை முதலில் வென்று சந்திரகுலத்தின் அணிகலனாகத் திகழும் நிலத்தைக் கைப்பற்றினான்.

சோழர்படை இந்திரரதனை வென்றதை மெய்க்கீர்த்தியும் அழகாகக் குறிப்பிட்டுள்ளது.

**நிசித சரநிக்ருத்த தண்டமூர்தம் (மஸ்தம்) யுதி தவளா தப வாரணம் பபாத சசிகுல திலகஸ்ய தஸ்ய ராஜ்ஞ: பரிபவகிந்ந (தயே) வ சந்த்ர பி(ம்ப)ம் (115)**

> கூர்மையான அம்புகளால் வெட்டப்பட்ட தண்ட நுனியினை உடைய வெண்கொற்றக்குடை கீழே விழுந்தது. அது சசிகுலத் திலகம் போன்ற அம்மன்னனுடைய தோல்வியின் துயரத்தால் சந்திரனின் பிம்பம் கீழே விழுந்தது போல் விளங்கியது.

சோழர் படையின் ஆற்றலால் பகைவரின் வெண்கொற்றக்குடை கீழே விழுந்தது. சசியின் பிம்பம்போல அது காட்சி தந்தது. வெண்கொற்றக் குடை வீழ்ந்ததால் படையின் தோல்வி உறுதிப் படுத்தப்படுகிறது எனலாம். வெண்கொற்றகுடை நிலவுபோல் இருக்கும் என்பதைச் சிலம்பும் கூறும். 'திங்கள் மாலை வெண்குடையான்' என்று தொடங்கும் கானல்வரிப் பாடலில் குடையின் நிறம் கூறப்பட்டுள்ளது. சசி – நிலவு.

**அபஹ்ருத ரணசூர ஸம்பத் உச்சைரத நிவிஷேச ஸ தர்ம்ம பாலப்ருத்வீ(ம்) (த)மபி விஜிதவாந் ஸுர ஸ்ரு(ஸ்ர) வந்தி மகமதசௌ சிபிராஜ தண்டநாத : (116)**

> சிபிகுல அரச மரபில் வந்த அவன் தன்னுடைய படைத்தலைவன் மூலம் இரணசூரனின் செல்வத்தை முழுவதும் கவர்ந்தான். பின்னர் தன்மபாலனுடைய வங்காள நாட்டில் படைத்தலைவன் நுழைந்தான். பிறகு அந்நாட்டை வென்ற பிறகு தேவநதி நோக்கி அவன் சென்றான்.

தேவநதி – கங்கையாறு. தன்மபாலனை இராசேந்திரன் வென்றது மெய்க்கீர்த்தியிலும் உள்ளது.

**விஜிதைஸ் ததீய தடபூமி நாயகைஸலிலம் ததீய மத பாவநம் பரம் நிஜநாயகா (ய) மதுராந்தகாய தத் ஸமநீநயத் ஸபதி தண்டநாயக: (117)**

> சோழனுடைய தண்டநாயகம் அந்த நதியின் கரையில் இருக்கும் தன்னால் வெல்லப்பட்ட அரசர்களைக் கொண்டு அந்நதியின் புனிதமான நீரைத் தன்னுடைய தலைவனான மதுராந்தகனுக்காகக் கொண்டு வந்தான்.

தண்ட நாயக என்பது படைத்தலைவன் என்க. தோல்வி அடைந்த கனகவிசயர் தலையில் கண்ணகிக்காகக் கல்லைச் செங்குட்டுவனின் படைத்தலைவன் கொண்டு வந்தான். அதுபோல் புனித கங்கைநீரைச்

சோழனின் படைத்தலைவன் தோற்ற எதிரிகளின் தலைகளில் வைத்துக் கொண்டு வந்துள்ளான். படைத்தலைவனின் பெயர் கூறப்படவில்லை.

**கோதாவரீம் அப்யஸரத் ஸ்ரவந்தீம் ராஜேந்த்ர சோளோவிஜிகீஷயாசௌ ஸ்வாங்காங் (கங்) கராகைர்ஜ்ஜல கேளிகாயாம் ஸரித் பதேஸ் தாமகரோச்ச சங்க்யாம் (118)**

> இராசேந்திர சோழன் வெல்லும் ஆசையோடு பெருக்கெடுத் தோடும் கோதாவரியருகே வந்தான். அங்குச் சந்தனம் முதலான மேனிப் பூச்சுக்களோடு கோதாவரியில் நீராடி நதிகளின் தலைவனான கடலுக்குக் கோதாவரியை ஐயப்பாட்டுக்குரியவளாக ஆக்கினான்.

கோதாவரி நதியில் நீராடி இறைவனை வணங்கியபின் வழியில் பல பகுதிகளில் தெய்வங்களை வணங்கி நிவந்தங்கள் தந்த இராசேந்திர சோழ தேவர் திரைலோக்கியில் கல்வெட்டு வெட்டியுள்ளார். கங்கை கொண்டு எழுந்தருளுகின்ற இடத்துத் திருவடி தொழுது என்பது சாசனத்தின் ஒரு பகுதியாகும். (A. R. E. 1932 பகுதி 13)

இராசேந்திர சோழன் கோதாவரியாகிய புனிதநதியில், வாசனைத் திரவியங்களை மேனியில் பூசி அவை நீரில் கரைய நீராடினான். வாசனைத் திரவியங்களுடன் கோதாவரி, கடலரசனாகிய தன் கணவனை அடைந்தாள். இதனால் அவள் கற்பின் மீது கடலரசன் ஐயம் கொண்டான். நதியைப் பெண்ணாகவும் கடலை ஆணாகவும் கூறுவது மரபாகும். வருணன் கடல் தெய்வமாகும். பெண் என்றால் கற்பு தேவை என்பது இந்நாட்டின் மரபாகும்.

கரிகால் சோழன் காவிரி நதியாகிய மனைவியை மறந்து கங்கையை மணந்தபோதும் (கங்கை வரை சென்று வென்றதால்) ஊடல் கொண்டு அவனைக் காவிரி வெறுக்கவில்லை எனக் கானல் வரியில் இளங்கோவடிகளும் கூறுவர்.

**ஜித்வா மஹிபாலம முஷ்ய ஹ்ருத்வாயசாம்ஸி ரத்நாநி மஹாம்ஸி சோச்சை: தண்ட: ப்ரசண்டஸ் ஸலிலம் ஸ்வகீய நாதாய காங்கம் ஸமநீந யத்ஸ (119)**

> அவனுடைய படை, பகையரசரை வென்று இரத்தினங்களைக் கைக் கொண்டு கங்கை நீருடன் மதுராந்தகனுக்குப் புகழையும் கொண்டு வந்தது.

போரில் வெற்றி பெறுவதும் புகழாகும். தோற்ற மன்னரிடமிருந்து இரத்தினமுட்பட நவமணிகளைக் கைப்பற்றிக் கொண்டு வருவது வெற்றிபெற்ற மன்னரின் இயல்பாகும்.

**கலிராஜ நியோக காரிணம் ஸபலம் ஸாநுஜம் ஒட்டம் ஆஹவே ஸ நிருபோ விநிஹத்ய வீர்ய்யவாந் அதமத்தேப பரிக்ரஹஞ் சகார (120)**

கலியரசனின் ஆணையை நிறைவேற்றும் ஒட்ட இராசனையும் அவன் தம்பியையும் படையையும் கொன்று மதம்கொண்ட யானைகளை வீர்யவான் ஆன மதுராந்தகன் கைப்பற்றிக் கொண்டான்.

கலியரசனாக ஒட்டனைக் கூறும் இச்சுலோகம் அவனையும் அவன் தம்பியையும் கொன்றதைச் சுட்டுகிறது.

கலியரசன் ஆணை தீயது என்றும் காண்கிறோம். கலி – சனி. ஒட்டர் தேயத்தையும் தென்கோசல நாட்டையும் சோழர் படைவென்றது. திறையாகப் பன்மணிக் குவியலைப் பெற்றது.

**தத்ர மத்தகஜம் கஞ்சித் அபிதாவந்தம் உத் (ந்)முகம்**
**அகாதயத் ஸ்வயந் தேவ ஸ்வாருதே(டே) நைவ (ஹ)ஸ்திநா (121)**

அந்தப் போரில் மதுராந்தகன் தன்னைத் தாக்க ஓடிவரும் யானையைத் தான் ஏறியிருக்கும் யானையின் துணையால் தானே கொன்றான்.

அரசனே போரிட்டதை முன் சுலோகத்திலும் இந்தச் சுலோகத்திலும் காண்கிறோம். ஹஸ்தி, கஜம் இரண்டும் யானையைச் சுட்டும் சொற்கள்.

**நகரீம் அவிசஜ் ஜிதைர் நிருபை : குலஜைர் அர்ச்சிதபாத பங்கஜ :**
**விபவைர் அதுரீ க்ருதா கி (ல) த்ரித சா வாஸ குணாந் நிஜாம் அசௌ (122)**

தன்னால் வெல்லப்பட்ட நற்குல வேந்தர்கள் போற்றுகின்ற திருவடித் தாமரைகளை உடைய மதுராந்தகன் தன் தலைநகரை அடைந்தான். அந்நகர் செழிப்பால் தேவர்களின் அமராபதியையே கீழாக்கியது.

கங்கைவரை படையெடுத்துச் சென்று அங்கிருந்து கைப்பற்றி வந்த செல்வச் செழிப்பால் தேவர் உலகான அமராபதியினும் கங்கைகொண்ட சோழபுரம் மேம்பட்டதானது. தோற்ற மன்னர் வென்ற மன்னரின் காலடியில் வீழ்வதைப் பல சாசனங்களில் காணலாம். குடந்தை நாகேஸ்வரர் கோயிலில் உள்ள கங்கை விநாயகர் இராசேந்திர சோழன் மூலம் கொண்டு வரப்பட்டவர் ஆவார்.

**அவஜித்ய கடாஹம் உந்நதைர்ரிந்நிஜ தண்டைர் அபிலங்கி தார்ண்ணவை**
**ஸகலாம் அவநீந் நதாகில க்ஷிதிபோ ரக்ஷிதவாந் அயஞ்சிரம் (123)**

மன்னர்கள் அனைவராலும் வணங்கப்பட்ட அந்த மதுராந்தகன் கடலைக் கடந்து உயர்ந்த தன் கப்பல்களைக் கொண்டு கடாரத்தை வென்று எல்லா உலகையும் வெகுகாலம் ஆண்டான்.

மாமன்னன் இராசேந்திரன் வெற்றிகளுள், கங்கைவரை சென்று வென்று வந்ததும் கடற்படை உதவியால் கடாரத்தை வென்றதுமே பெரிய

வெற்றிகள் என்பர். இராசேந்திரனுடைய மெய்க்கீர்த்தியும் கடார வெற்றியைப் பலவாறு புகழ்கிறது.

**சோளங் கங்கமிதி க்யாத்யா ப்ரதீதந் நிஜமண்டலே**
**கங்கா ஜலமயந் தேவோ ஜயஸ்தம்பம் வ்யதத்த ஸ : (124)**

தன்னுடைய மண்டலத்தில் சோழகங்கம் என்ற பெயருடையதும் கங்கை நீரால் ஆனதுமான ஜயஸ்தம்பத்தை இராஜேந்திரன் நிறுவினான்.

கங்கை நீரைத் தெளித்து ஏற்படுத்திய சோழகங்கம் ஏரி தற்போது பொன்னேரி என வழங்கப்படுகிறது. கங்கைகொண்ட சோழபுரத்திற்கு மேற்கில் நெடுஞ்சாலையையொட்டி இவ்வேரி உள்ளது.

**ஸோயம் ஸ்ரீமுடிகொண்ட(கொண்ட) சோளபுரம் இத்யாக்யாந் ததத்யாம் புரி ஸ்தித்வா ஸ்ரீமதுராந்தகோ நரபதிஷ் ஷஷ்ட்யாம் சரத் யாதராத் ஸ்ரீமந்தஞ் ஜநநாதம் உந்நத குணம் ராமாஸ்மஜம் பூ ப்ராஹிணோத் க்ராமம் ஸ்ரீபழயூரம் அந்தக ரிபோஸ்த்வந் தாபயேத் உச்சித : (125)**

மதுராந்தகன் என்னும் அந்த அரசன் முடிகொண்ட சோழபுரம் என்னும் பெயர்கொண்ட ஊரில் இருந்து ஆறாம் ஆட்சியாண்டில் அன்போடு இராமனின் மகனும் உயர்ந்த பண்புகளையுடையவனும் செல்வமுடைய வனுமான ஜனநாதனை அந்தகனை அழித்த பரமசிவனுக்கு, ஸ்ரீபழையூர் என்னும் கிராமத்தைத் தேவதானமாக அளிக்குமாறு அனுப்பி வைத்தான்.

பழயூரம் என்பதில் 'ழ' மட்டும் தமிழில் உள்ளது. முடிகொண்ட சோழபுரம் இன்றுள்ள பழையாறை என்ற ஊராகும். இடைக்காலச் சோழர்களின் தலைநகராக இருந்த பழையாறை சோழமன்னர்கள் முடிசூடும் நகரமாக இருந்ததால் முடிகொண்ட சோழபுரம் என வழங்கப்பட்டது. பிற்காலச் சோழர் ஆட்சியின்போதும் மன்னர்கள் தங்கும் இடமாகவும் ஆணைகள் வழங்கும் இடமாகவும் முடிகொண்ட சோழபுரம் விளங்கியது. ஜனநாதன் மந்திரியாகவும் ஓலை நாயகமாகவும் இருந்துள்ளான். மன்னனின் தானத்தை நிறைவேற்றும் ஆக்ருப்தியாகவும் இவன் இருந்துள்ளான். திருவாலங்காடு இறைவனுக்கு வழங்கிய கொடை இதில் இடம்பெறுகிறது. கொண்ட என்ற சொல் இருமுறை சாசனத்தில் உள்ளது.

**கலேர்பலாத் ப்ரஸ்கலிதம் ஸ்வநீதி மார்க்கம்புன:ஸ்தாப யிதுஞ் ஜகத்யாம் திவோவ தீர்ண்ணந்திஷணம் வதந்தி விபச்சிதோயம் விதுஷாம் அதீசம் (126)**

கலியின் வலிமையால் நழுவிய தன்னுடைய நீதி மார்க்கத்தை மீண்டும் நிலை நிறுத்த வானுலகில் இருந்து வியாழனாகிய பிரகஸ்பதியே இப்பூமியில் ஜனநாதனாகப் பிறந்தார்.

ஜனநாதன் வியாழன் போன்று அறிவில் வல்லவன் என்று இச்சுலோகம் கூறுகிறது. கலியின் வலிமை குறித்து முன்பும் கண்டோம். பிற்காலச் செப்பேடுகளில் வரும் புகழ்ச்சி மொழிக் குறிப்பு களில், அறிவுக்கு அகத்தியன் என்று கூறப்பட்டுள்ளது. இங்கே பிரகஸ்பதி கூறப்படுகிறார்.

**மந்த்ரி (ரீ) ஸ்ரீமதுராந்தகஸ்ய விதுஷாம் அக்ரேஸரஸ் ஸத்பத ப்ரஸ்தான ப்ரஹிதாத்ம புத்திர் அநிசம் சாளுக்ய சூடாமணி வித்வ(த்வ) ர்க்க முகார விந்த (நிவஹ) ப்ரோத்யோத நோத்யத்ரவிச் சக்ரஸ்யேவ ப்ரஹஸ்பதிர்க் குணநிதிர்ய் யோபூத் தயா ஜந்மபூ: (127)**

> ஸ்ரீமதுராந்தகனின் முதல் மந்திரியான அவர் சாளுக்கிய குலத்திற்குச் சூடாமணியாவார். அறிஞர்களுக்கு முதல்வர் தன் அறிவை எப்போதும் நல்வழியில் செலுத்துபவர். அறிஞர்களின் முகத்தாமரைக் குவியலுக்கு உதய சூரியனாக இருப்பவர். இந்திரனுக்கு வியாழன்போல் அமைச்சராக மதுராந்தகனிடம் இருப்பவர். இந்த ஜனநாதன் கருணையின் பிறப்பிடம்; குணக்குவியல் ஆவர்.

மதுராந்தகனிடம் பணிபுரிந்த ஜனநாதனின் பெருமைகளையும் சிறப்புகளையும் இச்சுலோகத்தில் காண்கிறோம்.

**ராமாத்மஜோ ஜயங்கொண்ட சோள மண்டல மண்டநே**
**பாச்ச்ராத்யாகிரி மத்யஸ்தே புராண க்ராம ஸம்ஜ்ஞிதே (128)**

**வஸதே தேவ தேவாய சங்கராய புரத்விஷே**
**அம்மையப்ப ஸ்மாக்யாய க்ராமமேநம் அதத்தஸ (129)**

> இராமனின் மகனான ஜனநாதன் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துக்கு அணியானதும் மேன்மலை நாட்டின் நடுவில் உள்ளதும் புராணக் கிராமம் எனப் பெயர் பெற்றதும் ஆன அந்த ஊரை அவ்வூரில் உறையும் தேவதேவனும் திரிபுரமெரித்தவனும் அம்மையப்பனுமான இறைவன் சங்கரனுக்குக் கொடையாக வழங்கினான்.

இவ்விரு சுலோகங்களில் முதல் சுலோகத்தில் ஜயங்கொண்ட என்ற சொற்றொடரில் ஜய என்பது மட்டும் கிரந்தத்திலும் எஞ்சிய எழுத்துகள் தமிழிலும் வெட்டியுள்ளனர். ஆயின் இரண்டாவது சுலோகத்தில் வரும் அம்மையப்ப என்ற முழுச் சொல்லையும் தமிழிலேயே வெட்டி உள்ளனர். உண்மையில் இவ்விரு சொற்களையும் வடமொழி கிரந்தத்திலேயே வெட்டி இருக்கலாம். தமிழில் வெட்டி இருப்பது புதுமையாகும். தமிழுக்கே உரிய சிறப்பெழுத்துகள் (ழ, ள, ற, ன) இல்லாத சொற்களையும் வடமொழிப் பகுதியில் தமிழிலேயே வெட்டியிருப்பதற்கு ஏதோ காரணம் இருந்திருக்கலாம். மேலும், பழையனூர் என்ற தமிழ்ப் பெயர் 'புராணக்ராம' என வடமொழியாக்கப்பட்டுள்ளது. உண்மையில் பெயர்ச் சொற்களை மொழி பெயர்த்தல் கூடாது. ஆங்கிலக் கவிஞர் Words Worth என்பதைச் 'சொல்லின் செல்வர்' என மொழிபெயர்ப்பது எத்தகு தவறோ அதே

தவறு பழையனூரை மொழி பெயர்ப்பதுமாகும். தமிழைத் திராவிடம் என்று மொழி பெயர்த்ததும் இதே போன்ற தவறாகும். இத்தவறு இன்றுவரை தொடர்கிறது. இப்பெயரில் சில கட்சிகளும் தமிழ்நாட்டில் உள்ளன.

அம்மையப்பர் அழகிய தமிழ்ச் சொல்லாகும். 'அம்மையே அப்பா ஒப்பிலாமணியே' என்று மாணிக்கவாசகரும் போற்றுவார். அர்த்தநாரீஸ்வரர் என்பதை உமையொருபாகர் என மொழிபெயர்ப்பர். அம்மையப்பரைச் சிவன்பார்வதி அல்லது பார்வதி சமேத பரமசிவன் என்பதைக் காட்டிலும் அம்மையப்பர் என்பதே சிறப்பாக உள்ளது.

**ப்ராக் தக்ஷிணதஸ் தஸ்ய புரஸ்தாச் சாபி ஸீமதாம்**
**ஸிம்ஹலாந்தக சதுர்வ்வேதி மங்கல க்ராமகோ கத : (130)**

பழையனூரின் கிழக்கிலும் தெற்கிலும் முன்னும்
சிங்களாந்தகச் சதுர்வேதிமங்கலம் எல்லையாய் அமைந்தது.

பழையனூரின் எல்லைகளில் அமைந்த ஓர் ஊர் கூறப்பட்டுள்ளது. சிங்களாந்தக சதுர்வேதி மங்கலத்தில் உள்ள முன்னொட்டு இராஜராஜனுடைய பட்டப் பெயர்களுள் ஒன்றாகும். சிங்களவர்க்கு அந்தகன் (யமன்) போன்றவன் ஆவான்.

**பச்சாத் (ந்)நித்ய விநோத சதுர்வ்வேதி மங்கல (மி)தி க்யாத:**
**ஸீமாபூத் க்ராமஸ்ய (பூத்ராம்ஸய) திருவாலங்காட் ஸமாக்யஸ்ய (131)**

திருவாலங்காடு என்ற பெயருடைய அந்த ஊருக்கு
நித்யவினோத சதுர்வேதிமங்கலம் என்ற புகழ்பெற்ற
கிராமம் மேற்கெல்லையாக அமைந்தது.

நித்யவிநோதன் என்ற இராசராசனுடைய பட்டப் பெயரில் ஒரு சதுர்வேதி மங்கலம் திருவாலங்காடு அருகே ஏற்படுத்தப்பட்டது. திருவாலங்காடு என்ற தமிழ்ச் சொல் வடமொழியாக்கப்படாமல் திருவாலங் காடு என வடமொழி உச்சரிப்புக்கேற்பத் தமிழ் எழுத்திலேயே வெட்டப்பட்டுள்ளது சிறப்பாகும்.

**அக்ருத ஸ்ரீமுகலேகாம் உத்தமசோள தமிழதரய (132)**

இதற்கு உத்தமச் சோழ தமிழதரையன் ஸ்ரீமுகம்
செய்தான்.

இச்சுலோகத்தின் ஒரு பகுதி மட்டுமே வெட்டப்பட்டுள்ளது. தமிழதரய என்ற சொல் தமிழில் உள்ளது. ஆயின் சோழ என்பது சோள எனக் கிரந்தத்தில் உள்ளது.

**விஜ்ஞப்திம் க்ருதவான் அத்ர திருக்காளத்தி பிச்சஸ: (133)**

இதற்குத் திருக்காளத்தி பிச்சன் விஜ்ஞப்தியாகச்
செயல்பட்டான்.

இச்சுலோகமும் ஒரு பாதி மட்டுமே உள்ளது. திருக்காளத்தி பிச்ச என்ற சொற்றொடர் மட்டும் தமிழ் எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது.

**மாயாநஸ்ய ஸுத : ஸ்ரீமாந் தீமா நரநெறி : ஸ்வயம்**
**ஜநநாத நியோகேந கரிணி ப்ரமணாதிகம் (134)**

**க்ருத்ய(ம்ம)ங்கலவாயில் ஸமாக்ய க்ராமாம் புதேஸ் ஸமஸ்தசசி**
**க்ருதவாந் உபய விசுத்த சதுர்த்தாந்வய ஸமுத்பூத (135)**

மாயானின் மகனும் மங்கலவாயில் என்னும் ஊராகிய கடலுக்கு முழுநிலவு போன்றவனும் தந்தைவழி, தாய்வழி என்ற இருவழி மரபிலும் தூயவனும் நான்காம் வர்ணத்தைச் சேர்ந்தவனுமான ஸ்ரீமான் அரநெறி என்பவன் பிடி சூழ்தல் முதலான செய்யவேண்டிய செயல்களைச் செய்தான்.

அரனெறி மற்றும் மங்கலவாயில் இருசொற்கள் மட்டும் (இரு எழுத்துகள் நீங்கலாக) தமிழில் உள்ளன. சுலோகம் 134, 135 இரண்டுக்கும் ஒருசேர மொழிபெயர்ப்புச் செய்தால்தான் சிறப்பாக இருக்கும். இருவழி மரபில் தூயவனும் நான்காவது சாதியைச் சார்ந்தவனுமான அரனெறி என்பவன், பிடிசூழ்தல் முதலான கருமங்களைச் செய்துள்ளான். நான்காவது வர்ணம் என்பது வேளாளரைச் சுட்டும். விளைநிலம் மற்றுமுள்ள நிலங்களை வேளாளர்களே நன்கு அறிவார்கள் என்பதால் அம்மரபில் வந்தவனை எல்லை நிர்ணயிப்பதில் பயன்படுத்தி உள்ளனர்.

**சங்கரஸ்ய ஸுதேநேதம் பக்தேந முரவித்விஷ :**
**நாராயணேந கவிநா சாஸநம் க்ருதிநா க்ருதம் (136)**

சங்கரனின் மகனும் முராரியான விஷ்ணுவின் பக்தனும் பண்டிதனுமான நாராயணன் என்னும் கவிஞரால் இச்சாசனம் செய்யப்பட்டது.

பிரசஸ்தியை எழுதியவர் நாராயணன் என்ற கவிஞர் ஆவார் என்பது கருத்தாகும்.

**த்ரைலோக்யாண்டா திரிதி (க்த) ஸ்வ குணமணி கணோ விக்ரம ஸ்ரீ விலாஸா**

**பர்ய்யாப்தாரி க்ஷிதீசஸ் ஸகலகுணமணி ச்ரேணி ஜந்மாம்பு ராசி :**
**ப்ரஜ்ஞா பர்ய்யாப்த சாஸ்த்ரஸ்ஸமதிக தநத: ப்ரார்த்தி தார்த்தி ப்ரபஞ்சோ**
**ஜீயாத் ராஜேந்த்ர சோளஸ் ஸகல வஸுமதீம் இந்திரா ஜந்ம பூமி: (137)**

ஸ்ரீதேவியின் பிறப்பிடமான இராஜேந்திர சோழ மன்னன் எல்லா உலகையும் வெல்லட்டும். அவன் மூவுலகங்களையும் அவற்றின் அண்டங்களையும் மீறி விளங்கும் தன் குணங்கள் என்னும் மணிகளின் தொகுதி உடையவன். நற்குணங்களாகிய மணிகள் தோன்றும் கடலானவன். பகைவர்க்குச் சமமான பராக்கிரமும் செல்வமும் உடையவன். சாஸ்திரங்களை அறிவதற்கேற்ற அறிவுடையவன். குபேரனை விஞ்சியவனும் இரப்போர் குழுவிற்குப் புரவலன் ஆனவனும் இந்த இராசேந்திர சோழன் ஆவான்.

முதலாம் இராசேந்திரசோழனின் சிறப்புகளைக் கூறி அவன் எல்லா உலகையும் வென்று புகழ் பெறட்டும் என்று கவிஞர் கூறுகிறார். குணக்கடலாகவும் செல்வமுடையவனாகவும் புரவலனாகவும் இராசேந்திர சோழ மன்னன் விளங்கினான் என்கிறார்.

**ஹோ வ்யாந் வவாய திலகா காஞ்சிபுர ஸ முத்பவா (முத்ரவா)**
**ப்ரசஸ்தி மேநாமலிகத்(ந்) ச துத்நாமே சித்ர காரிண (த்வார மேசித்ர காரிண):**
**யௌ சத ஸ்யாநுஜா வாஸ்தாம் ரங்க தாமோதராஹ்வயௌ**
**அக்ருஷ்ணசரித: க்ருஷ்ணஸ் ஸம்பவோபி மஹாபதி:**

**ஆராவ மூர்த புத்ரச்ச விக்யாத புருஷோத்தம:**
**புருஷோத்தம பாதாம்புஜந்ம த்வந்த்வமதுவ்ருத (த்வத்)**
**அமிபிருச்சசா (வ)ச்சில்பகோவிதை ருதார காஞ்சிபுர லப்தி ஜந்மபி:**
**ஸுதிபிஹோவிகுல ஜந்மஸாலிபி ஸ்ததேநதவ்ய கரமலேகிஸாஸந(ம்)**

> காஞ்சிபுரத்தைச் சேர்ந்த ஓவியக் குடியில் பிறந்த நான்கு சிற்பிகள் பிரசஸ்தியை ஏடுகளில் பொறித்துள்ளார்கள். உயர் சிந்தனையுடைய ஆராவமுர்தனும் அவனுடைய இரு தம்பியர்களான அரங்கன், தாமோதரன் மற்றும் மகன் புருஷோத்தமனும் அந்நால்வர் ஆவார்கள். புருஷோத்தமனாகிய விஷ்ணுவின் பாத தாமரையை மொய்க்கும் வண்டாகப் புருஷோத்தம சிற்பி விளங்கினான். சிற்ப சாஸ்திரத்தில் அடிநுனி அறிந்த இவர்கள் சிறந்த கல்விமான்களும் ஆவார்கள்.

வடமொழியில் கூடிய சுலோகங்களைப் பாடிய நாராயணனை வடமொழிப் பகுதியில் காண்கிறோம். ஆயின் செப்பேடுகளில் வாசகங்களைப் பொறித்த சிற்பியர் நால்வர் பெயர்கள் தமிழ்ப் பகுதியில் வந்தாலும் வடமொழிக் கிரந்தத்தில் இரு சுலோகங்களாக உள்ளன. ஆராவமுர்தன் என்ற சொல் தமிழ் கிரந்தம் கலந்த நடையில் எழுதப்பட்டுள்ளது. புருஷோத்தமன் என்ற சிற்பியைப் புருஷோத்தமனாகிய விஷ்ணுவுடன் தொடர்புபடுத்துவது நயமாக உள்ளது. உயர் சிந்தனை கொண்ட ஆராவமுர்தன் கிருஷ்ண மரபில் பிறந்தாலும் களங்கமற்றவராக இருந்தார். ஆனைமங்கலச் செப்பேட்டில் அரங்கன் தாமோதரனுடைய அண்ணன் வாசுதேவன் கூறப்பட்டுள்ளான். இவனுடைய மகனாகக் கிருஷ்ணன் இருந்ததை அச்செப்பேட்டில் காண்கிறோம். இச்செப்பேட்டில் நால்வர் கூறப்படினும் இரு குடும்பம் என்று கூறலாம். சிற்பி அல்லது ஸ்தபதியின் சிறப்புகளை அறிய இந்த நூலாசிரியரின் தமிழ்நாட்டுச் செப்பேடுகள் (மெய்யப்பன் பதிப்பகம் – 2003) என்ற நூலைக் காணவும்.

# 3. திருவாலங்காட்டுச் செப்பேடுகள் - தமிழ்ப் பகுதியின் மூலம்

---

**இராசேந்திர சோழன் காலத்திற்குப்பின்**

**புதிதாகச் சேர்த்த பகுதி ஏடு 10 - முதல்பக்கம்**

(வரிகள் 272 முதல் 277 வரை)

கோனேரி இந்மை கொண்டான் முடிகொண்ட ே
சாழபுரத்து சனி மண்டபத்து நமக்கு யாண்டு ஆ
றாவது நாள் நூற்றிருபதினால் இருக்க ஐயங்கொண்ட
சோழமண்டலத்து மணவிற்கோட்டத்துப் பழைய
னூர் நாட்டுப் [1] பழையநூர் உடையார் திருவாலங்காடு
உடையார் கோயிலில் அம்மை [2] னாச்சியாற்கு தேவத

<u>பத்தாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்</u>

(வரிகள் 278 முதல் 292 வரை)

ஈனம் [3] இடவேணுமெந்று மஹாதேவபிடாரந்
நமக்கு சொந்னமையில் ஈக்காட்டுக் கோட்டத்து
க் கீழ்க்கற்றியூர் நாட்டு [4] அம்மைசேரி நன்செ பு
ன்செ நத்தம் உட்பட நிலம் [5] பதிநாலரையும் சேட்டம
ங்கலம் நத்தமும் ஆற்றுப்படுகை புன்செ
உட்பட்ட நிலம் [6] பதிநொன்றும் ஆக நிலம் இருபத்தைஞ்ச
ரை வேலியும் அம்மை நாச்சியார்க்கு இந்நாள்
முதல் [7] முந்புடையாரையும் பழம்பேரையு
ம் தவிர்த்து [8] திருநாமக்காணி இறையிலி தேவத
ானமாக இட்டோம் இப்படிக்கு வரியிலுமிட்டுச்
செம்பிலும் இட்டு சிலாலேகையும் பண்ணிக்
கொள்ளச் [9] சொந்நோம் சொல்ல நம் ஓலை எழு
தும் உய்யக்கொண்டார் வளநாட்டு திருவழு
ந்தூர் நாட்டு [10] துளாருடையாந் கற்றளியான
உத்தமசோழத்தமிழதரைய[11] [ன்] எழுத்து

---

1. பழையனூர் என்பதே சரியாகும். 2. நாச்சியாற்கு என்க. 3. இடவேணுமென்று மகாதேவபிடாரன் நமக்குச் சொன்னமையில் என்க. 4. அம்மைச் சேரி நன்செய் புன்செய் என்க. 5. பதினாலரையும் என்க. 6. பதினொன்றும் என்க. 7.முன்புடையாரையும் என்க. 8. அத்துச் சாரியை இன்றி வந்துள்ளது. 9. சொன்னோம் என்க. 10. துளாருடையான் என்க. 11. ன் விடுபட்டுள்ளது.

## இராசேந்திரன் காலம் (பதினொன்றாம் ஏட்டின் முதல் பக்கம்)

(வரிகள் 293 முதல் 302 வரை)

ஸ்வஸ்திஸ்ரீ[1]கோநேர் இன்மை கொண்டான் ஜயங்கொண்டசோழமண்டல
த்து மேல்மலைப் பழையனூர்[2] னாட்டு நாட்டார்க்கும் ப்ரஹ்ம
தேயக்கிழவர்க்கும் தேவதானப் பள்ளிச்சந்தக் கணிமுற்
றூட்டு வெட்டிப்பேற்று[ப்] பழவறச்சாலா போகமுள்ளிட்
ட ஊர்களிலார்க்கும் நகரங்களிலார்க்கும் நமக்கு யா
ண்டு ஆறாவது நாள் எண்பத்தெட்டினால் நா(ம்) முடிகெ
காண்ட சோழபுரத்து நம் வீட்டினுள்ளால்க்[3]கருமாளிகை ம
துராந்தகதேவனில் தெற்கில் மறைவிடத்து இருந்து நடு
வில்மலைப் பெருமூர் [4]னாட்டுச் சிங்களாந்தகச் சருப்பேதிம
ங்கலத்துச் சவையார்க்கு ப்ரஹ்மதேயமாய் வருகின்ற மே

### பதினொன்றாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 303 முதல் 314 வரை)

ல்மலை பழையனூர் நாட்டுப் பழையனூரின் தலைமாறு இச்சிங்க
ளாந்தகச் சருப்பேதிமங்கலத்துச் சவையார்க்கு ஊர் குடுப்பதா
க இப்பழையனூர் யாண்டு ஆறாவது முதல் வேறு முதலாய்
இவ்வூரால் சிங்களாந்தகச் சருப்பேதிமங்கலத்தோடுங் கூ
ட இறைகட்டின பொன் ஐஞ்ஞூற்றுத் தொண்ணூற்றெண் க
ழஞ்சே குன்றியும் இச்சிங்களாந்தகச் சருப்பேதி
மங்கலத்தில் யாண்டு ஆறாவது முதல் சுருக்கி இவ்வூர்
ப்ரஹ்மதேயமாய் வருகின்றபடி யாண்டு ஆறாவது முதல் தவிர்
ந்து வெள்ளான் வகையாய் ப்ரஹ்மதேயம் இறங்கி வெள்ளான்
வகையால் ஊர்கள் இறை கட்டும்படி இவ்வூர் இறை கட்டாதே [5]தவி
ந்து இவ்வூர் முன் இறுத்த படியும் பள்ளியும் உட்பட நெல்லு
மூவாயிரத்திருநூற்றெண்பத்தெண் கலனே எழுகுறுணி

### பனிரண்டாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 315 முதல் 326 வரை)

ஐஞ்ஞாழியும் பொன் நூற்றுத் தொண்ணூற்று முக்கழஞ்சேய் ம
ஞ்சாடியும் ஒருமாவும் யாண்டு ஆறாவது முதல் ஆட்டாண்டுதோறும்
நின்றிறையாய் இறுப்பதாக இறைகட்டி வரியிலிட்டுக் கொள்
கவென்று நாம் சொல்ல நம் ஓலை எழுதும் உய்யக்கொண்டார் வ
ளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் துளாருடையான் நாராயணன் கற்ற
ளியான உத்தமசோழத் தமிழதரையன் எழுத்தினாலும் நம்

---

1. கோநேர் இன்மை இங்கு வருவது சரியான பாடம். வரி 272 இல் கோநேரி இன்மை என வந்துள்ளது பிழையாகும். 2. நாட்டு என்க. 3. க் வருதல் தவறு. 4. நா வரவேண்டும். 5. தவிர்ந்து என்க.

ஓலைநாயகன் நித்தவிநோத வளநாட்டுப் பாம்புணிக் கூ
ற்றத்து அரைசூருடையான் ஈராயிரவன் பல்லவயனான உத்தம
சோழ பல்லவரையனும் உய்யக்கொண்டார் வளநாட்டு வெ
ண்ணாட்டுக்கேரளாந்தகச்சருப்பேதிமங்கலத்துக்ருஷ்ணன்இராமனான
ராஜேந்த்ரசோழ ப்ரஹ்ம மாராயனும் இன்னாட்டு அம்பர் நாட்டு குறு
ம்பில் கிழான் அரையன் சீகண்டனான மீனவன் மூவேந்த

## பனிரண்டாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 327 முதல் 338 வரை)

வேளானும் இராஜேந்த்ரசிங்க வளநாட்டுக் குறுக்கை நாட்டுக் கடலங்குடி த்வேதைகோம
புறத்துத் தாமோதிரபட்டனும் ஒப்பிட்டுப் புக்க நந்தீட்டினபடியே வரியிலிட்டுக் கொ
ள்கவென்று நங்கருமம்மாராயும் உய்யக்கொண்டார் வளநாட்டுப்பேராவூர் நாட்டு
க் காஞ்சிவாயிலுடையான் உதையதிவாகரன் தில்லையாளியான இராஜராஜ மூ
வேந்த வேளானும் இந்நாட்டுத் தேவன்குடையான் மாணிக்கன் எடுத்தபாத
மான சோழ மூவேந்த வேளானும் நடுவிருக்கும் ராஜேந்த்ர ஸிம்ஹ வ
ளநாட்டுத் தனியூர் ஸ்ரீவீரநாராயண சருப்பேதி மங்கலத்து கந்தாடைத்
திருவெண்காட பட்டனும் உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்த
கச் சருப்பேதிமங்கலத்து நராக்கண்மாராயன் ஜநனாதநான இராஜேந்த்ர சோழ
ப்ரஹ்மாதிராஜனும் சொல்ல இவர்கள் சொன்னபடியே நங்கருமமாராயும் உ
ய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு வயலூர் கிழவன் தத்தன் சேந்தனான ராஜேந்த்ர
சோழ அணுக்கப் பல்லவரையனும் அருமொழிதேவ வளநாட்டு இங்க

## பதிமூன்றாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 339 முதல் 350 வரை)

ணாட்டு [1]ஊருடையான் வேளான் கூத்தனான இருமடிசோழ விழுப்பரையனும் க்ஷத்ரி

---

1. ஊர்ருடையான் என்று சாசனத்தில் உள்ளது. ஊருடையான் என்றிருக்கவேண்டும்.

ய சிகாமணி வளநாட்டுத் திருவாரூர்க் கூற்றத்துத்
தீயன்குடையான் காடன் [1]கருணாக
ரநான அபிமானமேரு மூவேந்தவேளானும் சொல்லப் புரவுவரி
திணைக்கள
ம் சயங்கொண்ட சோழமண்டலத்து எயிற்கோட்டத்து எயினாட்டு
நகரம் க
ச்சிப்பேட்டு வெட்சிகிழான் சோலைகுமரனும் அருமொழிதேவ
வளநாட்டு
ஆர்வலக் கூற்றத்துக் கச்சிரமுடையான் மூ[ர்]த்தி
வீதிவிடங்கனும் வ
ரிப்பொத்தகம் அருமொழிதேவ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்து
க் கச்சிரமுடையான் பகவன் அங்கியும் முகவெட்டி ஆலங்குடையான்
தெற்றி வெ
வண்காடனும் வரிப்பொத்தகக் கணக்குத் துகவூருடையான்
தாமோதிரன் சீரா
ளனும் கருமாணிக்கன் சற்பனும் வரியிலீடு இராஜராஜ வளநாட்டு
காந்தான
நாட்டுக்கோனூருடையான் சூலபாணி அருமொழியும் பட்டோலை
க்ஷத்ரிய சிகாம
ணி வளநாட்டு மருகல்நாட்டு எயினூருடையான் வாமன
நாராயணனும் வல்ல

<u>பதிமூன்றாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்</u>

(வரிகள் 351 முதல் 362 வரை)

ங்கிழான் மானன் கம்பனும் உலக்கையூருடையான் ஆச்சன் அங்
காடியும் கீழ்முகவெட்டி தேவடி கமலனும் ஐய்யாறன் தே
தவர்கண்டனும் கூத்தாடி நானூற்றுவனும் இருந்து நமக்கு யா
ண்டு ஆறாவது நாள் தொண்ணூறினால் நடுவின்மலைப் பெருமூர்
நாட்டுச் சிங்களாந்தகச் சருப்பேதி மங்கலத்துச் சவையார்க்கு
ப்ரஹ்மதேயமாய் வருகின்றபடி யாண்டு ஆறாவது முதல்
தவிர்ந்து வெள்ளான் வகையில் முதலான மேல்மலைப்
பழையனூர் நாட்டுப் பழைய(ய)னூர் இது நாம் அற்றை நாளாலே முடி
கொண்ட சோழபுரத்து நம் வீட்டினுள்ளால் கருமாளிகை மதுராந்த
க தேவனில்த் [2] தெற்கில் மறைவிடத்திருந்து ஜயங்கொண்ட சோ
ழ மண்டலத்து மேல்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூர்
யாண்டு ஆறாவது முதல் வெள்ளான் வகையில் முதல் தவிர்ந்து

1. கருணாகரனான என்றிருக்கவேண்டும். 2 த் தவறாக வந்துள்ளது

## பதினான்காம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 363 முதல் 374 வரை)

இவ்வூர் பள்ளி உட்பட இறைகட்டின நெல்லு மூவாயிரத் திருநூற்று
எண்பத்தெண் [1]கலநேய் எழுகுறுணி ஐஞ்ஞாழியும் பொ
ன் நூற்றுத் தொண்ணூற்று முக்கழஞ்சே மஞ்சாடியும் ஒருமா
வும் இப்பழையனூர்த் திருவாலங்காடுடைய மாதேவர்க்கு வே
ண்டும் நிலந்தங்களுக்கு யாண்டு ஆறாவது முதல் ஆட்டாண்டு
தோ
றும் நின்றிறையாய் இறுப்பதாக தேவதானமாக வரி
யிலிட்டுக் குடுக்கவென்று நாம் சொல்ல நம் ஓலை எ
ழுதும் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருவழுந்தூர் நாட்டுத் துளா
ருடையான் நாராயணன் கற்றளியான உத்தமசோழத் தமிழதரை
யன் எழுத்தினாலும் நம் ஓலைநாயகன் நித்தவிநோத வளநாட்டு
ப் பாம்புணிக் கூற்றத்து அரைசூருடையான் ஈராயிரவன் பல்லவ
யனான உத்தமசோழப் பல்லவரையனும் உய்யக்கொண்டார்

## பதினான்காம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 375 முதல் 386 வரை)

வளநாட்டு வெண்ணாட்டுக் கேரளாந்தகச் சருப்பேதிமங்க[ல]த்து
க்ருஷ்ணன்
இராமனான ராஜேந்த்ரசோழ ப்ரஹ்மமாராயனும் இந்நாட்டு அம்ப
ர் நாட்டுக் குறும்பில்கிழான் அரையன் சீகண்டனான மீனவன் மூ
வேந்தவேளானும் இராஜேந்த்ரசிங்க வளநாட்டுக் குறுக்கை நா
ட்டுக் கடலங்குடி த்வேதை கோமபுறத்துத் தாமோதிர பட்டனும் ஒ
ப்பிட்டுப் புக்க நம் தீட்டினபடியே வரியிலிட்டுக் கொள்
கவென்று நங் கருமமாராயும் உய்யக்கொண்டார் வளநாட்டு
ப் பேராவூர் நாட்டுக் காஞ்சிவாயிலுடையான் உதையதிவாகரன் தி
ல்லையாளியான ராஜராஜ மூவேந்த வேளானும் இந்நாட்டுத்
தேவன்குடை
யான் மாணிக்கன் எடுத்தபாதமான சோழமூவேந்த வேளானும்
நடுவிருக்கும் ராஜேந்த்ரசிங்க வளநாட்டுத் தனியூர்
ஸ்ரீவீரநாராயணச் சரு
ப்பேதி மங்கலத்துக் கந்தாடைத் திருவெண்காட பட்டனும் உய்

## பதினைந்தாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 387 முதல் 398 வரை)

யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு கேரளாந்தகச்
சருப்பேதிம

---

1. கலனே என்றிருக்கவேண்டும்

ங்கலத்து நராக்கண் மாராயன் [1]ஐநநாதனாந ராஜேந்த்ரசோழ ப்ரஹ்மாதி

ராயனும் சொல்ல இவர்கள் சொன்னபடியே நங் கருமமாராயும் உய்
யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு வயலூர் கிழவன் தத்தன் சே

ந்தனான ராஜேந்த்ர சோழ அணுக்கப் பல்லவரையனும் அருமொழி தே
தவ வளநாட்டு இங்கண்நாட்டு ஊரிகுடையான் வேளான் கூ
த்தனான இருமடிசோழ விழுப்பரையனும் க்ஷத்ரிய சிகாமணி
வளநாட்டு திருவாரூர் கூற்றத்துத் தீயன்குடையான் காடன் கருணாகரனான அ

பிமான மேரு மூவேந்த வேளானுஞ் சொல்லப் புரவுவரி திணைக்களம் சய

ங்கொண்ட சோழமண்டலத்து எயிற்கோட்டத்து எயினாட்டு நகரங் கச்சி

ப்பேட்டு வெட்சிகிழான் சோலைகுமரனும் அருமொழி தேவ வளநா
ட்டு ஆர்வலக் கூற்றத்துக் கச்சிரமுடையான் மூர்த்தி வீதிவிடங்கனும்

## பதினைந்தாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 399 முதல் 410 வரை)

வரிப்பொத்தகம் அருமொழி தேவ வளநாட்டு ஆர்வலக் கூற்றத்து
க் கச்சிரமுடையான் பகவனங்கியும் முகவெட்டி ஆலங்குடை
யான் தெற்றி வெண்காடனும் வரிப்பொத்தகக் கணக்குத் துகவூரு
டையான் தாமோதிரன் சீராளனும் கருமாணிக்கன் [2] சற்ப்பனும் வ
ரியிலீடு ராஜராஜ வளநாட்டுத் காந்தான நாட்டுக் கோனூருடையான்
சூலபாணி [3] அருமொழியும் பட்டோலை க்ஷத்ரிய சிகாம
ணி வளநாட்டு மருகல் நாட்டு எயினூருடை (யா)ன் வாமன நா
ராயணனும் வல்லங்கிழான் மானன் கம்பனும் உலக்கையூரு
டையான் ஆச்சனங்காடியும் கீழ்முகவெட்டி தேவடி கமலனும் அய்யா
றன் தேவர் கண்டனும் கூத்தாடி [4]னானூற்றுவனும் இருந்து நம
க்குயாண்டு ஆறாவது நாள் தொண்ணூறினால் யாண்டு ஆறாவது மு
தல் தேவதானமாக வரியிலிட்டுக் குடுத்த மேல்மலைப் பழைய

## பதினாறாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 411 முதல் 422 வரை)

னூர் நாட்டுப் பழையனூர் பிடி சூழ்ந்து [5]படாகை நடப்பிக்கக் கண்
காணி ஜயங்கொண்ட சோழமண்டலத்து நங் கரமமாராயும்

---

1. ஜனநாதனான என்க. 2. சற்பனும் என்க. 3. அருண்மொழி என்க.
4. நானூற்றுவனும் என்க. 5. பிடாகை என்க.

சோழ மண்டலத்து [1]அருமொழிதேவ வளநாட்டு வண்டாழை வே
வளூர்க் கூற்றத்துச் சிறறாமூருடையான் பெருமான் அம்பலத்தா
டியான உதயமாத்தாண்ட மூவேந்த வேளானையும் புரவுவரி திணை
க்களம் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துப் புலியூர்
க் கோட்டத்து மாங்காடு நாட்டு மழிசைகாட்டு மழிசை கி
ழான் மானன் அ(ரி)யேற்றையும் பட்டன் ஜயங்கொண்ட சோழ மண்
டலத்துத் [2]தநியூர் ராஜராஜச் சதுர்வ்வேதி மங்கலத்து சிறுநான
லூர்ச் சேந்தபிரான் பட்டனையும் பேர் த் தந்தோம் தாங்களும் இ
வர்களோடும் நின்று எல்லை தெரித்துக் காட்டிப் பிடி சூழ்ந்து
பிடாகை நடந்து கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்

## பதினாறாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 423 முதல் 434 வரை)

து [3]போத்தக வென்னும் வாசகத்தால் திருமன்னி வளர இருநிலம
டந்தையும் போர்ச்சயபாவையும் சீர்த்தனிச் செல்வியுந் த
ந் பெருந்தேவியராகி இன்புற நெடிதியலூழியுள் இடைதுறை
நாடுந் [4]துடர்வனவேலிப்படர்வனவாசியுஞ் சுள்ளிச் சூழமதிட்
கொள்ளிப்பாக்கையு நண்ணறகருமுரண் மண்ணைக் கடக்கமும்
பொரு

கடலீழத்தரைசர் [5]தமுடியும் ஆங்கவர் தேவிய ரோங்கெ
ழில் முடியும் முன்னவர் பக்கல் தென்னவர் வைத்த சுந்
தர முடியும் இந்திரனாரமும் தெண்டிரை யீழ மண்டல மூவது(ம்) எ
றிபடைக் கேரளன் முறைமையிற் சூடுங் குலதனமாகிய பலர் பு
கழ் முடியுஞ் செங்கதிர் மாலையுஞ் சங்கதிர் வேலைத் தொல்பெரு
ங்காவல் பல்பழந்தீவும் மாப்பொரு தண்டாற் கொண்ட கோப்பரகே
சரி வந்மரான ஸ்ரீ ராஜேந்த்ர சோழ தேவற்கு யாண்டு ஆறாவது
நாட்கீழ்

## பதினேழாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 435 முதல் 446 வரை)

நாட்டோமுக்குத் திருமுகம் வர நாட்டோமுந் திருமுகங்
கண்டெதிரெழு

ந்து சென்று தொழுது வாங்கித் தலைமேல் வைத்து பிடி சூழ்
ந்து படாகை நடந்த பழையன்னூர்க்குக் கீழ்பாற் கெ
ல்லை நடுவின்மலை பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச் சருப்பே
தி மங்கலத்துப் [6]படாகை பெருமூர் நாட்டு பெருமூர் மேலெ
ல்லையும் [7]மேற்ப்படியூர்ப் படாகை இன்நாட்டுக் கூள

1. அருண்மொழி என்க. 2. தனியூர் என்க. 3. போதுக வென்னும் என்க. 4. தொடர்வன என்க. 5. தம்முடியும் 6. பிடாகை 7. மேற்படியூர்ப் பிடாகை இந்நாட்டு என்க.

பாடித் தென்னெல்லையும் உற்றவிடத்துப் பழையனூர் வடகீழ் மூலையில் கடம்பொடு நின்ற திடலே துடங்கி இதனை இடத்திட்டு இப்பெருமூர் மேலெல்லை தானுள்ளவாறே [1]தெற்க்கு நோக்கிச் சென்று [2]மேற்ப்படியூர்ப் படாகை இன்நாட்டு நாரைபாடி வடமேலை மூலையில் நின்ற வன்னிமரமே யுற்று மேற்கின்னும் இதனை இடத்திட்டு நாரைபாடி மேலெல்லை

பதினேழாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 447 முதல் 458 வரை)

தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்று நாரைபாடி மேலெல்லையும் மேற்படியூர்ப் படாகை பழையனூர் நாட்டு மங்கலத்து வடகீழ் மூலையுமுற்றவிடத்துக் குழியின் மேல்கரை நின்ற உகாயேயுற்று மேற்கின்னும் இதனை இடத்திட்டு இம்மங்கலத்து வடவெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியும் சென்று இவ்வெல்லையில் பழையனூர்க்கும் பெருமூர்க்கும் மங்கலத்துக்கும் பாயும் குறுந்துறை என்னு மடுவேயுற்று வடக்கின்னும் இம்மடு மேல்நடைநீர் பாயப் பெறுவதாக இதனை வலத்திட்டு இம்மடுவின் கீழ்கரையே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் சென்று இம்மடுவின் கீழ்கரை நின்ற புற்றேயுற்று மேற்கின்னும் இதனை வலத்திட்டு இதன் கீழ்கரையே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று இதன் கீழ்கரை நின்ற கடம்பேய் உற்று மேற்கின்னும் இதனை வலத்திட்டுத் தெற்கு நோக்கியும் கிழக்கு நோ

பதினெட்டாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 459 முதல் 470 வரை)

க்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று இம்மடுவின் கீழ்கரை வேம்போடு நின்ற புற்றேயுற்று மேற்கின்னும் தெற்கின்னும் இதனை வலத்திட்டு இதன் [3]கீழ்கரையே கிழக்கு நோக்கியும் தெற்கு நோக்கியும் தென்மே

---

1. தெற்கு 2. மேற்படியூர்ப் பிடாகை இந்நாட்டு என்க. 3. கீழ்க்கரை என்க.

ற்கு நோக்கியும் சென்று இதன் [1]கீழ்கரை நின்ற பிராயே யுற்று தெ
ற்கின்னும் மேற்கின்னும் இப்பிராயை வலத்திட்டு இதன்
[1]கீழ்கரைே
ய இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் தெற்கு
நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியு
ம் கிழக்கு நோக்கியும் சென்று மங்கலத்து மேலெல்லையில் உகா
யோடு நின்ற புற்றே யுற்றுத் தெற்கின்னும் மேற்கின்னும் இத
னை வலத்திட்டு இம்மடுவின் [1]கீழ்கரையே இவ்வெல்லை தானு
ள்ளவாறே தெற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியும் சென்று
மங்கலத்துத் தென்மேலை மூலையும் [2]மேற்படியூர்ப் படாகை ம

## பதினெட்டாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 471 முதல் 482 வரை)

ணையில் நாட்டு மணையில் வடவெல்லையுங் கூடின விடமே யுற்
று மேற்கின்னும் இதன் [1]கீழ்கரையே இம்மணையில் வடவெ
ல்லை தானுள்ளவாறே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோ
க்கியும் தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியுஞ் சென்
று இம்மடுவின் கீழ்கரை உகாயோடு நின்ற புற்றேயுற்று மே
ற்கின்னும் தென்பாற்கெல்லை இப்புற்றை வலத்திட்
டு மணையில் வடவெல்லை தானுள்ளவாறே தெற்கு
நோக்கியும் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று மணையில் நின்
றும் பழையனூர்க்குப் போன வழியே யுற்று மேற்கின்னும்
வடக்கின்னும் இவ்வழியை யூடறுத்து இவ்வெல்லை தானு
ள்ளவாறே தென்மேற்கு நோக்கியும் தெற்கு நோக்கியுஞ் சென்
று இவ்வெல்லையில் நின்ற வெளுங்குமரமே யுற்று வடக்கின்னு

## பத்தொன்பதாம் எட்டின் முதல் பக்கம்

(வரிகள் 483 முதல் 494 வரை)

ம் மேற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை
தானுள்ளவாறே
தென்மேற்கு நோக்கிச் சென்று மணையில் வடமேல்மூலையு
ம் [2]மேற்படியூர்ப் படாகை மணையில் நாட்டு மண்ணாலைய மங்க
லத்து வடகீழை மூலையும் கூடின விடமே யுற்று வடக்கின்னும் இம்ம
ண்ணாலைய மங்கலத்து வடவெல்லை தானுள்ளவாறே மேற்கு
நோக்கியும் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று இவ்வெ
வல்லையில் நின்ற விளாவே யுற்று வடக்கின்னும் இத
னை யிடத்திட்டு இவ்வல்லையில்(த்) திருப்பாசூர் நின்று மேற்பா

---

1. கீழ்க்கரையே என்க. 2. மேற்படியூர்ப் பிடாகை மணவில் நாட்டு மணவில் என்க.

டியான ராஜாச்ரயபுரத்துக்குப் போன பெருவழியே யுற்று இவ் வெல்லை தானுள்ளவாறே இப்பெருவழியே மேற்கு நோக்கி யும் தென்மேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியுஞ் சென்று இ வ்வெல்லையில் கடம்பங்குழியென்னும் குழியே யுற்று வ

**பத்தொன்பதாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்**

(வரிகள் 495 முதல் 506 வரை)

டக்கின்னும் இக்குழியை வலத்திட்டு இவ்வெல்லை தானு ள்ளவாறே தென்மேற்கு நோக்கியும் மேற்கு நோக்கியு ம் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் தொழுக்கட்டையோடு நின்ற புற்றே யுற்று வடக்கின்னு ம் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே இப் பெருவழியே தென்மேற்கு நோக் கிச் சென்று மண்ணாலய மங்கலத்து வடமேலை மூலையும் மேற்படியூர்ப் படாகை பழையனூ ர்நாட்டுத் தொழுகூர் வடகீழை மூலையும் கூடின விடத்து நின்ற ஆத்தி மரமே யுற்று வடக்கின்னும் இதனை இடத் திட்டுத் தொழுகூர் வடவெல்லை தானுள்ளவாறே இப்பெ ருவழியே தென்மேற்கு நோக்கிச் சென்று இவ்வெல்

**இருபதாம் ஏட்டின் முதல் பக்கம்**

(வரிகள் 507 முதல் 518 வரை)

லையில் நின்ற கருவேலே யுற்று வடக்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே மேற்கு நோ க்கிச் சென்று பழையனூர் ஜநநாதப் புத்தேரிப் புற வாய்க்கரைய் வெள்ளம் போகாமே யட்டின வெள்ளக் கான்கரையே யுற்று வடக்கின்னும் இக்கரையை ஊட றுத்தேறி இவ்வெல்லை தானுள்ளவாறே இ ப்பெருவழியே மேற்கு நோக்கியும் தென் மே மற்கு நோக்கியும் சென்று இவ்வெல்லையில் நின்ற வேம்பே யுற்று வடக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே இப்பெருவழியே மே மற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் திடலே யு ற்று வடக்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தா

**இருபதாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்**

(வரிகள் 519 முதல் 530 வரை)

ன் உள்ளவாறே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று தொழுகூர் வடவெல்லையில் நின்ற திருவாலங்காடெ னன்னும் வேம்பே யுற்று வடக்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே இப்பெருவழியே தென்மேற்கு நோக்

கிச் சென்று இவ்வெல்லையில் வட்டக் குழியே யுற்று வடக்கின்னு
ம் இக்குழியை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவா
றே மேற்கு நோக்கியும் தென்மேற்கு நோக்கியுஞ் சென்
று தொழுகூர் வடமேலை மூலையும் மேல்மலை மேலூர் நாட்டு நித்
த விநோதச் சதுர்வ்வேதி மங்கலத்துப் படாகைக் க[ா]ட்டுக்கு முண்
டூர்க் கீழெல்லையுங் கூடினவிடத்து நின்ற வேம்பே யுற்று வட
க்கின்னும் மேல்பாற்கெல்லை காட்டுக்குமுண்டூர்க் கீழெல்
லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையி

**இருபத்தோராம் ஏட்டின் முதல் பக்கம்**

(வரிகள் 531 முதல் 543 வரை)

ல் உகாயோடு நின்ற புற்றே யுற்றுக் கிழக்கின்னும் இதனை வலத்திட்டு
இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று காட்டு
க்குமுண்டூர் நின்றும் பழையனூர் ஏரிக்குப் பாய்ந்த குறுந்துறை
என்னும் வாய்க்காலே யுற்று கிழக்கின்னும் இக்காலை ஊடறுத்து
இவ்வெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் வடக்கு
நோக்கியுஞ் சென்று காட்டுக்குமுண்டூர் வடகீழை மூலை
யும் நடுவில்மலை பெருமூர் நாட்டுச் சிங்களாந்தக
ச்சதுர்வ்வேதி மங்கலத்துப் படாகை பழையனூர் நாட்டு
க் கீரைநல்லூர்த் தென்மேலை மூலையும் உற்ற விடத்துக் கற்குழி
என்னுங் குழியேயுற்றுக் கிழக்கின்னும் இக்குழியை வலத்தி
ட்டு இக் கீரைநல்லூர்த் தென்னெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு
நோக்கியுங் கிழக்கு நோக்கியுஞ் சென்று கீரைநல்லூர்த் தென்னெ
ல்லையில் இரட்டைக் கயல் பொறித்துக் கிடந்த கற்பாறையே யுற்று

**இருபத்தோராம் ஏட்டின் இரண்டாம் பக்கம்**

(வரிகள் 544 முதல் 552 வரை)

க் கிழக்கின்னுந் தெற்கின்னும் [1]இதினையிடத்து இவ்வெல்லை தானு
ள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று கீ
ரைநல்லூர்த் தென்கீழை மூலையில் எல்லைக் கல்லின் மேலருகு நி
ன்ற உகாயே யுற்றுத் தெற்கின்னும் கிழக்கின்னும் இதனை யிட
த்திட்டு இக்கீரைநல்லூர்க் கீழெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோ
க்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று கீரைநல்லூர் வ
டகீழை மூலையும் மேற்படியூர்ப் படாகை சக்கரநல்லூர்த் தெ
தன்கீழை மூலையும் கூடின விடமே யுற்றுத் தெற்கின்னு
ம் கிழக்கின்னும் இச்சக்கர நல்லூர்க் கீழெல்லை தானுள்ளவாறே

---

1. இதனை யிடத்திட்டு என்றிருக்கவேண்டும்.

ற வடகிழக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் நின்ற எல்லை
க்கல்லே யுற்றுக் கிழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்
லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லை
யில் உகாயோடு நின்ற குழியே யுற்றுக் கிழக்கின்னும் இக்கு

**இருபத்திரண்டாம் ஏட்டின் முதல் பக்கம்**

(வரிகள் 557 முதல் 569 வரை)

ழியை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும்
வடக்கு நோக்கியும் வடமேற்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லை
யில் ஆத்தியோட்டைக் குழியே யுற்றுக் கிழக்கின்னும் இக்குழியை
ய இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கி
ச் சென்று இவ்வெல்லையில் வெள்ளைக்குழியென்னுங் குழி
யே யுற்றுக் கிழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெ
வல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கியும் வடக்கு
நோக்கியும் வடமேற்கு நோக்கியும் சென்று இவ்வெல்
லையில் வேம்போடு நின்ற கற்பாறையே யுற்றுக் கிழக்கின்னும்
இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடமேற்கு
நோக்கிச் சென்று சக்கரநல்லூர் வடவெல்லையும் மேற்படியூ
ர்ப் படாகை காரைப்பாக்கத்துத் தென்கீழ் மூலையும் உற்றவிட
த்து நின்ற உசிலையென்னும் மரமேயுற்றுக் கிழக்கின்னும்

**இருபத்திரண்டாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்**

(வரிகள் 570 முதல் 582 வரை)

இதனை வலத்திட்டு இக்காரைப்பாக்கத்துக் கீழெல்லை தானுள்ள
வாறே வடமேற்கு நோக்கியும் வடக்கு நோக்கியுஞ் சென்று இவ்
வெல்லையில் நின்ற வேம்பே யுற்றுக் கிழக்கின்னும் இதனை வ
லத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வட
மேற்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் நின்ற புளியே யுற்று
க் கிழக்கின்னும் இதனை வலத்திட்டுக் காரைப்பாக்கத்து
வடவெல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கிஞ் சென்று
காரைப்பாக்கத்து வடமேல் மூலையும் மேற்படியூர்ப் படாகை
பழையனூர் நாட்டு மிதுகூர் வடகீழை மூலையுமுற்ற விடத்து நின்ற
வெளுங்குமரமே யுற்று வடக்கின்னும் இதனை இடத்திட்டு இம்மி
துகூர் வடவெல்லை தானுள்ளவாறே வடமேற்கு நோக்கிச் சென்று
இவ்வெல்லையில் நின்ற வெளுங்கு மரமே யுற்று வடக்கின்னும் இ
தனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே மேற்கு நோக்கியு

**இருபத்து மூன்றாம் ஏட்டின் முதல் பக்கம்**

(வரிகள் 583 முதல் 595 வரை)

ந் தென்மேற்கு நோக்கியுஞ் சென்று மிதுகூர் வடவெல்லை மூலையும்

நித்த

விநோதச் சதுர்வ்வேதி மங்கலத்துப் பிடாகை முல்லைவாயில்
வடகீழை

மூலையும் மேற்படியூர்ப் படாகை ஆனைப்பாக்கத்துத் தென்கீழை மூ லையுமுற்றவிடத்து இரட்டைக்கயல் பொறித்து நின்ற எல்லைக்கல் லே யுற்று வடக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வானைப்பாக்கத்து க் கீழெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் நின்ற வன்மரையென்னு மரமே யு ற்றுக் கிழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தா னுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று இவ் வெல்லையில் நின்ற வெள்வேலே யுற்றுக் கிழக்கின்னும் இதனை வல த்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக் கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையிற் செம்மணிச்சையோடு நி ன்று புற்றே யுற்றுக் கிழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை

## இருபத்து மூன்றாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 596 முதல் 608 வரை)

தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் நின்ற புற்றேயுற்றுக் கிழக்கின்னும் இதனை வ லத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் நின்ற கருங்காலி மரமே யுற்றுக் கிழக்கின்னும்
வடபா

ற்கெல்லை இக்கருங்காலி மரத்தை யிடத்திட்டு இவ்வெல்லை
தானுள்ள

வாறே கிழக்கு நோக்கிச் சென்று ஆனைப்பாக்கத்து வடகீை ழ மூலையும் நடுவில்மலைப் பெருமூர் நாட்டுச் சிங்களா ந்தகச் சதுர்வ்வேதி மங்கலத்துப் படாகை பெருமூர் நாட்டு உப் பூர்த் தென்மேலை மூலையு [மு]ற்ற விடத்து இலந்தை மரத்தோடு நின்ற புற்றே யுற்றுத் தெற்கின்னும் இப்புற்றை வலத்திட்டு உப்பூர்த் தென்னெ ல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு நோக்கிச் சென்று
இவ்வெல்லையி

ல் நின்ற வெளுங்குமரமே யுற்றுத் தென்கின்னும் இதனை
யிடத்திட்டு இவ்

வெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியும் வடக்கு
நோக்கியுஞ்

## இருபத்து நான்காம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 609 முதல் 621 வரை)

சென்று இவ்வெல்லையில் நின்ற வன்கணையென்னு மரமே யுற்றுத்
தெற்கின்

னுங் கிழக்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை

தானுள்ளவாறே கிழ

க்கு நோக்கியுந் தென்கிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் நின்ற புளியே யுற்றுத் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல் லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையிற் கா ரையோடு நின்ற புற்றே யுற்று மேற்கின்னும் இதனை வ லத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியு ந் தென்கிழக்கு நோக்கியுஞ் சென்று உப்பூர் தென்னெல்லை யும் மேற்படியூர்ப் படாகை [1]கங்கனேரிப்பட்டில் வடமேலை மூலையுமு ற்ற விடத்து நின்ற செம்மணிச்சையென்னு மரமேயுற்று மேற்கின் னுந் தெற்கின்னும் இதனை யிடத்திட்டுக் கங்கனேரிப்பட்டில் மேலெ ல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையி ல் நின்ற புற்றே யுற்று மேற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்

**இருபத்து நான்காம் ஏட்டின் இரண்டாம் பக்கம்**

(வரிகள் 622 முதல் 634 வரை)

லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியுந் தென்கிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் நின்ற வெளுங்கு மரமே யுற்று மேற்கி ன்னுந் தெற்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்ள வாறே கிழக்கு நோக்கியுந் தென்கிழக்கு நோக்கியுஞ் சென்று இ வ்வெல்லையில் உகாயோடு நின்ற கற்பாறையே யுற்றுத் தெற் கின்னும் இதனையிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ள வாறே தெற்கு நோக்கியுந் தென்கிழக்கு நோக்கியுஞ் செ ன்று இவ்வெல்லையிற் கற்பாறையோடு நின்ற பு ளியே யுற்று மேற்கின்னுந் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியுந் தென்கிழக் கு நோக்கியுஞ் சென்று கங்கனேரிப்பட்டின் தென்னெல்லையி ற் செஞ்சியார் தெற்றி யென்னுந் தெற்றியே யுற்று மேற்கின்னு ந் தெற்கின்னும் கங்கனேரிப்பட்டின் தென்னெல்லைதானு

**இருபத்து ஐந்தாம் ஏட்டின் முதல் பக்கம்**

(வரிகள் 635 முதல் 647 வரை)

ள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்று கங்கனேரிப்பட்டின் தண்ணீரே ரியே யுற்றுத் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானு

---

1. கங்கனேரிப்பட்டின் என்பது சரியாகும்.

ள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று இ
வெல்லையில் நின்ற விளாவே யுற்றுத் தெற்கின்னும் இதனையிட
த்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியுந் தென்கிழக்
கு நோக்கியுஞ் சென்று கங்கனேரிப்பட்டிற் றென்கீழைமூலை
யும் மேற்படியூர்ப் படாகை பழையனூர் நாட்டுப் பொளிபா
க்கத்து வடமேலைமூலையு முற்றவிடத்து நின்ற ஆத்திமர
மே யுற்றுத் தெற்கின்னும் இதனை வலத்திட்டு இப்பொளிபாக்கத்
து மேலெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கிச் சென்று கங்க
னேரி யென்னும் ஏரியின் கரையே யுற்றுத் தெற்கின்னும் இவ்வே
ரி மேனடை நீர்பாயப் பெறுவதாக இக்கரையை ஊடறுத்தேறி தெ
ன்கிழக்கு நோக்கிச் சென்று கங்கனேரித் தூம்பினின்றும் பழைய

## இருபத்து ஐந்தாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 648 முதல் 660 வரை)

னூர்க்கும் பொளிப்பாக்கத்துக்குங் கயற்பாக்கத்துக்கும் பாயும் பழவா
ய்க்காலே யுற்றுத் தெற்கின்னும் இக்கால் மேனடை நீர்பாயப் பெ
றுவதாக இதனை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாறே தென்கி
ழக்கு நோக்கிச் சென்று கங்கனேரி நின்றும் பாய்ந்த [1]அமன்கவாய்க்
காலே யுற்றுத் தெற்கின்னும் இதனை யூடறுத்துப் பொளிப்பாக்கத்
து மேலெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கியுங் கி
ழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையிற் புல்லா
ந்தியோடு நின்ற புற்றே யுற்று மேற்கின்னுந் தெற்கின்
னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே கிழக்கு ே
நாக்கிச் சென்று பழையனூர்க்கும் பொளிப்பாக்கத்துக்கும் பாயும்
பழவாய்க்காலே யுற்றுத் தெற்கின்னும் இக்கால் மேனடை நீர்பா
யப்பெறுவதாக இதனை யூடறுத்து இவ்வெல்லை தானுள்ளவாே
ற தெற்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் வேம்போடு நின்ற புற்

## இருபத்து ஆறாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 661 முதல் 673 வரை)

றே யுற்று மேற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தா
னுள்ளவாறே தெற்கு னோக்கிச் சென்று கங்கனேரித் தூ
ம்பினின்றும் பாய்ந்த மேட்டு வாய்க்காலே யுற்று மேற்கின்னுமி
க்கால் மேனடைனீர் பாயப்பெறுவதாக இதனை யூடறுத்து
இவ்வெல்லை தானுள்ளவாறே தென்மேற்கு [2]னோக்கிச் செ
ன்று இவ்வெல்லையில் [3]னின்ற வேம்பே யுற்று வட

1. அமணன் வாய்க்கால் அல்லது அம்மன் வாய்க்கால் என்க. 2. நோக்கி என்க.
3. நின்ற என்க.

க்கின்னும் இதனை இடத்திட்டு இவ்வெல்லை தானுள்
ளவாறே தெற்கு னோக்கிச் சென்று கங்கன் ஏரினி
ன்றும் பழையனூர்க்குப் போன வழியே யுற்று மேற்கின்னு
ம் இவ்வழியே இவ்வெல்லை தானுள்ளவாறே தென்கிழக்கு
னோக்கிச் சென்று பொளிப்பாக்கத்துத் தென்னெல்லையில் நி
ன்ற குமரன்புளி யென்னும் புளியே யுற்று தெற்கின்னும்
இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே இவ்வழி

## இருபத்து ஆறாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 674 முதல் 687 வரை)

யே தென்கிழக்கு நோக்கிச் சென்று திரிந்து வடகிழக்கு நோக்கியுஞ்
சென்று தெற்கின்னும் இவ்வழியை யூடறுத்து இவ்வெல்லை தா
னுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் கூளிவா
ணியன் ஏரியென்னும் ஏரியே யுற்றுக் கிழக்கின்னும் இவ்வேரி
யை வலத்திட்டுப் பொளிப்பாக்கத்துக் கீழெல்லை தானுள்ளவாறே வட
க்கு நோக்கிச் சென்று பொளிபாக்கத்து மஹாதேவர் கோ
யிலின் முன்பிற்றிருமஞ்சனக் குளத்திற் கீழ்கரையே யுற்று
க் கிழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தா
னுள்ளவாறே வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையி
ல் மொட்டைக் கிணறென்னுங் கிணற்றின் மேல்கரையே யுற்றுக் கிழ
க்கின்னும் இக்கிணற்றை வலத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே
வடக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் நின்ற வேம்பே
யுற்றுக் கி
ழக்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே
கிழக்
கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில்

## இருபத்து ஏழாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 688 முதல் 700 வரை)

நொச்சிக்கழுவலென்னுஞ் செய்யின் கீழ்வரபம்பில் நின்ற புற்றே
யுற்று
த் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே
கிழ
க்கு நோக்கிச் சென்று கயற்பாக்கத்துத் தென்மேல்மூலை நின்ற புற்
றே யுற்றுத் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இக்கயற்பாக்கத்துத்
தென்னெல்
லை தானுள்ளவாறே கிழக்கு நோக்கியும் வடகிழக்கு நோக்கியுங்
கிழக்கு நோக்கி
யுஞ் சென்று இவ்வெல்லையில் நின்ற வெளுங்கு மரமே யுற்

றுத் தெற்கின்னும் இதனை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ள
ளவாறே கிழக்கு நோக்கிச் சென்று இவ்வெல்லையில் நின்
ற புற்றே யுற்று தெற்கின்னும் இதனை வலத்திட்டு இவ்வெல்லை தானு
ள்ளவாறே வடக்கு நோக்கியுங் கிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்
லையில் நின்ற திரள்வேம்பே யுற்றுக் கிழக்கின்னுந் தெற்கின்னும் இவ்
வேம்பை யிடத்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே தெற்கு நோக்கி
யுங் கிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையில் வேம்போடு நின்

## இருபத்து ஏழாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 701 முதல் 713 வரை)

ற திடலே யுற்று மேற்கின்னும் தெற்கின்னும் இத்திடலை வல
த்திட்டு இவ்வெல்லை தானுள்ளவாறே வடக்கு நோக்கியும் கிழ
க்கு நோக்கியுஞ் சென்று கயற்பாக்கத்துத் தென்கீழைமூலை
யும் மேற்படியூர்ப் படாகை பெருமூர் நாட்டுக் கூளபாடித் தென்மே
மலை மூலையுமுற்ற விடத்து அமண்பட்டிக் கிணறென்னும் கிணறே
யுற்றுக் கிழக்கின்னும் தெற்கின்னும் இக்கிணற்றை வ
லத்திட்டு இக்கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவா
றே வடகிழக்கு நோக்கியும் கிழக்கு நோக்கியுஞ் சென்று
குறுந்துறை மடுவென்னும் மடுவேயுற்றுத் தெற்கின்னும்
இது மேநடை நீர் பாயப்பெறுவதாக இதனை ஊடறுத்தே
தறி இவ்வெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்கியுங் கிழ
க்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையி லுகாயொடு நின்ற
புற்றே யுற்றுத் தெற்கின்னும் இப்புற்றை வலத்திட்டுக்

## இருபத்து எட்டாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 714 முதல் 726 வரை)

கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவாறே வடகிழக்கு நோக்
கியுங் கிழக்கு நோக்கியுஞ் சென்று இவ்வெல்லையி லுகாயோ
டு நின்ற புற்றே யுற்றுத் [1]தெற்கின்னும் மிதனை வலத்திட்டு
க் கூளபாடித் தென்னெல்லை தானுள்ளவாறே கிழக்கு நோக்
கிச் சென்று [2]முன்றுடங்கின விடமே கூடி (ற்று) ஆக இவ்விசைத்த பெரு
நான்கெல்லை யுள்ளும் அகப்பட்ட நீர்நிலனும் பு

---

தெற்கின்னும் இதனை என்க. 2. முன்தொடங்கின என்க

ன்செய்யும் ஊரும் ஊரிருக்கையும் மனையும் மனை
படப்பையும் மன்றுங் கன்றுமேய்பாழுங் குளமுங்
[1]கொட்டகமும் புற்றுந் தெற்றியும் காடும் பீடலிகையுங் களரு முவ
ரும் ஓடையும் உடைப்பும் ஆறும் ஆறிடு படுகையும் மீன்பயி
ல் பள்ளமும் தேன்பயில் பொதும்பும் மேனோக்கிய மர
முங் கீணோக்கிய கிணறும் கிடங்குங் கேணியும் ஏரியும் ஏரி
நீர் கோப்பும் உள்ளிட்டு நீர்பூசி [2]நெடும்பரம்பெறிந்து

## இருபத்து எட்டாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 727 முதல் 739 வரை)

டும்போடி யாமை தவழ்ந்ததெவ்வகைப் பட்டது [3]முண்ணிலமொழிவி
ன்றித் தேவதானமாகப் பெற்றதற்குப் பெற்ற பரிஹாரம் நாடாட்சியும்
ஊராட்சியும் வட்டிநாழியும் புதாநாழியும் வண்ணாரப் பாறையுங் கண்
ணாலக் காணமுங் குசக்காணமும் இடைப்பாட்டமுந் தறியிறையுந்
தரகுந் தட்டா
ரப்பாட்டமு மன்றுபாடும் மாவிறையுந் தீயெரியும் விற்பிடியும் வாலமஞ்
சாடியுந் நல்லாவுந் நல்லெருதுந் நாடு காவலும் ஊடு போ
க்கும் இலைக்கூலமு நீர்க்கூலியும் உல்கும் ஓடக்கூலியு முட்பட்டுக்
கோத்தொட் டுண்ணற்பால தெவ்வகைப்பட்டதுங் கோக்கொள்ளாதே
இத்தேவரே கொள்ளப் பெறுவதாகவும் இப்படி பெற்றதற்கு பெற்ற
வ்யவஸ்தை
இவ்வூர்க்கு நீர்க்கீந்தவாறு வாய்க்கால் குத்தி நீர் பாச்சப்
பெறுவதாகவும் அ
வ்வாய்க்கால் அன்னியர் குறங்கறுத்துக் குத்தவும் விலங்கடைக்கவும் கு
ற்றேத்தம் பண்ணவுங் கூடைநீரிறைக்கவும் பெறாததாகவும்
சென்னீர்ப் பொதுவினை
செய்யாததாகவும் அன்னீரடைத்துப் பாச்சப் பெறுவதாகவும் புறவூர்
நில

## இருபத்து ஒன்பதாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 740 முதல் 752 வரை)

த்தூடு போந்து இவ்வூர்க்கு நீர்பாயும் வாய்க்கால்களுங் [4]குமுழிகளும்
மேனடை நீர்பா

---

1. கொட்டகாரமும் என்க. 2. நெடும்பரம்பெறிந்து உடும்போடு என்க.
3. முன்னிலமொழிவின்றி என்க. 4. குமிழிகளும் என்க.

யவும் வாரவும் பெறுவதாகவும் இவ்வூர் நிலத்தூடு போய்ப் புறவூர்க்கு நீர்பாயு

ம் வாய்க்கால்களும் குமிழிகளும் மேனடை நீர்பாயவும் வாரவும் பெறுவதா

(க)வும் சுட்டோட்டால் மாட மாளிகை எடுக்கப்பெறுவதாகவும் துரவுகிணறு இழிச்சப்

பெறுவதாகவும் காவு தெங்கிடப் பெறுவதாகவும் மருவுந்ஷ் மனகமும் இருவே

வலியுஞ் செண்பகமுஞ் செங்கழுநீரும் மாவும் பலாவுந் தெங்கு

ங் கமுகு முள்ளிட்ட பல்லுருவிற் பயன்மரம் இடவும் நடவும் பெறு

வதாகவும் [1]பெருஞ் செக்கிடப் பெறுவதாகவும் இவ்வூர் எல்லை வட்ட

த்துள்ள தெங்கும் பனையும் ஈழவரேறப் பெறாததாகவும் இவ்வேரி நீ

ரேற்குமளவும் ஏற்றுக் கோக்குமளவுங் கோக்கத் தன்னெல்லையிற் கரை

யட்டிக் கொள்ளப்பெறுவதாகவும் இப்படிப்பட்ட வ்யவஸ்தையும் பரிஹாரமும்

பெறத் திருவாலங்காடுடைய மஹாதேவர்க்கு யாண்டு ஆறாவது

முதல் தேவதானமாகப் பிடிசூழ்ந்து படாகைநடந்து கல்லுங்கள்ளியு நாட்டி அறவோ

## இருபத்து ஒன்பதாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 753 முதல் 759 வரை)

லை செய்துகுடுத்தோம் மேல்மலைப்பழையனூர் நாட்டுப் பழையனூர் நாட்டோ

ம் நாட்டோரோடும் உடனின்று பிடி சூழ்ந்து அறவோலை செய்து குடுத்தேன் புர

வுவரி திணைக்களம் ஜயங்கொண்ட சோழமண்டலத்துப் புலியூர்க் கே

ாட்டத்து மாங்காடு நாட்டு [2]மழிசாட்டு மழிசைகிழான் மானனரியேற்றேன் இவை

என்னெழுத்தென்றும் இப்பரிசு பிடி சூழ்வித்து அறவோலை செய்வித்தேன் அ

ருமொழிதேவ வளநாட்டு வண்டாழை வேளூர் கூற்றத்துச் சிற்றாமூருடை

டயான் பெருமானம்பலத்தாடியாயான உதையமா(ர்)த்தாண்ட மூவேந்தே

---

1. பெரியசெக்கிட என்க. 2. மழிசை நாட்டு என்றிருக்கவேண்டும்

வளானேன் இவை என்னெழுத்தென்றும் இப்பரிசு பிடி நடப்பித்து
அறவோலை செய்வித்தேன் ராஜராஜ சதுர்வ்வேதி மங்கலத்து
ஸ்ரீஅருமொ
ழிதேவச்சேரி சிறுநானலூர் பாரத்வாஜி நாராயணன் சேந்தபிரான்
பட்டே
னன் இவை என்னெழுத்தென்றும் இப்பரிசு எல்லை தெரித்துக்
காட்டி தேவ
தானமாகப் பிடிசூழ்ந்து கல்லுங் கள்ளியும் நாட்டி அறவோலை செய்து
குடுத்தோ
ம் நடுவில் மலைப் பெருமூர் நாட்டுச் சிங்களாந்தகச்
சதுர்வ்வேதிமங்கலத்து ஸ

முப்பதாம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 766 முதல் 778 வரை)

பையோம் இவ்வூர்க்கரணத்தான் மத்யஸ்தன் [1]ஆயிரவனரங்கநான
சிங்களாந்தக
த்தன்மப் பிரியனேன் இவை என்னெழுத்தென்றும் இப்பரிசு எல்லை
தெரித்து
க்காட்டித் தேவதானமாகப் பிடிசூழ்ந்து கல்லுங் கள்ளியு நாட்டி
அறவோலை செ
ய்து குடுத்தோம் மேன்மலைப் பழையனூர் நாட்டுப் பழையனூர்
ஊரோ
ம் ஊரார் சொல்ல எழுதினேன் இவ்வூர்க்கரணத்தான்
சிவப்ராஹ்மணன் காச்ய
பன் பூதி திருவொற்றியூரடிகளேன் இவை என்னெழுத்தென்றும்
இப்பரிசு எல்லை தெரித்துக் காட்டித் தேவதானமாகப் பிடி சூழ்ந்து க
ல்லுங் கள்ளியுநாட்டி அறவோலை செய்து குடுதத்தோம் மேன்மலை
மேலூர்நாட்டு நித்த விநோதச் சதுர்வ்வேதி மங்கலத்து
ஸபையோம் இவ்வூர்க்
கரணத்தான் மத்த்யஸ்தன் ஆயிரவனைய்யன் பெருமானான
ஸ்ரீக்ருஷ்ணன் உத்தம
ப்பிரியனேன் இவை என்னெழுத்தென்றும் புகுந்தபடியே
வரியிலிட்டுக்
கொள்கவென்று உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டுக்
கேரளாந்தக
ச்சதுர்வ்வேதி மங்கலத்து நராக்கண்மாராயன் [2]ஜநநாதநாராந
ராஜேந்த்ர சோ

---

1. ஆயிரவன் அரங்கனான என்க. 2. ஜநநாதனாரான என்க.

## முப்பதாம் ஏட்டின் இரண்டாம் பக்கம்

(வரிகள் 779 முதல் 791 வரை)

ழ ப்ரஹ்மாதிராஜரும் அதிகாரிகள் உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணாட்டு

வயலூர் கிழவன் தத்தன் சேந்தனாரான ராஜேந்த்ர சோழ அணுக்கப் பல்லவ

ரையரும் உய்யக்கொண்டார் வளநாட்டுப் பேராவூர் நாட்டுக் காஞ்சிவாயி

லுடையான் உதைய திவாகரன் (த்)[1] தில்லையாளியாரான ராஜராஜ மூவேந்த

வேளாரும் ராஜேந்த்ர சிங்கவளநாட்டுத் திருவிந்தளூர்நாட்டுப் பரகேசரி நல்லூரு

டையார் மாணிக்கன் எடுத்த பாத(தா)ரான சோழ மூவேந்த வேளாரும்

பாண்டிகுலாசனி வளநாட்டு ஏரியூர் நாட்டு இடைக்குடையார் வெண்ணா

யில் கூத்தனாரும் ஏவப் புரவுவரி திணைக்களத்துக் கண்காணி ஜயங்

கொண்ட சோழமண்டலத்து மணையிற் கோட்டத்துப் புரிசை நாட்டுப் பிச்சிபா

க்கமுடையான் காளி ஏகாம்பரனும் புரவுவரி திணைக்களம் அருமொழிதேவ வ

ளநாட்டு ஆர்வல கூற்றத்துக் கச்சிரமுடையான் மூ[ர்]த்தி வீதிவிடங்கனும் பாண்

டிகுலாசனி வளநாட்டு மீசெங்கிளியூர்நாட்டுக் கொட்டையூர்க்கிழவன் கூவாணை

சீராளனும் இன்னாட்டுப் புறக்கிளியூர்நாட்டுக் காமதமங்கலமுடையான் காஞ்சன்

## முப்பத்தோராம் ஏட்டின் முதல் பக்கம்

(வரிகள் 792 முதல் 804 வரை)

கொண்டயனும் ஜயங்கொண்டசோழமண்டலத்துப் பனையூர்நாட்டுச் சின்றிய (ன்)

பாக்கமுடையான் குணமதனாச்சனும் வரிப்பொத்தகம் அருமொழிதேவ வளநாட்டு

ஆர்வலக்கூற்றத்துக் கைச்சிரமுடையான் பகவனங்கியும் பாண்டிகுலாசனி வளநாட்டு

இடையாற்றுநாட்டுக் காரிகுடையான் [2]குடுதாங்கியரவணையானும் முகவெட்டி ராஜராஜ வ

---

1. த் கூடுதலாக உள்ளது. 2. குடிதாங்கி என்க.

ளநாட்டுக் காந்தானநாட்டுக் கோனூருடையான் சூலபாணி யருமொழியும் ஜயங்கொ

ண்ட சோழமண்டலத்து ஆமூர்க் கோட்டத்துச் சிறுகுன்ற நாட்டுச் செம்பாக்கிழா

ன் சிங்கன் அரவணையானும் புலியூர்க்கோட்டத்துப் புலியூர் நாட்டு நுங்க

ம்பாக்கத் தரும்பாக்கிழான் [2]வைய்குந்தன் காடாடியும் ஊற்றுக்காட்டுக் கோ

ட்டத் தூற்றுக்காட்டு நாட்டு நற்றாயநல்லூர் அரையமானரங்கன்(ப்) பிசங்கனும் வரிப்பொ

த்தகக் கணக்கு ஈதூர்க் கோட்டத்துச் சாரநாட்டு உலக்கையூருடையான் ஆச்சன

ங்காடியும் வரியிலீடு பங்களநாட்டுத் தெற்கில் வகைத் தைச்சனூர் நாட்டு

ஒதல்பாடியுடையான் மூலியுதைய திவாகரனும் ஊற்றுக்காட்டுக் கோட்ட

த்து ஊற்றுக்காட்டு நாட்டுக் கறவூருடையான் மாணிக்கன் துரந்தர

<u>முப்பத்தோராம் ஏட்டின் இரண்டாம் பக்கம்</u>

(வரிகள் 805 முதல் 809 வரை)

னும் க்ஷத்ரியசிகாமணி வளநாட்டுத் திருவாரூர்க்கூற்றத்து மூங்கிற்குடை யான் தே[த]

வடி கமலனும் கீழ்முகவெட்டி ஐய்யாறன் தேவர்கண்டனும் சோமராசர் தேவ

னும் பட்டன் சீக்காவியும் வேளான்பெருமானும் செட்டிதிருவடிகளும் ஊரனேற

னும் கூத்தாடி நானூற்றுவனும் இருநூற்றைம்பதின்மன் அரட்டுறையும் இ(ரு)

ந்து யாண்டு ஏழாவது நாள் [3]நூற்றத்தைம்பத்தஞ்சினால் வரியிலிட்டது உ

---

2. வைகுந்தன் என்க. 3. நூற்றைம்பத்தைந்தினால் என்க.

# 4. ஆலங்காடு உடையார் கோயில்

திருவாலங்காடு வடாரண்யேஸ்வரர் கோயில் கிழக்கு நோக்கிய வாயிலுடன் மூன்று பிரகாரங்களைக் கொண்டு கம்பீரமாக அமைந்துள்ளது. சுமார் 6. 10 ஏக்கர் பரப்பளவு கொண்ட இக்கோயில் வளாகத்தில் பல மண்டபங்கள், சன்னதிகள் உள்ளன. மூன்றாவது பிரகாரம் தெற்கில் 599 அடி நீளமும் வடக்கில் 704 அடி நீளமும் மேற்கில் 407 அடி நீளமும் கிழக்கில் 405 அடி நீளமும் கொண்டுள்ளது.

முதல் திருச்சுற்றில் அமைந்துள்ள கருவறை 1906 இல் நடந்த திருப்பணி காரணமாகப் பழைமை இன்றி முற்றிலும் புதுப்பிக்கப்பட்டுப் புதிதான கோஷ்ட தெய்வங்களுடன் நீள் சதுரவடிவில் உள்ளது. கருவறையுடன் இடை நாழிகையும் முன்மண்டபமும் உள்ளன. முதல் திருச்சுற்றில் நான்கு சிறிய சன்னதிகள் உள்ளன. திருச்சுற்று மாளிகையில் பெரிய பெரிய தூண்களைக் காண்கிறோம். தேவியருடன் முருகர் சன்னதி, வண்டார்குழலி அம்மன் சன்னதி, சண்டிகேஸ்வரர் சன்னதி, பத்திரகாளியம்மன் சன்னதி ஆகிய சிற்றாலயங்கள் உள்ளன.

பத்திரகாளியம்மன் சிற்றாலயத்திற்கு எதிரில் இரத்தினசபை எனப்படும் நடராசர் மண்டபம் உள்ளது. நடராசர், உமையம்மன் மற்றும் காரைக்கால் அம்மையாரின் ஐம்பொன் சிலைகள் இங்குள்ளன. கோயில் புதையலில் கிடைத்த சில செப்புச் சிலைகள் சென்னை அரசு அருங்காட்சியகத்தில் பாதுகாப்பாக உள்ளன.

இரண்டாம் பிரகாரத்தின் வடகிழக்கில் அம்மன் சன்னதி நீள் சதுரவடிவில் உள்ளது. இரண்டாம் இராசாதிராசனுடைய படைத்தலைவனாக இருந்த அம்மையப்பன் பழியஞ்சின பல்லவராயன் பொருட்டுப் **பழையனூர் கூழாண்டர்** என்பவர் இச்சிற்றாலயத்தைக் கட்டி உள்ளார். இதனை இங்குள்ள சாசனமும் குறிப்பிடுகிறது. கருவறையின் சுவர்களில் கல்வெட்டுகள் இல்லாவிடினும் பிற இடங்களில் உள்ளன.

தென்கிழக்கில் உள்ள மடைப்பள்ளியும் இரண்டாம் இராசாதிராசன் காலமெனலாம். வசந்த மண்டபம் ஒன்றும் தட்சிணாமூர்த்தி சன்னதியும் நந்திமண்டபமும் இரண்டாம் பிரகாரத்தில் காண்கிறோம்.

மூன்றாம் திருச்சுற்றின் இடதுபுறம் **வல்லபை விநாயகர்** சன்னதியும் வலப்புறம் வள்ளி, தெய்வானை சமேத சுப்பிரமணியர் சன்னதியும் சிறுமண்டபம் ஒன்றும் உள்ளன. மேலும் இத் திருச்சுற்றில் சோழர்கால

நூற்றுக்கால் மண்டபமும் உள்ளது. மூன்றாம் திருச்சுற்றின் உயரம் 21 அடியாகும். அகலம் 5 1/2 அடியாகும். ஒவ்வொரு திசையில் உள்ள பிரகாரத்தின் நீளத்தை முன்பே குறிப்பிட்டுள்ளோம்.

இரண்டாம் திருச்சுற்றில் உள்ள கோபுரம் மூன்று நிலைகளுடன் விளங்க, மூன்றாம் பிரகாரத்தில் உள்ள கோபுரம் ஐந்து நிலைகளைக் கொண்டுள்ளது. கோயிலின் வெளியில் உள்ள 16 கல் மண்டபம் விஜயநகர அரசர் காலத்தில் கட்டப்பட்டது. தூண்களில் இறை உருவங்கள் காணப்படுகின்றன.

கோயிலுக்கு மேற்கில் உள்ள **சென்றாடு தீர்த்தம்** 9 ஏக்கர் பரப்பளவில் அழகிய படித்துறைகளுடன் உள்ளது. குளத்தின் நடுவில் நீராழி மண்டபமும் எட்டு மூலைகளில் நாற்கால் மண்டபங்களும் உள்ளன. இதுவே கோயில் குளமாகும். கோயில் குளத்தையொட்டி **முத்தீஸ்வரர்** கோயில் மற்றும் பத்திரகாளி அம்மன்கோயில்களைக் காணலாம்.

திருவாலங்காடு உடையார் கோயில் கோஷ்ட சிற்பங்கள், உதிரிச் சிற்பங்களாக வெவ்வேறு இடங்களில் காணப்படுகின்றன. தட்சிணாமூர்த்தி சிற்பம் ஊரின் வடக்கு மூலையில் உள்ளது. ஆலின்கீழ் அமர்ந்து சனகாதி முனிவர்களுக்கு உபதேசிக்கும் இப்பெருமான் சதுர்புஜத்துடன் உள்ளார். இது முற்காலச் சோழர் சிற்பம் எனலாம். திருவாலங்காடு / பழையனூர் சாலையில் சாட்சி **பூதேஸ்வரர்** கோயில் முன்பாகத் திறந்த வெளியில் சோழர் காலப் பைரவர் சிற்பம் ஒன்றுள்ளது. அஷ்டபுஜங்களுடன் உள்ள இவர் ஜ்வாலா பைரவராகக் காட்சி தருகிறார். நாயும் காட்டப்பட்டுள்ளது. (வரலாற்றில் திருவாலங்காடு – சு. இராசவேலுவின் நூலைக் காணவும்.)

புதையலில் கிடைத்துத் தற்போது சென்னை அரசு அருங்காட்சியகத்தில் உள்ள நடராசர் செப்புத் திருமேனி 114. 5 செ. மீ. உயரமும் 88 செ. மீ. அகலமும் 39 செ. மீ. கனமும் கொண்டதாக நான்கு திருக்கரங்களுடன் உள்ளது. ஆனந்தகுமாரசாமி போன்ற சிற்பக்கலை நிபுணர்கள் இந்த ஆடலரசனை வியந்து குறிப்பிட்டுள்ளனர். எஸ். ஆர். பாலசுப்பிரமணியன் தமது **சோழர் காலக் கோயில்கள்** என்ற ஆங்கில நூலில் இதன் நிழற்படத்தை இணைத்துள்ளார். திருவாலங்காட்டுக் கோயிலில் வைக்கப்பட்டுள்ள ஊர்த்துவ தாண்ட நடராசர் செப்புத் திருமேனியும் எழில் வாய்ந்ததாகும். பிரபையுடன் கூடிய இச்சிற்பம் எண்கரங்களுடன் உள்ளது. சென்னை அரசு அருங்காட்சியகத்தில் வைக்கப்பட்டுள்ள திருவாலங்காட்டுச் சோமாஸ்கந்தர் செப்புச் சிலையும் சோழர்காலக் கலைப்படைப்பு எனலாம். கி. பி. 9 ஆம் நூற்றாண்டு என்று காலம் குறிப்பிடலாம். முருகர் உருவம் இன்றிச் சிவன் மற்றும் உமையம்மன் உருவங்களே உள்ளன. சிவன் சுகாசன நிலையில் சதுர்புஜத்துடன் உள்ளார். பத்மாசனத்தில் உள்ள சிவனின் உயரம் 28 செ. மீ. அம்மன் உயரம் 23 செ.மீ. அம்மன் இரு கரத்துடன் உள்ளார்.

